ஸ்ரீ ரமண பகவானருளிய

# அநுவாத நூன்மாலை



பகவான் ஸ்ரீ ரமணர்

உரை

ஸ்ரீ சாது ஓம்

ஸ்ரீ ரமண பகவானருளிய

# அநுவாத நூன்மாலை

உரை: ஸ்ரீ சாது ஓம்

ஸ்ரீ அருணாசலரமண நிலையம்
11 B, மணக்குள விநாயகர் தெரு,
ஸ்ரீரமணாச்ரமம் P.O.
திருவண்ணாமலை - 606 603.
e-mail: sadhuom @ vsnl.com

2004

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# பொருளடக்கம்





ஆதிரையின் பின்னா லவதரித்த வாண்டவன்சற்
போதனையே வுண்மைப் புலம்.

(புலம் - வேதம்)

ஓம்
நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# முன்னுரை

தெய்வத் திருவாக்கை உலகம் உணர்ந்து பயன்பெற, ஈசன் தேவிக்கருளிய "தேவிகாலோத்தர ஞானாசாரவிசாரபடல"மும், குமரனுக்கருளிய "சர்வஞானோத்தர - ஆன்ம சாக்ஷாத்காரப்பிரகரண"மும், அன்பர் வேண்டத் தொகுத்தளித்த "பகவத் கீதாசார"மும், அனைவரும் பாராயணம் செய்வதற்கேற்ப ஸ்ரீ பகவான் முதலில் வெண்பா மீட்டரில் அருளி இருந்ததை "கலி வெண்பா" மீட்டரில் ஸ்ரீ பகவானே பின்னர் மாற்றி அமைத்தார்.

ஆதி சங்கரர் அருளிச்செய்த "ஆன்மபோத"மும் அன்னார் சீடர்களருளிய "குருஸ்துதி", "அத்தாமலகம்", ஆகிய அவ்வப் பெயர் கொண்ட வடமொழி நூல் அனுவாதங்களும் ஸ்ரீ பகவானால் தமிழில் அருளப்பட்டது. இவை அனைத்தும் மூன்றாம் பாகம் - செய்யுட்பகுதியாக ஸ்ரீ ரமண நூற்றிரட்டில் இடம்பெற்றுள்ளது. மேற்கூறிய அனைத்திற்கும் ஸ்ரீ சாதுஓம் அவர்களின் உரையுடன் இந்நூல் அன்னாருடைய 19வது ஆராதனை தினத்தன்று வெளியிடப்படுகிறது.

ஸ்ரீ முருகனாரின் ரமண ஞானபோதத்திலிருந்து எடுத்த ஞான ரத்தின மணிகள் ஒவ்வொரு அத்தியாயத்தின் முடிவிலும் ஸ்ரீ ரமண பாதத்தை அலங்கரிக்கின்றன.

அன்பர்கள் பொருளுணர்ந்து அநுபவித்து பிறவிப் பயனுறுவாராக.

N. சங்கரன்,
திருவண்ணாமலை

19வது ஆராதனை தினம்
17-3-2004



**பகவான் ஸ்ரீ ரமணர்**

அருள்வடிவாப் பூஜைக் கருகதையா மீசன்
குருவடிவாக் கொண்டதிருக் கோலமெனும் பாதம்.




பாரம் பரிக்கப் பரமனுளா னென்னுமனோ
தீரமே நெஞ்சத் துரன்.

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

ஸ்ரீ

## 1. தேவிகாலோத்தரம்

# ஞானாசாரவிசாரபடலம்

### பாயிரம்

(வெண்பா)

1. மன்பதைக ளுய்யும் வகையருளால் வாய்மலர்ந்தான்
மொய்ம்புடைய ஞான முனிரமணன் – இன்புதவு
மெய்ஞ்ஞானா சார விசார படலமெனு
மிஞ்ஞான நூலொன் றினிது.

2. வேதாந்த சித்தாந்த வேறுபா டில்லாத
போதாந்த மோனப் பொதுநின்றோன் – சூதலா
முத்திக்கு வித்தாய் மொழிபெயர்த் தீந்தவீ
துத்தமருள் ளத்துக் கொளி.

(வேறு)

3. அரிய வாக்கையின் மானுட வாக்கையே யாக்கை
விரியு நோன்பினி லுயிர்கொலா விரதமே விரதம்
கருதிற் றெய்வதங் கண்ணுதற் றெய்வமே தெய்வம்
தெரியிற் றேவிகா லோத்தரத் தேற்றமே தேற்றம்.

### மங்கலம்

(கலிவெண்பா)

தேவன் திருவாயால் தேவி செவிபுகட்டும்
தேவிகா லோத்தரம் தேர்ஞான – மாவிளை(வு)ஆம்
ஆனந்த வான்அமுத மானஅருள் அத்துவித
மோனக் கரிஅகமே முன்...

தேர் – நமக்குத் தெரிந்து சொல்கின்ற; வானமுதம் – தேவாமிர்தம்; கரி –சர்வசாக்ஷி, யானை, பிள்ளையார்; அகமே முன் – மனத்தில் தியானிப்போம்.

சிவபிரான் தனது திருவாயால் பார்வதி தேவியின் செவியில் புகட்டிய இந்த 'தேவிகாலோத்தரம்' என்னும் நூலால் தேறப்பெறுகின்ற ஆன்ம ஞானத்தால் விளையும் பேரானந்தத் தேவாமிர்தமான அத்வைத அருள்மோனமே வடிவான கணபதியை இதயத்தில் தியானிப்போம்.

## நூல்

### தேவி:–

*...அம்மை – தானும்*

1. அனைவர்க்கு மேமுத்திக் காகஅும் முத்தி
தனைஉறும்மார்க் கக்காட்சி தானாம் -அனையபர
ஞானம்ஆ சாரமே நாடும்எனக் (கு)உன்அருளால்
வானவர் ஈசா! வழுத்து.

காட்சிதானாம் – காணக்கூடிய; அனைய – அந்த; வழுத்து – சொல்லுங்கள்.

தேவதேவனான சிவபிரானே! முத்தியை அடையும் வழியைக் காண்பதற்கு அவசியமான அந்த பரஞானத்தையும் அதற்கு அனுஷ்டிக்க வேண்டிய ஆசாரத்தையும் உன்னிடமிருந்து அறிய வேண்டுகின்ற எனக்கு, எல்லா உயிர்களும் [illegible]த்தி பெறுவதற்காக உனது பேரருளால் உபதேசிப்பாயாக [illegible]தேவி தானும் வேண்டிக் கேட்டார்.

### ஈசன்:–

*...என்ன – ஞானசிவன்*

2. யாதினால் ஞானியர்கள் யாதோர் களங்கமும்இல்
ஓ(து)அரிய முத்திதனை உற்றிடுவார் – மாதரசே!
ஞானஆ சாரங்கள் நான்உனக்(கு) இன்(று)உரைப்பன்
[illegible]ம்உற யாவருமே நன்கு...

தேவி அவ்வாறு கேட்கவே, ஞான சொரூபமான சிவபிரான், கீழ்க்கண்டவாறு உபதேசிக்க ஆரம்பித்தார். மாதரசே! எந்த ஞானத்தையும் ஆசாரங்களையும் அனுஷ்டிப்பதால், அறிவுடையோர் யாதொரு குற்றமில்லாததும் அடைவதற்கு அரியதாகச் சொல்லப்படுவதுமான முத்தியைப் பெறுவார்களோ, அவற்றைச் செவ்வையாக இன்று நான் உனக்கு சகல ஜீவர்களும் ஞானத்தை அடையும் வண்ணம் உபதேசிக்கின்றேன்.

*... இந்த — ஊனம் அறு(ம்)*

3. ஞானம்தான் யாவர்க்கும் நன்முகத்தோய் இக்கால
ஞானத்தால் உள்ளின் அணுகாதோ — ஆன
கணக்(கு)இலாக் கோடிநூல் கற்றாலும் அன்னோர்க்கு
உணர்(வு)உதியா(து) என்றே உணர்*வாய் — துணிவுஈ(து)*

கால - காலோத்தர

நல்ல முகத்தையுடைய பார்வதீ! (பக்குவ ஆன்மாக்களுக்குப் பரிபாக காலத்தில் உபதேசிக்கத் தகுந்த) இந்த காலோத்தர ஞானத்தால் எவருக்கு இவ் அழிவில்லாத ஆன்ம ஞானம் உள்ளத்தில் உதிக்காதோ, அவருக்கு கணக்கில்லாமல் விரிந்துள்ள கோடிக் கணக்கான சாஸ்திரங்களைக் கற்றாலும் மெய்யுணர்வு உண்டாகாது என்று தெரிந்து கொள்வாயாக. இதுவே திண்ணம்.

4. அதனாலே நிர்ப்பயனாய் ஐயம்எனல் இன்றி
எதனிலுமே இச்சை இலனாய் — இதயத்தில்
நல்சிரத்தை யோடு நிராகுலனாய் ஞானத்தில்
உற்சாகம் உள்ளோனாய் உற்று...

*... எனதுஎன் — பற்றாம்*

5. மமதைஇன் றிக்கருணை மன்னிப்பூ தங்க(ள்)
தமக்கு எல்லா மேஅபயம் தந்து — முமுட்சுவாய்
யோகத்தில் தத்பரனாய் ஓதிக்கா லோத்தரத்தின்
ஏகவழி நிற்க இசைந்து...

மன்னி — உள்ளவனாய்; ஓதி — படித்து அறிந்து; இசைந்து — விருப்பத்துடன்.

மேற்கூறிய காரணத்தால் (சாதகனானவன்) இந்த காலோத்தர நூலை வாசித்து, இதில் காட்டிய ஒரே வழியில் மட்டும் நிற்க விரும்பியவனாய், (மற்ற வழிகளை விடுவதற்கு) சந்தேகமோ பயமோ சிறிதும் அற்றவனாய், மோக்ஷத்தையடைய இச்சை யுடையவனாய், மற்ற எதிலுமே ஆசையற்றவனாய், கவலையற்று ஞானாப்பியாசம் செய்ய உள்ளத்தில் மிகுந்த சிரத்தையோடு உற்சாகமும் உடையவனாய், எப்பொருளிலும் 'எனது' என்கின்ற பற்றாகிய மமகாரம் இல்லாதவனாய், சகல ஜீவர்களிடத்துங் கருணை கொண்டு அவை யாதொன்றுக்கும் அச்சங் கொடுக்காதவனாய் இருந்து கொண்டு இந்நூலில் கூறியபடி சாதனைசெய்வதில் கருத்தூன்றியவனாய் இருப்பானாக.

*... புறம் – போகா*

6. அவன்தானே நான்முகனும் அச்சிவனும் மாலும்
அவன்தேவர் கோன்குகனும் ஆவன் – அவன்தான்
அகில சுரர்குருவும் ஆவன்மா யோகி
அகில தபோதனனும் ஆம்*ஏ...*

*... – அகிலம் உணர்*

7. பண்டிதனும் மாபுருடன் பாரமார்த் தப்பேறு
கொண்டவனும் அன்னவனே கூறுங்கால் – மண்டிஉழல்
வாயுசமம் சித்தம் வலித்(து)எவனால் நிச்சலன
மாய்இருத்தப் பெற்றிடும் ஆம்*சித்தம் – தூயோய்!*

வலித்து – இழுத்து

திரண்டு வீசும் காற்றைப் போல அலையும் மனமானது எவனால் இழுத்துக் கட்டப்பட்டுச் சிறிதும் சலனமற்ற நிலையில் இருத்தப் பெறுமோ, பகிர்முகம் உறாத அவனே, ஆராய்ந்து பார்க்குமிடத்தில், பிரும்மாவும், சிவபிரானும், திருமாலும், தேவேந்திரனும், குகனும் ஆவான். அவனே சகல தேவர்களின் குருவுமாவான். அவனே மகா யோகியும், சகல தவச் செல்வத்தையும் பெற்றவனும் ஆவான். பரிசுத்த உள்ளமுற்ற அவனே சர்வஞ்ஞனாகிய ஞான பண்டிதன்; மகாபுருஷன். மெய்ஞ்ஞானலாபத்தைப் பெற்றவனும் அவனே என்று கூற வேண்டும்.

8. அதுதானே முத்திக்(கு) உபாயம் அதுவே
சத்உபாயர் சார்குணம் தானும் – அதுவே
பிரஞ்ஞை திரத்தன்மை பின்னும் அதுவே
தருமம் விவேகியர்க்குத் தான்*மற்(று)...*

*... – அரிதாம்*

9. அதுவே நல்தீர்த்தம் அதுவேயாம் தானம்
அதுவே தவம்ஆகும் ஐயம் - இதில்இல்லை
எவ்உபா யத்தினா லேவாயு வில்சலன
இவ்உளம்கட் டப்படுமோ எண்*ணுங்கால்...*

வாயுவில் – காற்றைவிட

ஆராயுமிடத்தில் வாயுவை விட அதிகமாக அலையும் இம் மனமானது எந்த உபாயத்தினால் நிலைபெறக் கட்டப்படுமோ, அதுதான் மோக்ஷமடைதற்கு மார்க்கமாகும், அதுதான் சத்பொருளை நாடுவோர்

அனுஷ்டிக்க வேண்டிய நல்ல குணமாகும். அதுதான் மெய்யான பிரஞ்ஞையும், உள்ளத்தின் ஸ்திரத் தன்மையும் ஆகும். மேலும் அதுவே பக்குவிகளான விவேகிகளின் ஸ்வதர்மமுமாகும். மறுபடியும் அருமையான அதுவே நல்ல தீர்த்தமும் தானமும் தவமும் ஆகும். இதில் சந்தேகமே யில்லை என்று அறிந்து கொள்.

*... – எவ்விதமும்*

10. சித்தம் சிறி(து)அசையச் சம்சாரம்; நிச்சலமாச்
சித்த(ம்)நிலை நிற்கமுத்தி; சித்தம்இது;– சித்தம்
திரம்ஆக்க வேவேண்டும் ஆதலினால் தீமான்
பரமாம் பிரஞ்ஞையினால் பார்.

மனம் எவ்விதத்திலும் சிறிது அசைந்தாலும் அதுவே சம்சாரமாகும். அலையாமல் மனம் தன்னிலையில் நின்றால் அதுவே முத்தியாகும். இதுவே தீர்ந்த நிச்சயம். ஆகையால் அறிவுடையோன் ஆன்மவுணர்வாகிய தன்னாட்டத்தால் மனதை (சலனமற்றதாக) நிலைபெறச் செய்ய வேண்டும் என்று அறிவாயாக.

*அஃது – ஒருமை உறும்*

11. அந்தஏ காந்தத்(து) அடையும் சுகம்அதுவே
அந்தம்இலா அத்தியந்த ஆனந்தம் - எந்தக்
கருமமும்இல் அப்பரத்தில் கற்றவன்ஆம் ஆர்தான்
இரமித் திடான்நீ இசைப்பாய்.

அந்த ஏகாந்தம் – நிச்சல ஸ்திதி

(சித்தம் சலனமற்று நிலைபெற்றிருக்கும்) அந்த ஒருநிலைப்பட்டு தான் மாத்திரம் மிஞ்சி நிற்கும் நிலையில் உணரப்படும் சுகம் எதுவோ அதுவே சிறந்ததும் அழிவற்றதுமான பேரானந்தமாகும். எந்தத் தொழிலும் (கர்மமும்) இல்லாத அந்த பரநிலையில், அறிவுடையோன் எவன்தான் ஆழ்ந்து சுகியாமல் இருப்பான்?. நீ சொல்க.

*... – பிரிவாம்*

12. விடயஞா னம்போய் விரிநிட் களமாய்
விடயம்இல் ஞானபரன் வீடும் – அடைய
அவாஇலனே னும்தீரன் அட்சயம்ஆம் மோட்சம்
தவா(து)உற் றிடுவனே தான்ஏ.

தவாது – தவறாமல்; அவாவிலனேனும் – ஆசையில்லாதவனாயினும்.

பிரித்துணரும் எல்லாவித விஷய ஞானமும் அற்று சர்வ விஷயங்களும் அற்றதும், உருவற்றதுமான வியாபக நிலையைப் பெற்ற பரமஞானியாகிய அந்த தீரன் மோக்ஷத்தைக் கூட அடைய விருப்பமில்லாதவனாய் இருப்பினும், அவ் அழிவற்ற மோக்ஷத்தைத் தவறாது தானாகவே அடைந்தவனாகிறான்.

*... – சிவையே!*

**13. இருக்கின்றேன் என்கலையோ(டு) ஏய்ந்தசை தன்ய
உருசத்தி அஃதால் ஒளிரும் – பிரபஞ்சம்
சர்வம்சத் தித்யானம் சார்நிட் களஞானம்
சர்வம் நிராலம்பம் தான்...**

என் – என்னும்

சிவையே! "இருக்கின்றேன்" என்ற ஓர் அம்சத்துடன் மாத்திரம் விளங்கும் சைதன்ய சொரூபமே சக்தி யெனப்படுவதாம். சர்வ பிரபஞ்சமும் அந்தச் சக்தியின் நினைவோடு (சங்கற்பத்தோடு) கூடிய நிலையில் விளங்குவனவாம், அந்தச் சக்தியானது எல்லா பற்றுக்களும் அற்று விளங்கும் நிலையே அடைய வேண்டிய நிட்கள ஞானம் (உருவற்ற நிலை) (என்று சென்ற பாடலில் அறிவிக்கப் பட்டது.)

*அயலாச் – சர்வம் இலா*

**14. அத்துவிதம் ஆகி அறி(வு)ஒளி மாத்திரமாய்
எத்தும் அகம்அமிசத்(து) எச்சூன்யம் – முத்திக்கு
வித்துஅதுவே என்று விளம்பும் பரயோகத்(து)
உய்த்திடுவ தாகத்தான் உற்(று)...**

எத்தும் – எய்தப்படும், அடையப்படும்; உற்று – சேர்த்து, சேர்ப்பித்து; உய்த்திடுவதாக – உய்த்து விடுவதாக.

அன்னியமாய்த் தோன்றும் சகலமுமற்று, ஏகமதாய் 'நான்' என்னும் அறிவொளியின் அம்சத்தோடு மாத்திரம் (சென்ற பாடலில் குறித்தபடி 'இருக்கின்றேன்' என்ற கலையாக) எந்த மகா சூன்ய நிலை எய்தப் படுகின்றதோ, அதுவே பரம் பொருளைக் கூட்டுவிக்கும் மார்க்கத்தில் ஜீவனைச் சேர்த்து உய்விப்பதால் முத்தியை விளைவிக்கும் விதையாகும் என்று பெரியோர்கள் சொல்வர்.

*... அகத்தை – நத்தாது*

**15. சக்கரங்கள் நாடிகள் சார்பதும தேவதை**
**அக்கரங்கள் மண்டல மூர்த்த ஆதிஆம் – மிக்க இவை**
**ஓர்போதும் அற்பமுமே உன்னி யிடத்தகா**
**நேர்மார்க்கம் ஆம்இதனை நீத்து...**

சக்கரங்கள் – ஷடாதராங்கள்; சார் – சேர்ந்தார்; பதும – தாமரை.

இவ்வாறு தன்னில் நிற்க விரும்பாது முத்திக்கு நேர்வழியாகிய (மேற்கூறிய 'நான்' என்ற அறிவொளியை நாடும்) இச்சாதனையை விட்டுவிட்டு, உடலில் கற்பிக்கப்படும் ஷட் சக்கரங்களையும் (ஆறாதாரங்களையும்), (இடைபிங்களை, சுஷும்னை என்னும்) நாடிகளையும், அச் சக்கரங்களிலுள்ள தாமரை மலர்களில் வீற்றிருப்பதாகக் கற்பிக்கப்படும் கணபதி முதலிய தேவதைகளையும், அவர்களுக்கான மந்திர அக்ஷரங்களையும், (சூரிய, சந்திர, அக்கினி) மண்டலங்களையும், இன்னும் நானாவித வடிவங்களையும் தியானித்துச் செய்ய வேண்டியதாய் எண்ணில்லாமல் விரிந்துள்ள இதர மார்க்கங்கள் எவற்றையும் ஒரு பொழுதும் கொஞ்சமும் கருதவே கூடாது.

*... உயிரின் – ஓர்யாப்பாம்*

**16. கும்பகமும் மந்திரக் கூட்டம் உயிர்ச்சலனத்**
**தம்பனம்முன் னாயவாம் தாரணைதாம் – என்பவைகள்**
**அத்தனையும் ஆசரிக்க வேண்டாவாம் அட்சயம்ஆம்**
**முத்திஇச்சை உள்ளோர் முயன்று...**

முன்னாய – முதலிய.

அழிவற்ற முத்தியை அடையும் விருப்பமுள்ள முமுக்ஷுக்கள், கணக்கற்ற மந்திரங்களையும், பிராண சலனத்தை நிறுத்தும் கும்பகத்தை முதலாகக் கொண்ட தாரணை வகைகள் எனப்படுபவையான மார்க்கங்கள் அத்தனையையும் மிகப் பிரயாசைப்பட்டு அனுஷ்டிப்பது வேண்டவே வேணடாம்.

*... என்றும் – சித்தம்அதால்*

**17. பூசை வணக்கம் புரிசெபம் சிந்தனம்**
**ஆசரிப்ப(து) ஏதுமே அங்(கு)இல்லை – பேசும்அது**
**கேவலம் ஞேயம்என்று கேள்இனிக் கிஞ்சில்அன்ய**
**மாஅறிய வேண்டுவ(து) இன்(று)ஆம்...**

ஞேயம் – அறிய வேண்டியது

அறிய வேண்டியது ஏக பரவஸ்துவாய் புகழப்படும் (சென்ற பாடலில் குறித்தபடி "அகம் அம்சம்") ஒன்றே; உனக்கு அன்னியமாக அறிய வேண்டிய வஸ்து வேறெதுவும் அற்பமும் இல்லை என்று (நீ என்னிடம்) கேட்டு அறிந்து கொள்வாயாக. அவ் வழிவற்ற முத்தி எப்பொழுதும் பெறப்பட்டதுள்ளதாகையால், நீ பூஜையென்றும், வணக்கம் புரிதல் என்றும், ஜபம் செய்வது என்றும், தியானம் செய்வது என்றும் அனுஷ்டிக்க வேண்டிய எக் காரியங்களும் அங்கு இல்லவே யில்லை.

*... சலனம் – மேவி*

**18. வெளிவிடயம் பற்றும் விரிமனத்தார்க்(கு) என்றும்**
**விளையும் வெகுபந்த ஏது – வெளியே**
**திரியும்சித் தத்தைத் திருப்பநிலை உற்றே**
**ஒருதுனிமே வார்உலகில் ஓர்*வாய்...***

துனி – துன்பம், அதிர்ச்சி.

சலனத்தை விரும்பி (புலன்களால் உணரப்படும்) வெளி விஷயங்களைப் பற்றுகின்ற புறமுக மனத்தை உடையவர்களுக்கு பந்தத்தைக் கொடுக்கும் ஹேதுக்கள் எப்போதும் எண்ணற்றவையாய்ப் பெருகிக் கொண்டே போகும். ஆனால் வெளியில் அலையும் மனத்தை (தன்னை நோக்கி)த் திருப்புவோர், ஆன்ம நிலையுறுவதால், உலக வாழ்வில் ஒரு துன்பமும் அடைய மாட்டார்கள் என்று அறிவாயாக.

*... – நிருமலமாய்*

**19. உள்வெளிமேல் கீழ்நடுதிக்(கு) ஓர்சிறிதும் இன்றியே**
**உள்ளஉரு எல்லாமாய் ஓர்உருவும் – இல்லதாய்த்**
**தான்தனக்கே வேத்தியமாய்த் தானே இலங்கிடுமால்**
**பூன்றமாம் ஒன்று புணர்*ந்திடுக...***

புணர் – அடைவாயாக; இலங்கிடும் – விளங்கும்.

பரிபூர்ணமாயுள்ள ஏகவஸ்து மலமற்றதாயும், உள்வெளி, மேல்-கீழ்-நடு, திசை நான்கு ஆகிய இடபேதங்கள் ஒரு சிறிதும் இல்லாமல் எங்கும் வியாபித்ததாய், காணப்படுகின்ற பிரபஞ்சத்திலுள்ள எல்லாப்பொருள்களின் உருவமாயும், அதே சமயத்தில் தனக்கென்று ஒருவிதமான உருவமும் இல்லாததாயும் தன் இருப்பு (தன்னைத் தவிர வேறொருவராலுமே அறிய முடியாதபடி) தனக்கு மாத்திரமே

அறியப்படக்கூடியதாயும், பிற சாதனங்கள் இன்றி தன்னைத் தானே ஒளிர்வித்துக் கொள்கின்றது. அந்தப் பரம்பொருளை நீ சேர்ந்திடுக.

... – *ஊன்றிமனம்*

**20. எவ்எதன் திட்டியால் எவ்உயிர்செய் யும்தொழில்கள்**
**அவ்உயிர்க்(கு) அக்கதிஉண்(டு) ஆதலால் – எவ்வம்**
**அறாஅவை சாரா(து) அயல்திட்டி அற்(று)உள்**
**நிராலோகம் தானே நினை*வாய்*...**

எவ்வம் – குற்றம்; அறா – நீங்காத, உள்ள; திட்டியால் – நோக்கத்தோடு; எவ்வெதன் – எந்தெந்த; திட்டி – திருஷ்டி.

மன உறுதியுடன் எந்தெந்த வுயிர்கள் எந்தெந்த நோக்கத்தோடு கர்மங்கள் புரிகின்றனவோ அந்தந்த உயிர்க்கு அந்தந்த கதிகளே கிட்டுமாதலால் குற்றம் நிறைந்த அந்த கதிகளை யெல்லாம் விரும்பி அடையாமல் (அக் கர்மங்களில் பிரவிருத்திக்காமல்) அன்னிய நோக்கம் எதுவும் அற்று பார்வைக்கு எட்டாததான ஆன்மாவாகிய தன்னையே உண்முகப்பட்டு நாடுவாயாக.

... – *ஒரேமெய்யால்*

**21. ஏது பலம்கருமம் இல்லை சுபாவத்தில்**
**ஓதும் இவையாவும் உண்மைஅல – பேத**
**உலகமும் இல்லை உலகப்பற்(று) உள்ள**
**இலவுகிகன் தானும் இலை*யே*...**

ஏது – ஹேது; பேத – அன்னிய; இலவுகிகன் – லௌகீகன், ஜீவன்; சுபாவத்தில் – சுபாவஸ்திதியில்.

உள்ளபொருள் ஏகமேயாதலால் சுபாவஸ்திதியாகிய ஆன்மநிலையில் கர்மங்களோ, அவைகட்குக் காரணங்களோ, அல்லது அவைகட்கு பலன்களோ இவ்வாறு சொல்லப்படுபவை யாவும் பொய்யே; இல்லவே இல்லை. இந்நிலையில் ஆன்மாவுக்கு அன்னியமாக பிரபஞ்சமும் இல்லை. உலக ஆசையால் பந்தப்பட்டுள்ள லௌகீகன் (ஜீவன்) ஒருவனும் இல்லையாம்.

... – *நிலவும்*

**22. நிராலம்பம் இந்த நிகிலமும் அன்றி**
**நிராலம்பத் தால்ஒளிரா நிற்ப – நிராலம்ப**
**மாகச்செய்(து) இந்த அனைத்து(ம்) நிராலம்பம்**
**ஆகிடுவன் என்றே அறி...**

இவை (இந்தப் பிரபஞ்சம்) முழுவதும் தனக்கு ஒரு பற்றுக்கோடும் அற்ற நிலைத்திருக்கும் பரவஸ்துவே யாகும். மேலும் அந்த நிராலம்ப வஸ்துவாலேயே இப் பிரபஞ்சம் எல்லாம் இருப்புக் கொள்கின்றன. ஞானியானவன் இவை அனைத்தையும் நிராலம்ப வஸ்துவாகவே கண்டு தானும் அந்நிராலம்ப வஸ்துவாகவே விளங்குவான் என்று அறிவாயாக.

*... உரு அற்று – ஏக*

**23. வியோமவடி(வு) ஆகும் வியாபகமா சூன்யம்**
**யா(து)ஒருவன் பாவித் திடானேல் – யாண்டும்அவன்**
**பீசகோ சக்கிருமி போலப் பிரபஞ்ச**
**பாசசமு சாரியாம் பார்...**

யாதொருவன் – எவனொருவன்; பீசகோசக்கிருமி – பட்டுப்புழு.

உருவமில்லாது ஏகமேயாகிய ("நான் இருக்கின்றேன்") என்னும் சிதாகாச வடிவாக எங்கும் வியாபித்ததாயும் விளங்குகின்ற மகா சூன்யத்தை (சகலமும் அற்றுத் தான் மாத்திரமாய் மிஞ்சி நிற்கும் நிலையை) எவனொருவன் தியானிப்பதில்லையோ அவன், தன் பட்டு நூலால் சுற்றித் தன்னைத்தானே பந்தப்படுத்தி கொள்ளும் பட்டுப்புழுவைப் போல எப்பொழுதும் பிரபஞ்ச எண்ணங்களை விருத்தி செய்து அதனால் பந்தப்பட்டுப் (ஜனனமரணப்) போக்கு வரத்து உடையவனாய்த் துன்புறுவான். தெரிந்து கொள்க.

*...நான்காப் – பேசும்*

**24. அகிலம்ஆம் யோனியிலும் ஆர்உயிர்யா விற்கும்**
**மிகக்கிலே சம்பொருந்தும் மேன்மேல் – அகிலக்**
**கிலேசமுமே நீக்குதற்குக் கேள்மாசூன் யத்தை**
**இலேசம்அறாச் சிந்தை இயற்று...**

மகா சூன்யம் – மற்ற பொருள்களின் அபாவ நிலை; இலேசம் அறா – கிஞ்சித்தும் நீங்காதபடி; ஆர் – பொருந்திய.

அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம் என்னும் நால்வகையாய்ச் சொல்லப்படும் எல்லாவிதமான படைப்பினங்களைச் சேர்ந்த உயிர்கள் யாவற்றிற்கும் மேலும் மேலும் அதிகரித்த துன்பங்களே விளைந்து கொண்டிருக்கும். (இதுவே சிருஷ்டியின் நியமமாதலால்) அவ்வெல்லாவித துன்பங்களையும் நீ நீக்க விரும்பினால் (நான் சொல்லும் உபாயத்தைக்) கேட்பாயாக. அன்னிய வஸ்துக்கள் யாவும்

அற்றுப் போகும் மகா சூன்ய நிலையை (தான் மாத்திரமாக மிஞ்சி நிற்கும் நிலையை) சிறிதும் இடைவிடாமல் தியானிப்பாயாக.

... – *கிலேசம்இல் மெய்ஞ்*

25. **ஞானஉத யப்பொருட்டே நல்கிரியை சத்சரியை**
**தாம்நவிலப் பட்டதால் தான்ஒன்றை – மானதத்தின்**
**உள்கருதும் சாலம்ப யோகம் தனையும்ஓரீ**
**நிட்பிரபஞ் சத்தே நிலை*நிற்பாய்*...**

சரியை – ஒழுக்கம்; ஓரீ – விட்டுவிட்டு (ஒருவுதல்).

(சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட நான்கு நெறிகளுள்) முடிவு நிலையாகிய துன்பம் சிறுதுமற்ற மெய்ஞ் ஞானம் உதிக்கும் பொருட்டே நல்ல கிரியை, நல்ல சரியை நெறியும் அனுஷ்டிக்கும்படி கூறப்பட்டு இருக்கின்றன. ஆகையால் (அவ்விரண்டினோடும்) ஒரு மந்திரம், சக்கரம், மூர்த்தி ஆகிய ஏதேனும் ஒன்றை மனத்தினுள் பற்றிக்கொண்டு தியானிக்கும் மூன்றாவது மார்க்கமாகிய யோகத்தையும் விட்டுவிட்டு, நிஷ்பிரபஞ்சம் எனப்படும் மேற்கூறிய மகா சூன்யத்திலேயே நிலைத்து இருப்பாயாக.

... – *திட்பமாய்*

26. **பாதலம்முன் பாகப் பகர்சத்தி அந்தமா**
**ஆதரப் பட்டஇவை அத்தனையும் – வீதல் உறும்**
**சூனியம்ஆம் அத்திரம்கொண்(டு) ஆராலே சூரர்அவர்**
**சூனிய ஞானியராச் சுட்டு*று*...**

பாதலம் – பாதாள உலகம்; சத்தி – சத்திய லோகம்; ஆதரப்பட்ட – விரும்பப்பட்ட; வீதல் உறும் - அழியும்; அத்திரம் - அஸ்திரம்.

பாதாளம் முதல் சத்தியலோகம் ஈறாகச் சொல்லப்பட்டுள்ளதும். ஜீவர்களால் விரும்பப்பட்டதுமான அனைத்து உலகங்களுமாம் இப்பிரபஞ்சம் யார் ஒருவரால் மேற்கூறிய மகாசூன்யமாகிய திடமான அஸ்திரத்தால் (ஆன்ம நாட்டத்தால் – தன்னாட்டத்தால்) ஒழிக்கப்படுகின்றதோ. அந்தச் சூரரை சூனியத்தையும் அறியும் (நிர்விஷய) ஞானியர் என்று நீ தெரிந்து கொள்.

*... ஓர் — ஈன*

27. விடயத்தில் ஆசை விடாதே குரங்கை
விடச்சலிசித் தத்தை விடாது — மடக்கிச்
சருவகுன் யப்பதத்தில் தாபிக்க அஃதால்
நிருவாணம் உற்றிடுவன் நேர்*ஏ...*

விடயம் — விஷயம்; சலி — அலையும்; நேர் — நேராகவே.

ஒருவன் இழிவுள்ள விஷயங்களில் ஆசையைச் செலுத்தாமல் குரங்கை விட அதிகமாய் அலைகின்ற மனத்தை இடைவிடாது திருப்பி மேற்கூறிய நிஷ்பிரபஞ்சத் தன்னிலையில் நிலைநிறுத்துவானாக. அவ்வாறு செய்வதால் அவன் நேராக முத்தியடைகிறான்.

(விஷயங்களில் ஆசை நீங்காத காரணத்தால் குரங்கைவிட அதிகமாக அலைகின்ற மனத்தை .......... முக்தியடைகிறான் என்றும் பொருள் கொள்ளலாம்.)

*... — பரமாய்*

28. அகிலதத்து வத்தும் அபின்னமாய் ஆகம்
அகம்என் பதற்(கு)அனியம் ஆகி — அகமெய்ப்
பொருளுக்(கு) அபின்னமாம் பூரணசித் எங்கும்
பொருந்தும்முகம் உள்ள பொருள்*தான்...*

ஆகம் — உடம்பு; அகம் — நான்; எங்கும் பொருந்தும் முகம் உள்ள — எங்கும் வியாபித்து விளங்கும்.

பரம்பொருளாய், எல்லா தத்துவங்களிலும் வேறறக் கலந்து நிற்பதாய், “இந்த தேகமே நான்” என்னும் அகங்காரத்திற்கு வேறாகியதாய், “நான்” என்னும் சொல்லின் உண்மைப் பொருளான ஆன்மாவினும் அன்னியமாகாததாய் உள்ள பரிபூர்ண ஞான சொரூபம் எதுவோ அதுவே எங்கும் வியாபித்து விளங்கும் பரம்பொருள் “தான்” ஆகும்.

*... — தெரியும் அஃது*

29. ஆகாயம் போல அகிலத்(து) அகம்புறமும்
ஏகஅங்க மாய்உருவம் இன்றிய(து)ஆம் — ஆகா
பரமானந் தத்துள் படிந்தவர் அன்பே!அப்
பரமானந் தப்படிவர் பாராய்...

படிவர் - வடிவமாவர்.

அன்புள்ள பார்வதியே! தெரிகின்ற அந்தப் பரம்பொருளானது ஆகாயத்தைப் போல உருவமற்றதாய் எல்லாப் பொருள்களின் உள்ளும் புறமும் வியாபித்துள்ள ஏக வஸ்துவாகும். அந்தப் பரமானந்த வஸ்துவில் தோய்ந்தவர் அந்தப் பரமானந்த வடிவமே யாவர், பார், இது என்ன ஆச்சரியம்!

*... – சருவலுறும்*

**30. இந்தனம்இல் லாஎரிதான் எவ்வண்ணம் தான்தானே**
**மந்தமாய்ச் சாந்தியினை மன்னுமோ – அந்தவிதம்**
**பற்றுபொருள் அற்றால் பரந்தமன மும்சாந்தி**
**உற்றுவிடும் தானாக ஓய்ந்து...**

சருவல் உறும் – சரிந்து குறைந்து வரும்; எரி – நெருப்பு; இந்தனம் – விறகு.

குறைந்து வரும் நெருப்பு விறகில்லாமல் போனால் தனக்குத் தானே எப்படி எரிதல் மேலும் குறைந்து அணைந்து விடுமோ, அப்படியே விரிந்த மனமும் தான் ஆசையால் பற்றிக் கொள்ளத் தக்க பொருள்கள் இல்லாமற் போகுமிடத்து தானாகவே சலனமற்று சாந்தி யடைந்து விடும்.

*... அதனால் – பற்ற(ல்) உறும்*

**31. மோகிகை மாயையே மூர்ச்சிகை சொப்பனம்**
**ஆகிய இந்நான்(கு) அவத்தைகளும் - ஏக**
**சுழுத்தியொடு சாக்கிரம் சொல்லும்இவை எல்லாம்**
**ஒழித்துவிட வேண்டும் உணர்*வாய்...***

பற்றல் உறும் - வந்து கௌவுகின்ற.

ஆகையால் வந்து கௌவுகின்ற (அவஸ்தைகளான) மோகமடைதல், மயங்குதல், மூர்ச்சை அடைதல், கனவு காணல் என்கிற இந்த நான்கு அவஸ்தைகளோடும். இருமை தோன்றாத இருள் மயமான தூக்கத்தையும், நனவையும் இன்னும் இவை போன்றே சொல்லப்படும் எல்லா அவஸ்தைகளையும் ஒழித்துவிட வேண்டும் என்று உணர்வாயாக.

*... – அழுத்தமாம்*

**32. தேகம்இதில் சூக்குமமாச் சேரும்உயிர் சித்தபுத்தி
ஆகும்அகங் காரம்இவை யாவுக்கும் – ஏகசித்(து)
அன்னியமே என்றுசிந்தை ஆற்றவே அச்சித்தை
மன்னிடுவான் என்று மதி*த்திடுநீ*...**

அழுத்தம் – ஸ்தூலம்.

ஸ்தூலமான இந்த தேகத்தில் சூக்ஷ்மமாகச் சேர்ந்திருக்கின்ற பிராணன், சித்தம், புத்தி, அகங்காரம் ஆகிய இவை எல்லாவற்றுக்கும் அன்னியமானதே அந்த ஏகமாய் இருக்கும் ('நான்'என்னும்) சித் சொரூபம் என்று தியானிப்பதால் ஒருவன் அந்த சித் சொரூபத்தையே அடைவான் என்று நீ அறிந்து கொள்.

*... – பின்னமாம்*

**33. நித்திரையி னாலும் நினை(வு)ஆதி யாலும்நிதம்
சித்தம்தான் மூடமிகச் சீர்அழியும் – சித்தம்இதை
எத்தனத்தா லேஉணர்த்தி ஏகாமல் தன்நிலையில்
வைத்திடுவாய் மேல்மேலும் வை...**

ஏகாமல் – வேறெங்கும் போகாமல்.

சாதனை வேளைகளில் குறைபாடுள்ள இருவேறு அவஸ்தைகளான தூக்கத்தி (கேவலத்தி)னாலும், எண்ணம் முதலியவை நிறைந்த நனவு கனவுகளாலும் (சகளத்தினாலும்) மனமானது எப்போதும் அறியாமை மிகுந்து கேடடையும், ஆகையால் (தூக்கமுறும்பொழுது) இம்மனத்தை பிரயத்தனத்தால் சுய பிரஞ்ஞை அடையும்படி எழுப்பி விடு. (அவ்வாறு விழிப்புற்ற மனம்) புல விஷயங்களில் போகாதபடி தன்னாட்ட நிலையிலேயே ஈடுபடும்படி வைப்பாயாக, (எத்தனை முறை தவறினாலும்) மேலும் மேலும் இவ்விரு முயற்சிகளால் மனதை தன் நிலையிலேயே வைப்பாயாக.

*... அதனால் – சித் உருவாய்ச்.*

**34. சித்தம்எப் போது திரம்ஆகும் எவ்விதத்தும்
அத்தைச் சலிப்பித்தல் ஆகாதே - இத்தனையும்
சிந்திக்க வேண்டுவ(து)இன்(று) ஆங்கேஅச் சித்தத்தைப்
பந்தித்து நிச்சலமே பண்ணு*வாய்*...**

அத்தை – அதை; இத்தனையும் – கிஞ்சித்தும், சிறிதளவும்; பந்தித்து – நிறுத்தி.

இவ்வாறு செய்வதால் எப்பொழுது மனம் 'இருக்கின்றேன்' என்ற தன் இருப்பறிவு வடிவாய் மாத்திரம் நிலைபெற்று நிற்குமோ அப்பொழுது (கடமை, கடவுள், கதி யாதிகளை யடையக் கருதுவதான) எக் காரணத்தை முன்னிட்டும் அம் மனத்தைச் சலிக்கும்படி செய்யவே கூடாது. (இந்தத் தீர்மானத்தில்) சிறிதளவேனும் சந்தேக புத்தி கொள்ள வேண்டுவதே இல்லை. நிலைபெற்றிருக்கும் அம் மனத்தை மேற்கூறியபடி ('இருக்கிறேன்' என்ற) அவ் வான்ம சொரூபத்திலேயே கட்டி நிறுத்தி அசைவற்று இருக்கப் பண்ணுவாயாக.

*... — பந்திக்கும்*

**35. ஆசிரயம் பற்றியதாம் அச்சித்தம் அங்ஙனமே**
**ஆசிரயம் இன்றியதாய் ஆக்கிடுக — ஆசிரயம்**
**பற்றுசல நிச்சலமாப் பண்ணிஅந் நிச்சலத்தைச்**
**சற்றும் சலிப்பியா தை...**

சல — பிரவிருத்தி

பந்தப் படுத்தும் ஐம்புல வெளிவிடயங்களைப் பற்றுவதையே தன் சுபாவமாகவுடைய அந்த மனத்தை அப்படிப்பட்ட பற்றுக்கோடு இல்லாததாய் ஆக்கி விடுக. புல விஷயங்களைப் பற்றும் மனத்தின் பிரவிருத்தி ரூபத்தை சலனமற்ற நிவிருத்தி ரூபமாக்கி அந்த நிச்சல நிலையினின்றும் பிறகு மனத்தைச் கொஞ்சமும் சலிப்பிக்க விடாது இருப்பாயாக.

*... சாந்தி — உற்றதனால்*

**36. இவ்எல்லாப் பூத இலயம்உண் டாகில்இவற்(று)**
**எவ்எவ்விண் ணும்விமல மேபோல — அவ்வவ்**
**உருவம் வியாபித்தும் ஓர்மலம்இல் தன்னைப்**
**பொருவுஇல் தியானம் புரி*வாய்...***

பொருவில் — தடையற்ற.

மண், நீர், நெருப்பு, காற்று என்னும் சதுர் பூதங்களும் லயமடையும் (பிரளய) காலத்தில் அந்தந்த பூதங்களில் அதற்குமுன் வியாபித்திருந்த ஆகாயமானது அவைகளால் கறைபடாமல் பரிசுத்தமாய் மிஞ்சி நிற்பது போல, எண்ணிறந்த நாமரூப ஜீவர்களில் வியாபித்திருந்தும் மலமற்று சாந்தியுற்றதனால் விளங்கும் ஆன்மாவாகிய தன்னை (முன் பாடலில் கூறியுள்ளபடி) அடங்கி நிற்கும் மனத்தால் தடைபடாமல் தியானிப்பாயாக.

*... — மருவும்*

37. அதுவே சனனம் அடைந்ததன் பே(று)ஆம்
அதுதானே பாண்டித்யம் ஆகும் — எதுதான்
சலனம்உறும் வாயு சமம்சித்தம் என்றும்
சலனம்அறச் செய்சா தனம்...

மருவும் — அப்படிச் செய்யப்படும்; பேறு — பயன்

அலையும் வாயுவுக்குச் சமமான மனத்தை எப்போதும் நிச்சலமாக இருக்கச் செய்யும் சாதனம் எதுவோ (முன் பாடலில் கூறிய தடையற்ற ஆன்ம தியானம்). அதை அடைவதே இப் பிறவி பெற்றதின் பயனாகும், அதுவே கல்விச் சிறப்புமாம்.

*... தன் — நில(ம்)நீத்துச்*

38. சித்தத்தை மேலேயும் தாரணம் செய்யற்க
மத்தியிலும் கீழிலும் மற்(று)எங்கும் — சித்தம்ஈது
அந்தரங்க பாவனைவிட்டு ஆசிரயம் இன்றியதாச்
சந்ததமும் செய்திடவே தான்...

நிலம் — இருப்பிடம்.

மனத்தின் மூல ஸ்தானமாகிய ஆன்மாவை விட்டு விட்டு (உடலினுள்) ஆறு ஆதாரங்களாகக் கற்பிக்கப்படும் சக்கரங்களுள் மேல், நடு, கீழ் முதலிய ஸ்தானங்கள் எதிலுமோ அல்லது புறத்தே வேறெந்த லக்ஷியத்திலுமோ அதை நிறுத்தும் தியான பாவனைகளைச் செய்ய வேண்டாம், அத்தகைய பாவனைகளை விட்டொழித்து அம் மனத்திற்கு அகத்திலும் புறத்திலும் யாதொரு பற்றுக்கோடும் இல்லாதபடி எப்பொழுதும் செய்ய வேண்டும்.

... அதனை — மந்த

39. உறக்கத்தி னின்றும் உணர்த்திடுக சித்தம்
உறில்சலனம் பின்னர் ஒடுக்காய் - உறக்கம்
அலை(வு) என்னும் இவ்விரண்டும் அற்றநிலை உற்றால்
நிலைஇதனில் நிச்சலமா நில்*லாய்....*

தன்னுணர்வற்ற தூக்கம் வருமாயின் அம்மனத்தை அதனின்றும் எழுப்பி விடுக. விழிப்புறும் போது அம் மனத்தில் எண்ண விருத்திகள் எழுமாயின் அவைகளை உடனே ஒடுக்குக. (இவ்வாறு செய்வதால்) தூக்கம், மன அலைவு, என்னும் இவ் விரண்டும் அற்ற

('இருக்கிறேன்' என்ற உணர்வோடு பிற எண்ணம் அற்று இருக்கும்) நிலையை மனம் அடைந்ததும் ஆன்ம நிலையாகிய இதிலேயே நிச்சலமாய் நிற்பாயாக.

*... – வலையாம் வேற்(று)*

40. ஆசிரயம் இன்றியதாய் அச்சித்தம் தான்என்றும்
மாசுஅறஆ லம்பம்எலாம் அற்றதாய்ப் – பாச
மனஅவத்தை மன்னிடா மைஞேய முத்தி
தன(து)இலக்க ணம்தான் தரி*யாய்....*

வலை - பந்தப்படுத்தும்

அந்த மனமானது பந்தப்படுத்தும் வேறு பற்றுக்கோடுகளைச் சாராததாய், எப்போதும் பற்றுக்கள் அற்று சகல குற்றமும் நீங்கியதாய் மனத்தின் சுபாவம் என்று சொல்லப்படும் பாசங்கள் எதுவும் அடையாமல் உள்ள நிலை எதுவோ அதுவே ஞானமாம் முத்தியினது இலக்ஷணமாகும் என்று அறிந்துகொள்.

*... – தனக்(கு) அயல்ஆம்*

41. ஆலம்பம் எல்லாம் அறவிட்டே அம்மனத்தை
ஏலத் தரிப்பித்(து) இதயத்தே – சாலத்
துலக்கமாய் எவ்அறிவு தோன்றுமோ அஃது
பலக்கவே என்றும் பழ(கு)...

ஏல – பொருந்தும்படி; தரிப்பித்து – இருக்க வைத்து, நிறுத்தி; சால – மிகவும்.

தனக்கு அன்னியமாகத் தான் பற்றுகின்ற பொருள்கள் ஒன்றுமில்லாமல் முற்றும் துறந்து. தன் மனத்தை இதயத்தில் நன்கு பொருந்தும்படி அசைவற நிறுத்தி. அப்போது ('இருக்கிறேன்' என்ற வடிவில்) எந்த அறிவு மிகவும் தெளிவாக விளங்குமோ அவ்வறிவு திடப்படும்படி எப்பொழுதும் அப்பியாசிப்பாயாக.

*... அவ் – இலக்(கு)அயராது*

42. அப்பரமாம் சூனியத்தை யார்தியா னித்தேஅவ்
அப்யாச தத்பரராய் ஆவரோ - தப்பார்
பிறப்(பு)இறப்(பு)இல் லாத பெருமைஉறும் தானம்
உறப்பெறுவ ரேஅவர்என்(று) ஓர்*வாய்....*

இலக்கு – குறிக்கோள்; அயராது – சோர்வு அடையாமல்

அப்படிப் பழகும் லக்ஷியத்தில் சோர்வு அடையாமல் யாரொருவர் அந்த சிரேஷ்டமான சூன்ய நிலையை (ஆன்மாவை) தியானித்து அந்தத் தன்னாட்டப் பயிற்சியிலேயே ஊன்றி நிற்கின்றனரோ, அவர் ஜனன மரணமற்ற மேனிலையாகிய மோக்ஷத்தை நிச்சயமாக அடையப் பெறுவர். தவறவே மாட்டார்கள் என்று அறிவாயாக.

*... – சிறப்(பு)ஆகும்*

**43. தேவரும் தேவியரும் அங்ஙனமே அன்னியமாம்**
**பாவம்அற மும்தத் பலன்களும் – மேவியிடும்**
**ஆசிரயம் ஆசிரய ஞானமுமே ஆனஇவை**
**மாசமு சாரபந்த மால்ஆகும்....**

அறம் – புண்ணியம்; மேவியிடும் – அடையப்படும்; மால் – மயக்கம்.

மகிமை பொருந்திய தேவர்களையும் தேவியர்களையும் வணங்குதலும், இவர்களைப் போன்றே தனக்கு அன்னியமான பாவ புண்ணிய கர்மங்களைச் செய்வதும், அக் கர்மங்களின் துக்க சுகப் பலன்களைப் அனுபவிப்பதும், அவைகளால் வெளிவிஷய விருப்பப் பொருள்களையும் அவற்றின் விஷய ஞானங்களையும் அடைவதும் ஆகிய இவையெல்லாம் மயக்கம் தரும் பெரிய சம்சார பந்தங்களே யாகும்.

*... – பாசம்ஆம்*

**44. தொந்தம்என்(று) ஆசிரயம் சொல்லப் படுமாம்அத்**
**தொந்தம் விடப்பரம் தோன்றுமே – பந்தம்இல்**
**சீவன்முத் தன்யோகி தேகத் தியாகத்தால்**
**ஆவன் விதேகமுத்தன் அன்று....**

அன்று -அப்பொழுது.

புறப்பற்றுக்கள் எல்லாம் துவந்தங்கள் (இரட்டைகள்) என்று சொல்லப் படுவனவாம். இவ் இரட்டைகளை விட்டால் ஏகமாகிய பரம்பொருள் விளங்கும். இவ் விரட்டைகளின் பந்தம் அற்ற யோகி ஜீவன் முத்தனாகும். அவனது தேகம் விடுங்காலத்தில் அவன் விதேக முத்தனாகின்றான்.

*... வினை - மேவும்*

45. உடலை விராகத்(து) ஒழித்திடுகை புத்தி
உடையவரால் செய்ய ஒணாதே – உடல்இதனை
ஆரம்பித்(து) உள்ளவினை அற்றஉடன் இவ்உடல
பாரம்தா னேஅகலும் பார்....

ஆனால் அறிவுடைய ஒருவன் பிராரப்த வினையினால் வந்துள்ள இவ் வுடலை வெறுப்பால் கொன்றொழிப்பது செய்யத்தகாத காரியமாகும். இந்த உடலைப் பிறப்பித்துள்ள மேற்கூறிய பிராப்த வினை முடிந்தவுடன் இந்த தேக பாரம் தானாகவே நீங்கி விடும். அறிக.

*... உடல்உள் – சாரும்*

46. இதயகம லத்தே அகஉருஆம் எச்சித்(து)
அதுநிமல நிச்சலமே யாகும் - உதிக்கும்
அகங்காரம் நீக்குதலால் அச்சித்தே முத்தி
சுகம் கொடுப்ப(து) என்று துணி*யாய்...*

இந்த தேகத்தில் இருக்கும் இதய கமலத்தில் எந்த சித் சொரூபமானது 'நான்' என்ற வடிவில் நிர்மலமாயும். நிச்சலமாயும் விளங்கிக் கொண்டிருக்கிறதோ. அச் சித் சொரூபமே அதனின்றும் தோற்ற மாத்திரமாக உதித்து ஒடுங்கும் அகங்காரத்தை நீக்கி விடுவதால், மோக்ஷானந்தத்தைக் கொடுக்கும் என்று துணிவாயாக.

*... – அகம்சேர்*

47. சருவ உபாதியும் சாரா(து) உளசித்(து)
உருவம் எதுஒன்(று) உளது – நிரந்தரம்
அந்தச் சிவம்அகம்என்(று) அன்பால் தியானித்தே
எந்தஆ சத்தியும்நீ எற்று*தி....*

அகம் சேர் – அகங்கார வடிவாய்ச் சேர்ந்துள்ள; ஆசத்தி – பற்று.

அகங்கார வடிவாய்ச் சேர்ந்துள்ள எல்லாவித உபாதிகளும் சிறிதும் ஒட்டாதுள்ள 'இருக்கிறேன்' என்னும் எந்த அறிவுருவம் ஒன்று எப்போதும் விளங்கிக் கொண்டிருக்கின்றதோ. அந்த மங்கலப் பொருளே 'நான்' ('நான் இருக்கிறேன்') என்று அன்போடு எப்போதும் தியானிப்பதனால் (உபாதியாகச் சார்நதிருந்த) எல்லாப் பற்றுக்களையும் நீ விட்டொழிவாயாக.

*... – புந்தியால்*

**48. தேசமும் சாதிமுத லாம்இவற்றைச் சேர்ந்தனவும்
மா(சு)அகல்வர் ணாசிரமம் மன்னினவும் – பேசும்இப்
பாவனைக ளைஅகற்றிப் பற்றியே தன்னிலையின்
பாவனையே என்றும் பழகு....**

மாசு அகல் – குற்றங்கள் அழிக்கும்; தன்னிலையின் பாவனை – ஆன்ம இருப்பு, ஆன்ம நாட்டம்; மன்னினவும் – பற்றிய

நீ (பார்வதீ) ஒரு குறிப்பிட்ட நாட்டை சேர்ந்தவள் என்றும், ஜாதி முதலியவற்றைச் சேர்ந்தவள் என்றும், குற்றங்களை நீக்குவதற்காக ஏற்படுத்தப்பட்டுள்ள எந்த ஒரு வர்ணத்தையோ, ஆசிரமத்தையோ சேர்ந்தவள் என்றும் சொல்லப்படுகின்ற (உன்னைப் பற்றிய இந்த தேக) பாவனைகளை யெல்லாம் விவேகத்தினால் விலக்கி ஆன்மாவாகிய தன் நாட்டத்தையே பற்றி எப்பொழுதும் பழகுவாயாக.

*... பயம் – மேவா*

**49. ஒருவன்நான் எற்(கு)உரியன் ஒரொருவன் இல்மற்(று)
ஒருவற்(கு)இல் யானும் உரியன் – ஒருவன்
எவற்(கு)உரியன் யான்அவனைக் கண்டிலேன் யான்எற்கு
எவன்உரியன் கண்டிலேன் யான்ஏ...**

(இருமை இன்மையினால்) பயமற்றவனாகி நான் ஒருவனே இருக்கிறேன். எனக்கு உரியவனாக வேறு ஒருவன் கூட இல்லை. நானும் வேறொருவனுக்கும் உரியவன் அல்ல. யான் எவனொருவனுக்கு உரியவனோ அப்படிப்பட்ட ஒருவனை நான் காண்கிறதில்லை. (அவ்வாறே) எவன் ஒருவன் எனக்கு உரியவனோ அப்படிப்பட்ட ஒருவனையும் நான் காண்கிறதில்லை. (தானன்றி யாருமிலை என்பது கருத்து.)

*... – அவிகார*

**50. நானே பரப்பிரம்ம நாதன்உல குக்(கு)ஈசன்
ஆனாஇந் நிச்சயம் ஆர்புருடன் – தானேநல்
முத்தன்ஆம் அன்றி முரண்வழியில் செல்புருடன்
பெத்தனாம் என்றுநீ பேண்...**

ஆனா – நீங்காத, நழுவாத; ஆர் – பெற்ற; புருடன் – ஒருவன்; பெத்தன் – பந்தப்பட்டவன்.

மாறுதலற்ற எனது உண்மை சொரூபமே பரப்பிரம்ம சொரூபமாகும்; அதுவே உலகத்திற்கு தலைவனுமான ஈசனது சொரூபமும் ஆகும். என்ற இத்தகைய நழுவாத நிச்சயமுற்ற புருஷன் ஒருவனே நல்ல முத்தன் ஆவான். அவ்வாறு இன்றி இந் நிச்சயத்திற்கு மாறான வழியில் செல்லும் ஒருவன் பந்த முற்றவனே யாவான் என்று நீ அறிக.

*... உடல்நான் – புத்தி அகன்(று)*

**51. என்(று)ஒருவன் தேகம் இலனாக வேதன்னைத்**
**தன்ஞானக் கண்ணினால் தான்காண்பன் – அன்றே**
**அனைத்தினும் ஆசை அறவிட்டுச் சாந்தி**
**தனைத்துன்னி யோன்ஆவன்...**

'உடம்பே நான்' என்ற அகந்தை மதி நீங்கி, எப்போது ஒருவன் தன்னை (ஆன்மாவை) தேகம் இல்லாதவனாகவே (அசரீரியாகவே) தன்னுடைய ஞானக் கண்ணினால் அறியவல்லவன் ஆகிறானோ, அப்பொழுதே அவன் எல்லாப் பொருள்களிலும் ஆசை முற்றும் நீங்கியவனாய் சாந்தியை அடைந்தவன் ஆவான்.

*... தான்ஆய்த் – தனித்த*

**52. அசன்ஈசன் என்(று)எல்லா நூல்களிலும் ஆர்தான்**
**இசைக்கப் படுவானோ என்றும் - அசரீரன்**
**ஆம்குணம்இல் லான்ஆன்மா ஆம்அவனே யான்சிறிதும்**
**ஈங்(கு)இதனில் ஐயம் இலை...**

எல்லா சாஸ்திரங்களிலும் எவனொருவன் தானே தானாய்த் தனித்திருக்கும் அஜன் (பிறப்பில்லாதவன்) என்றும், ஈசுவரன் என்றும் போற்றப்படுகிறானோ, எப்போதும் சரீரம் இல்லாதவனாகவும், குணங்கள் இல்லாதவனாகவும், ஆன்மாவாகவும் உள்ள அவனே யான். இங்கு இதில் சிறிதும் சந்தேகமே யில்லை.

*... அகமாய் – ஓங்கும்ஒரு*

**53. விஞ்ஞான மாத்ரன் விசுத்தன் விமுத்தன்நான்**
**எஞ்ஞான்றும் எங்கும் இருப்பன்நான் – அஞ்ஞாயத்(து)**
**ஒன்(று)அலன்நான் பற்றுவிட ஒண்ணான்நான் துக்கம்இலான்**
**என்றும் பிரம்மமயன் யான்...**

எஞ்ஞான்றும் – எப்போதும்; அஞ்ஞாயத்து – அக்காரணத்தால்.

'நான்' என்று மாத்திரம் விளங்கும் ஓர் அறிவே நான்; நான் பரிசுத்தமானவன்; நான் கட்டுப்பாடு அற்றவன்; நான் எப்போதும்

எங்கும் இருப்பவன். (ஆயினும்) நான் அந்தக் காலம் தேசம் என்பவைக்குள் ஏதொன்றும் அல்லன். நான் ஒன்றால் பற்றப்படவோ, விடப்படவோ முடியாதவன். நான் துக்கமில்லாதவன். நான் எப்பொழுதும் பிரம்மமயம் ஆகும்.

*... உயிர்ஊ(டு) – ஒன்(று)ஆகி*

54. உச்சி முதல்உள்ளங் கால்அளவாய் உள்புறம்(பு)
இச்சருமப் போர்வை இறுதிஆம் - இச்சடத்துக்(கு)
அன்னியசித் தாய்முழுது மாய்அமுத மாய்த்தானே
மன்னியஆன் மாநான் மதி...

உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரையிலும் அளவுள்ளதாய், உள்ளேயுள்ள அந்தக் கரணங்கள் முதல் வெளியில் உள்ள இந்தத் தோல் போர்வை முடியத் தன் உருவமாய்க் கொண்டதும், தன்னிடம் ஊடுருவி உள்ள உயிரோடு ஒன்றாகிப் பிணைபட்டதாய் (தானே உயிர் போன்றதாய்) காணப்படும் இந்த ஜடவுடலுக்கு வேறாகிய சித் சொரூபமாய், பூரணமானதாய், அழியாத் தன்மை பெற்றதாய், தானாகவே நிலை பெற்றுள்ள ஆன்மாவே நான் என்று அறிக.

*... எதிரே – துன்னிய*

55. இந்தச் சராசரங்கட்(கு) ஈசன்நான் தாயுடனே
தந்தையும் தந்தைக்குத் தந்தையும் – சிந்தனம் கொண்டு
அத்துரிய நற்பத மாம்எனையே சிந்திப்பார்
முத்தி விருப்பர் முனைந்(து)*உள்ளே...*

முனைந்து – ஊக்கத்துடன்;

மோக்ஷ விருப்பமுள்ள முமுக்ஷுக்கள் என்னை எதிரே காணப்படும் இந்தச் சராசரப் பிரபஞ்சப் பொருள் அனைத்திற்கும் நானே ஈசன் என்றும் அவைகட்குத் தாயும் தந்தையும், தந்தைக்குத் தந்தையும் நானே என்றும் கருதி, அந்த நல்ல துரிய பதமாகிய என்னையே (ஆன்மாவையே) பேரூக்கத்துடன் உள்ளே தியானிப்பார்கள்.

*... – நித்தம்*

56. பிரமன்முன் னாம்தேவர் பேணும்அர மாதர்
நரர்இயக்கர் கந்தருவர் நாகர் – நிரையாலும்
எச்சம் பலவாலும் யான்பூச் சியன்எனையே
அர்ச்சிப்பர் ஆரும் அறி...

அரமாதர் – தேவ லோகப் பெண்கள்; நிரையாலும் – கூட்டத்தாலும்; எச்சம் – மற்றுமுள்ள; பூச்சியன் – பூஜிக்கப்படுபவன்.

பிரம்மா முதலிய தேவர்கள், போற்றப்படும் தேவலோக மாதர்கள், மனிதர்கள், யக்ஷர்கள், கந்தர்வர்கள், நாகர்களாகிய கூட்டத்தினராலும் இன்னும் உள்ள பற்பல ஜீவர்களாலும் நானே நித்தம் பூஜிக்கப்படுபவன். இவர்கள் யாவரும் என்னையே அர்ச்சிக்கின்றார்கள் என்று அறிவாயாக.

*... அருளை – நச்சி*

**57. அரும்தவங்கள் தானம் அனேகவிதத் தாலும்**
**அருச்சிப்பர் என்னையே யாரும் – பரந்த**
**சரஅசர பூதங்கள் சார்ந்(துஉளமற்(று) எல்லாம்**
**ஒருவன்ஆம் யானே உணர்*வாய்...***

சார்ந்துள – இருக்கிற; நச்சி – விரும்பி.

பற்பல விதமான அரிய தவங்களாலும் தானங்களாலும் எல்லோரும் அருளை நாடி என்னையே அர்ச்சிக்கிறார்கள். எண்ணிறந்த சராசர வடிவான உயிர்களும் மற்றும் இருக்கின்ற எல்லாப் பொருள்களும் ஒருவனாகிய நானே என்று அறிவாயாக.

*... உரு இலதால்*

**58. தூலனும் சூக்குமனும் சூனியனும் அல்லன்நான்**
**ஞாலத்தின் பந்துநான் ஞானமயன் – மேலும்**
**நிரந்தரன்ஈ சன்விமலன் நீ(டு)அவத்தை இல்லோன்**
**பிரபஞ்சம் இல்லோன் நான்...**

நீடு – தொடரும்.

ரூபமற்றதால் நான் ஸ்தூல தேக அபிமானியோ, சூக்ஷ்ம தேக அபிமானியோ, காரண தேக அபிமானியோ அல்ல. உலக உயிர்களால் மிகவும் விரும்பப்படுபவன் நான். நான் ஞானமே வடிவானவன். மேலும் நான் இடையறாது எப்போதும் இருப்பவன்; ஈசுவரன்; மலமற்றவன்; தொடரும் அவஸ்தைகள் ஏதும் இல்லாதவன்; காணப்படும் இவ்வுலகத் தோற்றம் அற்றவன்.

*... பின்னும் – திரமாம்*

**59. அனாதிவிஞ் ஞானம் அசன்மம் புராணம்**
**தனா(து)இத யக்குகையில் தங்கி – எ(ந்)நாளும்**
**உருவம்உல கம்களங்கம் ஒப்புப்பற்(று) இன்றிக்**
**கருதக்கா ணக்கொளப்போ காது – மருவு**

60. சனாதனமாய் அந்தரம்இல் சத்பிரம்மம் சோகம்
எனாநீ அடிக்கடிபார் ஏகம் - ப(ல்)நாளும்எவன்
பாவித்து நிச்சலனா நிற்பன் பரப்பிரம்மம்
ஆவன்அமு தத்தன்மை ஆர்ந்து...

எனா – என்று; மருவு – விளங்கும்.

மேலும் தன் இதய குகையில் ஸ்திரமாய் விளங்குவதும், ஆதியற்றதும், ஞானமயமானதும், பிறப்பற்றதும், பழமையானதும், எந்நாளும் உருவமோ உலகமோ களங்கமோ சமானமோ பந்தமோ அற்றதாயும், நினைக்கவும் காணவும் அபகரித்துக் கொள்ளவும் முடியாதபடி விளங்கும் பழம் பெரும் பொருளாகவும், இடைவெளியற்றதாகவும், இருப்பு மாத்திர பிரம்ம சொரூபமாகவும் உள்ள ஆன்ம வஸ்துவே நான் என்று நீ அடிக்கடி ஏகாத்ம பாவனையையே தரிப்பாயாக, எவனொருவன் இவ்வாறு பன்னாட்கள் அப்பியசித்து சலனமற்றவனாய் ஆன்மாவில் நிலைபெறுகின்றானோ அவன் அழியாத் தன்மை பெற்று பரப்பிரம்மம் ஆகின்றான்.

*... ஆன்ம – பாவமாம்*

61. ஞானம்இவ் வாறா நவின்றிடப் பட்டதால்
ஆனமுத்தி யாரும் அடைதற்கு – மானினி இன்(று)
ஆசாரம் என்னால் அருளப் படும்இதுகேள்
நீசாவ தானமா நின்று*நிலை...*

மானினி – பெண்.

பெண்ணரசே! யாவரும் சிறந்த முத்தியை அடையும் பொருட்டு ஆன்மாவாய் நிலைபெறும் ஞான லக்ஷணம் மேற்கூறியவாறு உனக்குச் சொல்லப்பட்டது. இனி இப்பொழுது (அந்த ஞானத்தை யடைய) ஒருவன் அனுஷ்டிக்க வேண்டியவைகள் என்னால் உபதேசிக்கப்படும். நீ ஒரு முகமான கவனத்துடன் நிலைத்து இருந்து கொண்டு அதனைக் கேட்பாயாக.

*... – மா(சு) அகல*

62. நீராட லும்செபமும் நித்தியஓ மம்பூசை
ஆர்அழலின் காரியம் ஆதியாத் – தேரும் ஓர்
சாதனமும் அன்னோன் தனக்(கு)என்றும் இன்றாமால்
மாதரசி யேநீ மதி*இதனை...*

மாதரசே! என்னால் சொல்லப்பட்ட இந்த ஞானப் பயிற்சியை மேற்கொண்ட ஒருவனுக்கு பாபங்களை அகற்றும் புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம், மந்திர ஜபம், நித்திய ஹோமம், பூஜை, அக்கினியிற் செய்யும் யாகாதி கர்மங்கள் முதலியவையாகச் சொல்லப்பட்ட யாதோர் சாதனமும் என்றுமே தேவையில்லை நீ இதனை திடமாய் நம்புவாயாக.

*... – ஆதரம் சேர்*

**63. நேமமும் கேத்திரபீ டத்தில் நிகழ்சேவை**
**நாமஅர்ச் சனம்பிதிரர் நல்கருமம் - பூமருவு**
**தீர்த்தநல் யாத்திரை தே(சு)ஆர் விரதங்கள்**
**ஓர்த்திடஅவற்(கு) இல்லையாம் ஒன்றுமே...**

தேசு - தேஜஸ்; பூ மருவு - பூமியிலுள்ள.

அந்த ஞானாப்பியாசிக்கு, அன்பு சேர்க்கும் நியமங்கள், ஸ்தலங்களில் எழுந்தருளியுள்ள தெய்வ மூர்த்திகளைச் சேவித்தல், ஈசுவர நாம அர்ச்சனைகள், முன்னோர்களுக்குச் செய்ய வேண்டிய நற்கருமங்கள், பூமியிலுள்ள பல்வேறு நல்ல தீர்த்தங்களுக்கு யாத்திரை போதல், தேஜஸைத் தரும் விரதங்களை அனுஷ்டித்தல் ஆகிய இவைகளில் யாதொன்றுமே அவசியமில்லை என்று நீ அறிந்து கொள்க.

*... – ஆர்த்த*

**64. தரும அதருமம் தருபலன் இல்லை**
**மருவு திதிஉலக மன்னும் – கருமம் இலை**
**எல்லாக் கருமம் இகந்தி(டு)உல(கு) ஆசாரம்**
**எல்லா விதத்தும் இகந்திடுக...**

இகந்திடுக – விட்டுவிடுக; ஆர்த்த – நூல்களில் கூறப்பட்ட; மருவு – விசேஷ.

அந்த அப்பியாசிக்கு நூல்களில் கூறப்பட்ட புண்ணிய பாபங்களால் வரும் பலன்கள் இல்லை. விசேஷ திதி (நட்சத்திர, நாட்) களும் உலகத்தார் செய்யும் கர்மங்களும் இல்லை. (ஆகையால்) கர்மங்கள் அனைத்தையும் துறப்பாயாக. அவ்வாறே எல்லாவித உலக ஆசாரங்களையும் ஒருங்கே நீக்கி விடுவாயாக.

*... – சொல்ஆர்*

**65. சமயஆ சாரமே சற்றும்இன்றித் தள்ளாய்**
**சமத்தமாம் கன்மம் தளையாய் – அமையும்ஆல்**
**சங்கல்ப மும்விகல்பம் சாதிதரு மம்சார்ந்த**
**சங்கத்தை யும்தூரத் தள்ளு*வாய்...***

புகழ்ந்துரைக்கப்பட்ட சமயாசாரங்கள் அனைத்தையும் கொஞ்சமும் மீதியின்றி தள்ளி விடுவாயாக. (ஏனெனில்) எல்லாவித கர்மங்களும் முடிவில் பந்தமாகவே அமையும். ஆகையால் சங்கற்ப விகற்பங்களையும், ஜாதி தர்மங்களையும் குறித்து ஏற்பட்டுள்ள பற்றுதல்களையெல்லாம் அடியோடு மனத்திலிருந்து வெகு தூரத்தில் நீக்கி விடுவாயாக.

... — *பொங்கும்*

**66. பலவிதமாம் சித்திகளும் பாதாளம் முன்பாய்**
**இலகும்இர சாயனமும் என்ப — உலகில்**
**பிரத்தியட்ச மாகவே பெற்றாலும் பற்றல்**
**ஒருவுகவே சாதகன் உள்*நின்(று)*...**

ஒருவுக - விட்டுவிடுக.

ஞானசாதகனானவன் இடையிடையே தாமாகவே வந்து வாய்க்கும் பற்பல விதமான சித்திகளையும், மறைந்துள்ள பொருள்களைக் காண உதவும் பாதாளாஞ்சனம் முதலிய சக்தி வாய்ந்த ரசாயனங்கள் கிடைக்கப் பெறுதலையும், இவ்வுலகத்தில் பிரத்தியட்சமாகவே அடையப் பெற்றாலும் அவற்றில் மனம் பற்றாமல் உள்ளத்தில் (ஆன்மாவில்) ஸ்திரமாக நின்றுகொண்டு விட்டொழிப்பானாக.

... - *உரைத்த*

**67. இவையாவும் பந்தகம்ஆம் இச்சீவ னுக்கே**
**இவைமேலும் தாழ்ந்தநெறி ஈவ — இவைகள்**
**இயாவையினும் அப்பரம முத்திசுகம் இல்லை**
**வியாபகமாம் சித்(து)உருவம் விட்(டு)...**

நூல்களில் கூறப்பட்ட இவையெல்லாம் ஜீவனுக்குப் பந்தங்களாகவே முடியும். மேலும் இவைகள் தாழ்ந்த வழிகளிலேயே ஒருவனைத் தள்ளிவிடும். சர்வ வியாபகமாய் உள்ள ஆன்ம சித் சொரூபத்தில் நிற்பதைத் தவிர இவை ஒன்றிலாவது அந்த சிரேஷ்டமான மோக்ஷ சுகம் இல்லவே இல்லை.

... *உள் - அயா அறுத்(து)*

**68. எவ்விசே டத்தானும் எல்லா அவத்தையினும்**
**தவ்வல்அற யோகம் தரித்தோனாய் — எவ்விதத்தும்**
**ஐயத்தால் கேத்திரபீ டத்தில் குதூகலமா**
**மையல்எழின் மற்(று)அதனை மாற்று*தி*...**

அயா – தளர்ச்சி; தவ்வல் – நழுவுதல், தவறுதல்; மையல் – மயக்கம்.

ஆகையால் உள்ளத்தில் ஏற்படும் சோர்வை நீக்கி, எல்லா அவஸ்தைகளிலும் எவ்வித விசேஷத்தை முன்னிட்டேனும் தவறி விடாமல் ஆன்ம நாட்டத்திலேயே ஊன்றியவளாய் நிற்பாயாக. எப்போதாவது, எந்தவொரு சந்தேகத்தை முன்னிட்டாவது, க்ஷேத்திர சேவையிலும், பீட பூஜைகளிலும் உற்சாகமாகிய மயக்கம் எழுந்தால் உடனே அதனை மனத்தினின்றும் மாற்றி விடுக.

*... நொய்ய*

**69. கிருமிகீ டம்பறவை கேள்சதியே தாரு**
**உருமுதலாம் எல்லா உயிரும் – ஒருபோதும்**
**நாசம்உறச் செய்யஒணா நல்அறிஞன் உண்மைஅறிவு**
**ஆசிரயித் தோனாய் அறி...**

நொய்ய – அற்பமான; சதி – மனைவி.

என் சதியே! நீ மேலும் கேட்பாயாக. அற்பமான கிருமிகள், புழுக்கள், பறவைகள், தாவர உருவங்கள் முதலிய எந்த உயிர்களாயினும் அழியும் படி ஒருபொழுதும் ஹிம்சை செய்யாத நல்ல அறிவுள்ளவனே மெய்யான ஞானாப்பியாசி ஆவான் என்று அறிந்து கொள்க.

*... அருள்ஆர் – ஆசயனாய்*

**70. வேர்எதுவும் தான்பிடுங்க வேண்டாம் இலையினையும்**
**வேறுபடுத் தும்செயலும் வேண்டாமே – சீறி**
**இனாத செயவேண்டாம் எவ்உயிர்க்கும் பூவும்**
**அனாதரவாய்க் கிள்ள வேண்டாம்*காண்...***

ஆர் – அடைய; இனாத – கெடுதல்.

அருளை யடைய விருப்பமுள்ளவனாயிருந்து கொண்டு அந்த சாதகன் எந்த வேரையும் பிடுங்க வேண்டாம். எந்த இலையையும் பறிக்கும் செயலும் அவனுக்கு வேண்டாம். எந்த உயிரிடத்தும் கோபித்து. அது துன்பமுறும் காரியங்களைச் செய்ய வேண்டாம். இரக்கமற்றவனாய் மலர்களைக் கூடக் கொய்ய வேண்டாம்.

*... – மனாது*

**71. சுயமாக வேஉதிர்ந்த தூமலர்கள் கொண்டே**
**செயக்கடவன் பூசை சிவனுக்கு – இயற்றியிடும்**
**மாரணம்உச் சாடனமும் மற்றவித்து வேடணமும்**
**பேர்உற்ற தம்பனமும் பின்*னின்னல் – கூரும்***

**72. சுரமொடு பூதம்கோள் துன்னும் ஆ வேசம்**
**முரண்வசியம் ஆகருடம் மோகம் – உரைத்தஇக்**
**குத்திரகன் மங்கள் குயிற்றற்க கல்கட்டை**
**ஒத்தவற்றில் பூசை ஒழி...**

மனாது – மன்னாது – பொருந்தியிராது; பேருற்ற – புகழ் பெற்ற; ஆகருடம் – ஆகர்ஷம்; குயிற்றற்க – செய்ய வேண்டாம்.

தான் மலர்ந்த கிளைகளில் ஒட்டுதலின்றி தாமாகவே உதிர்ந்து போன நல்ல மலர்களைக் கொண்டு சிவனுக்கு அவன் பூஜை செய்யட்டும். மந்திரங்களால் பிறரை அழித்தல். பிசாசங்களை விரட்டுதல் - ஏவுதல் முதலியவை, மேலும் ஒருவொருக்கொருவர் பகைமை உண்டாக்குவது, பிறர் வியக்கத்த தக்கவாறு ஸ்தம்பிக்கச் செய்தல், மேலும் துன்பத்தைக் தரக்கூடிய ஜுரத்தை உண்டாக்குதல், பூதங்களையும் கிரகங்களையும் ஏவுதல், ஆவேசம் உண்டாகும்படிச் செய்தல், முறையற்ற வழியில் வசியம் பண்ணுதல், தன் வழிக்கு இழுத்தல், மயக்குதல் என்று இப்படிச் செய்யக் கூடியதாக நூல்களில் சொல்லப்படும் இத்தகைய இழிவான காரியங்களை யெல்லாம் செய்ய வேண்டாம், கல்லாலும் மரத்தாலும் இன்னும் இது போன்ற பொருள்களாலும் செய்யப்பட்ட உருவங்களில் பூஜை செய்வதையும் ஒழிப்பாயாக.

*... அழியா – முத்திஉறக்*

**73. கேத்திரபீ டத்தில் கிளர்தேவ தைப்பொருட்டாச்**
**சேர்த்திடும்மா முத்திரையும் செய்மகமும் – நீத்துமுன்**
**செய்அவற்றின் வாதனைகள் தீர்த்தே வியாபகம்ஆம்**
**மெய்அறிவு தன்னையே மேவு...**

கிளர் – உள்ள; மகம் - யாகம்.

க்ஷேத்திரங்களிலும் பீடங்களிலும் விளங்குகின்ற பலவித நாமரூப தெய்வங்களின் பொருட்டு. (மனத்தை வெவ்வேறு ஸ்தானங்களில்) சேர்த்து நிறுத்துகின்ற முத்திரைகளையும். இன்னும் பல்வேறு யாகங்கள் செய்வதையும் விட்டொழித்து விடுவதோடு முன்பு ஒரு காலத்தில் தான் அவற்றைச் செய்து வந்த வாசனைகள் எதுவும் மிஞ்சி யிருந்தாலும். அவைகளையும் ஒழித்து விட்டு அழிவற்ற முத்திப் பயனை மட்டும் பெறுவதற்காகவே சர்வ வியாபகமாயுள்ள உண்மை யறிவான தன் ஆன்மாவையே நீ நாடுவாயாக.

*... உளத்தே – செய்ய*

74. சமத்துமே உற்றுச் சருவாமல் ஆசை
சமனாய்ச் சுகதுக்கச் சார்வில் – சமன் ஆகி
மித்திரர்கள் அல்லாதார் மேலும்ஓட் டில்பொன்னில்
ஒத்தகருத் தோன்ஆகி உற்(று)*அகமே – சித்தம்*

75. பொறிவிட யத்தில்ஒரு போதும் விருப்பம்
உறவிடா(து) உள்மமதை ஓட்டி – அறி(வு)உரம்உற்(று)
ஆசைபயம் அற்(று)என்றும் ஆன்மாவி லேரமிப்பன்
மா(சு)இலா யோகி மதி...

செய்ய – நல்ல. செம்மையான; சருவாமல் – கொள்ளாமல்.

குற்றமற்ற யோகியானவன் உள்ளத்தே நல்ல சமத்துவம் பெற்றவனாய், ஆசைகள் அடையாதவனாய், இன்ப துன்பங்கள் நேரும்போது அவற்றைச் சமமாகக் கருதுபவனாய், நண்பர்கள் விரோதிகள் என்ற பேதமற்ற சமநோக்கு உடையவனாய், மேலும் ஓட்டையும் பொன்னையும் சமமாகக் கருதக் கூடியவனாய், மனம் உண்முகப்பட்டு அதனால் ஐம்பொறி விஷயங்களில் ஒரு பொழுதும் விருப்பம் உண்டாக இடந்தராதவனாய், உள்ளத்தே மமகாரம் ஒழிந்து விவேகம் வலிவுற்றவனாய் ஆசை பயம் இரண்டுமற்றவனாய். எப்போதும் ஆன்மாவிலேயே ரமித்துக் கொண்டிருப்பான் என்று அறிவாயாக.

*... அதனால் – ஆ(சு)இல்*

76. சமன்ஆகி நிந்தையில் சாற்றுதுதி யில்பின்
சமன்ஆகி சர்வபூ தத்தும் – சமதிட்டி
மன்னிடவே வேண்டும்ஆல் மாறாமல் எந்நாளும்
தன்உயிர்போல் மன்உயிரில் தான்...

ஆசு இல் – குறை கூற முடியாத; மன் – உலகம்; மன்னுயிர் – உலக உயிர்கள்.

யோகியின் தன்மை இப்படிப்பட்டது என்பதனால் புகழ் - இகழில் ஒருவன் இன்ப துன்பமுறாத சம புத்தியுள்ளவனாய், மேலும் எல்லா உயிர்களிடத்தும் சம பாவனை உடையவனாய், உலக உயிர்கள் யாவற்றிடமும் தன் உயிர் போலவே எந்நாளும் மாறாத குறை காண முடியாத சமதிருஷ்டி யுடையவனாக இருக்க வேண்டும்.

*... மோனம் - மன்னி*

**77. ஒருவுகவீண் வாதம் உடன்உலக கோட்டி**
**ஒருவுக பாழ்ங்கலக மும்பின் – ஒருவுக**
**சாத்திர கோட்டியைச் சாராதே தீச்சொல்லோ(டு)**
**ஏத்தும்நல் சொல்லும் இகந்தி(டு)...**

மன்னி – பேணுதல்; கோட்டி – கோஷ்டி, சங்கம்.

வாக்கு, மனோ மௌனம் பேணுபவளாய், வீண் வாதங்களையும், உலகத்தார் சங்கத்தையும் விட்டொழிப்பாயாக. வீணான கலகங்களையும் விட்டு விடுக. மேலும் சாஸ்திர வாசனைகளை மட்டுமே யுடைய மக்களின் கூட்டுறவையும் நெருங்காமல் விட்டு விலகுக. பிறரைப் பழிக்கும் இழிச் சொற்களையும் பிறரைத் துதிக்கும் முகஸ்துதிகளையும் விட்டொழிப்பாயாக.

*... அகத்(து) – ஆர்த்(து) எழூஉம்*

**78. ஈரிடையும் கோளும் இடம்பம் இராகமும்**
**சாரும்அம் மாச்சரியம் தானும்பின் – நேரிடும்**
**ஆசையும் கோபமும் அச்சமும் சோகமும்**
**நீசருவம் மெல்லமெல்ல நீக்கு*வாய்...***

உள்ளத்தில் பொங்கிக் கிளம்பும் பொறாமையும், கோளும், டாம்பீகமும் ஆவலும், அது தடைபடும்போது ஏற்படும் வெறுப்பும், மேன்மேலும் முளைக்கும் ஆசைகளும், கோபமும், பயமும், வருத்தமும் ஆகிய எல்லாவற்றையும் நீ மெல்ல மெல்ல நீக்கி விடுவாயாக.

*... – வாசனையால்*

**79. தொந்தம் அனைத்தும் தொடரா(து) அகற்றியே**
**சந்ததமும் தான்சனத்தைச் சாராதான் – இந்த**
**உடம்புடனே எல்லாம் உணர்ந்திடுவான் ஆகித்**
**திடம்பெறுதே(சு) ஆர்ந்(து)ஒளிர்வன் தே*ராய்...***

பூர்வ வாசனைகளின் பலத்தால் தோன்றும் இரட்டைகள் எதுவும் மனத்தில் பெருகவிடாமல் நீக்கி, எப்போதும் தானாகவே ஜனக் கூட்டத்தைச் சாராதவனாய் இருப்பவன் இவ்வுடல் ஜீவித்திருக்கும் நாளிலேயே எல்லாம் அறிந்த ஞானியாய் பிரம்ம தேஜஸைப் பெற்றவனாய் விளங்குவான் என்று அறிக.

*... — மடம்தெறு மெய்ஞ்*

80. **ஞானத்தி னாலேயே நல்முத்தி அவ்வண்ணம்**
**ஏனைய சித்திபயன் இன்றேனும் - ஊனம்ஆம்**
**போகத்தும் சித்தியினும் பூண்டுமயல் வேண்டிடுவர்**
**சாதகராய் உள்ளவர்கள் தாம்...**

மடம் — அறியாமை; தெறு — அழிக்கின்ற; அவ்வண்ணம் — அப்படிப்பட்ட; ஊனம் — குற்றமுள்ள; பூண்டு மயல் — மயக்கங்கொண்டு; ஏனைய — பல

அஞ்ஞானத்தை அழிக்கின்ற ஆன்ம மெய்ஞ்ஞானத்தினாலேயே நல்ல முத்தியானது அடையக் கூடியது. (இந்த ஞான சித்தியைத் தவிர்ந்த) மற்ற அணிமாதி சித்திகளால் அந்த முத்திப் பயன் கிட்டவே கிட்டாது, எனினும் சாதகர்களாய் உள்ளோர் பலர், குறையுள்ள போகங்களிலும் அஷ்ட சித்திகளிலும் மயக்கமடைந்து தாம் அவைகளையே யடைய விரும்புகின்றனர்! (என்ன பரிதாபம்).

*... மறைபோய் — ஓதும்*

81. **அணிமாஆதி யானகுணம் ஆர்ந்திடுக அன்றி**
**அணுகாம லேஅஃது அகல்க — உணர்ந்தே**
**விமலம்ஆம் அப்பதியை வீ(டு)உறுதல் தப்பான்**
**அமலம்ஆம் தேகி அறி...**

தேகி — யோகி.

வேதங்களில் சிறப்பித்துக் கூறப்படும் அணிமா முதலிய அஷ்ட சித்திகள் தன்னிடம் பொருந்தியிருந்தாலும் அல்லது அவைகள் தனக்கு உண்டாகாமற் போனாலும் உபாதிகளாகிய மலங்கள் நீங்கக் பெற்றதால் தேகத்தின் வேறாகிய தேகியாய்த் தன்னை அறிந்த யோகி, நிர்மலமான அந்தப் பிரம்மத்தை அறிந்து அதனால் மோக்ஷமடைவதில் தவறவே மாட்டான் என்று அறிக.

*... தான் — அமர்இடம்ஆம்*

82. **ஆகம்தான் ஐம்பூத ஆகாரம் அங்கேயே**
**ஏகசிவன் தானும் இனி(து)அமர்வன் — பாகம்இலாது**
**எங்கும் உறுசிவம்முன் இத்தரைஈ(று) ஆம்உலகம்**
**சங்கரன் தன்உருவம் தான்*மெய்யே...***

தனது இருப்பிடமாகிய இத்தேகமானது பஞ்ச பூதங்களின் சேர்க்கையாலாகிய வடிவமாகும். ஏகனாய் விளங்கும் சிவனே இத் தேகத்தில் நன்கு வீற்றிருக்கின்றான். பிரிவுபடாமல் எங்கும் வியாபித்துள்ள

சிவதத்துவம் முதலாக இப்பூவுலகம் முடிய உள்ள ஸ்தூல சூக்ஷ்ம உலகங்களாகிய பிரபஞ்சம் முழுதும் அந்த சங்கரனது திருவடிவமேயாகும். இது சத்தியம் என்று அறிக.

*... – துங்கன் ஆம்*

83. இவ் அறிஞ னைக்கண்(டு) இசைகரணம் மூன்றானும்
செவ்வியகந் தம்கனிபூத் தீம்புகையும் – திவ்வியம்ஆம்
நீராடல் ஆடைஊண் நெஞ்(சு)உருகும் அன்பால்ஈந்து
ஆர்ஆரா தித்திடு வார்*பிறவி – சாராமல்*

84. அப்படியே வீ(டு)உறுவர் ஆருயிரே அம்முத்தி
மெய்ப் படியும் மார்க்க விருப்பம்உளார் – அப்புருடன்
பூசைபுரி வார்அன்னோன் புண்ணியத்தைப் பாவத்தை
ஏசுபவர் எய்திடுவார் எண்...

இசை – ஒத்து வருகின்ற; படிதல் – நிலைபெறும்.

ஆருயிரான பார்வதியே! மேலோனாகிய இத்தகைய ஞானியை தரிசித்து நல்ல வாசனையுள்ள பொருள்களையும், பழங்களையும், மலர்களையும், நறுமண தூபங்களையும், நீராடத் திவ்விய தீர்த்தத்தையும், உடை உணவுகளையும் உருகிய உள்ளத்து அன்போடு கொடுத்து யாரொருவர் ஒத்துவரும் மனோ வாக்குக் காயமெனும் முக்கரணங்களாலும் ஆராதிப்பார்களோ அவர்கள் அந்த சத்திய மோக்ஷ சுகத்தில் தோயும் வழியில் ஆவலுள்ளவர்களானால். அதற்கான வேறு சாதனாப்பியாசங்கள் ஒன்றுமின்றியே பிறப்பற்று மோக்ஷமடைவர். அந்த ஞானியை பூஜிப்பவர்கள் அவன் செய்யும் புண்ணியத்தின் பலனையும். அவனை நிந்திப்பவர்கள் அவன் செய்ய நேரும் பாபத்தின் பலனையும் அடைவார்கள் என்று அறிக.

*... என்(று)அவ் – ஈசன்*

85. அறிவுடன் ஆசாரம்எவை யாசிக்கப் பட்ட(து)
அறிவிக்கப் பட்ட(து)எனால் அந்த – நெறியாவும்
காலஞா னந்தான் கருத்தில்வே றேவினவற்
பாலதுஎது மாதே பகர்*என்றான்...*

என்று தேவிக்கு உபதேசித்த ஈசுவரன், "பெண்ணே! உன்னால் விரும்பிக் கேட்கப்பட்ட ஞானமும் அதற்கான ஆசாரமும் எவையோ. அவை இப்பொழுது என்னால் உனக்கு உபதேசிக்கப்பட்டது. இந்த ஆன்ம விசாரவழி யாவும் "காலோத்தர ஞானமே"யாகும். இனி நீ கேட்க வேண்டியதாக உன் மனத்தில் வேறு ஏதேனும் உளதோ, சொல்க" என்றான்.

*... — ஞாலம் உய்ய*

**முத்தன் ரமணன் மொழிபெயர்த்(து) ஈந்த ஈ(து)**
**உத்தமர் உள்ளத்(து) ஒளி.**

உலகத்தார் வீடு அடைந்து உய்வதற்காக (உப ஆகமங்களுள் ஒன்றாகிய ஸ்ரீ தேவிகாலோத்தரத்தின் ஞானாசார விசாரப் படலமாய் அமைந்துள்ள வடமொழி நூலை) முத்தராகிய ஸ்ரீ ரமணபிரான் தமிழில் மொழிபெயர்த்தருளிய இந்நூல் நல்லோர் உள்ளத்தில் ஞான ஒளியாக விளங்கும்.



இருப்பாக வுள்ள திதயத்தே யாண்டா
னருட்பாதம், அல்ல பிற.

ஸ்ரீ

## 2. சர்வ ஞானோத்தரம்

# ஆன்மசாட்சாத்காரப்பிரகரணம்

### சிறப்புப்பாயிரம்

(நேரிசை வெண்பா)

1. ஆன்ம சமான வருமைக் குமரனுக்கன்
றான்ம சொரூபசிவ னாய்ந்துரைத்தான் – மேன்மை
தகுசருவ ஞானோத் தரப்பகுதி யைச்சீர்
மிகுரமண மாமுனிவன் மீண்டு.

2. தத்தமெய் யான்மசாட் சாத்காரந் தாமடையக்
கைத்தலநெல் லிக்கனியாக் கட்டுரைத்தான் – சுத்த
சிவமயமாய் நின்றவருட் செல்வன்றன் னன்பர்
பவமயல் சாயப் பரிந்து.

ஆன்ம சொரூபமான சிவன், ஆன்ம சமானமான தன்னருமைக் குமரனுக்கு சருவ ஞானோத்தர மென்னும் உபாகமத்தை முன்பு ஆய்ந்துரைத்தான். அத்தகைய சுத்த சிவமயமாய் நிலைத்த சீர்மிக்க அருட் செல்வனும் மாமுனிவனுமாகிய ரமணன் தன்னன்பர்க்கு அன்னார்தம் பிறவி மயக்கங் கெடவும் தத்தம் நிஜ சொரூபமான ஆன்ம சாட்சாத்காரத்தைத் தாமடையவும் திருவுளமிரங்கி. மேன்மை படத் தக்க அதன் பகுதி (ஆன்ம சாட்சாத்காரப் பிரகரணம்) யாகிய இதனைக் கரதலாமலகம் போலத் தெளியப் பின்பு உறுதிப்பட உரைத்தான் என்க.

கனியாயடைய எனவும், பரிந்து சாய எனவும் கூட்டலுமாம். பரிந்து சாய்தல் – விரைந்தழிதல்.

### மங்கலம்

(கலி வெண்பா)

**ஆன்மஆம் ஈசன் குகனுக்(கு) அருள்செய்த
ஆன்மசாட் சாத்காரம் ஆகும்ஈது – ஆன்மாவாய்
என்அகத் தேஇருந்து இன்றுதமிழ் சொல்வான்அம்
முன்னவன் ஆய முதல்...**

முன்னவன் – பழமையானவன், புராதனமானவன்; முதல் – மூலப்பொருளானவன்.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— பரமான்மாவாய் விளங்கும் சிவபிரான் முருகனுக்கு உபதேசித்த 'ஆன்ம சாட்சாத்காரம்' எனப்படும் இந்நூலை, புராதனனும் எல்லாவற்றுக்கும் மூலமானவனுமான அந்தச் சிவபிரானே இன்று என் இதயத்தில் ஆன்மாவாய் இருந்து தமிழில் சொல்கின்றான்.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— ஆன்மாவாகிய இறைவன் (தன்னருமைக் குமரனாகிய) குகனுக்கு அன்று வடமொழியிலருளிய இவ்வான்ம சாட்சாத்காரப் பிரகரணத்தை முன்னவனாகிய அம் முதல்வனே ஆன்மாவாய் என்னுள்ளத்திருந்து இன்றும் அன்பர்க்கும் தமிழில் மொழி பெயர்த்தருளுவான்.

அகரத்தைப் பலரறிசுட்டாகக் கொண்டு, முன்னவனென்பதற்கு மூத்த பிள்ளையாரென்றும், அடியாரிடரகற்றி இட்ட சித்தி யெய்து விப்பதில் இறைவரெல்லாரினும் முன்னவனென்றும் கூறினுமமையும்.

நூல்

*... என்ன — மன்னல்உறும்*

1. **அன்னசிவன் பின்னும் அருள்வான் குகனேநிற்(கு)**
   **அன்னியம் சூட்சி அறைவன்மெய் — மன்னவே**
   **நிட்களமா யாவுளுமே நிற்பதாய் நுட்பம்அதுஆய்**
   **உட்கொள்ளப் போகாதே னும்***புகல — உட்கொள்*

2. **எதனால் அனுபவமாம் ஞானம்நன்(கு) எய்தும்**
   **எதனைஅறிந் தோன்சிவ னேஆம் — எ(து) எவர்க்கும்**
   **என்னால் சொலப்பட்ட(து) இன்(று)அவ்விஞ் ஞானத்தை**
   **என்னிடத்தி னின்றுகேள் இன்று...**

(தேவிக்கு உபதேசித்த) முழுமுதற் பொருளாக நிலைபெற்று விளங்கும் அதே சிவபிரான் மேலும் குகனுக்கும் பின் வருவனவற்றை உபதேசிக்கிறான்;—

குகனே! சத்திய வஸ்துவை அடைவதற்கு மற்றொரு உபாயம் உனக்குச் சொல்லித் தருகிறேன். நான் சொல்ல நீ கேட்டு உள்ளத்தில் தரித்துக் கொள். அது உருவற்றதாய், ஆனால் உருவ சிருஷ்டி எல்லாவற்றினுள்ளும் விளங்குவதாய், கிரகிப்பதற்கு முடியாதபடி அதிசூக்ஷ்மமான தொன்று என்றாலுங்கூட எந்த உபாயத்தால் ஞானம் அனுபவமாக நன்கு அடையப்படுமோ, எதனை அறிந்தவன் சிவனேயாவானோ, எது இதுவரை யாருக்கும் என்னால் சொல்லப்பட வில்லையோ, அவ் விஞ்ஞானத்தை (ஞானத்தின் சொரூபத்தை) இன்று என்னிடமிருந்து கேட்பாயாக.

*... யான் – பன்னியிடும்*

3. ஈதுகுரு பாரம் பரியத்துப் போந்ததாம்
வாதிகள்எல் லாம்காண வாய்க்காதாம் – ஈதுபவ
பந்தமுத் திப்பொருட் டாம்பரம மாம்முகமோ
எந்தத் தலத்தும்உள தே...

பன்னியிடும் – சொல்லப்படும்; முகம் – விளக்கம்.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– நான் சொல்லும் இந்த உபாயம் குருசிஷ்ய பரம்பரையில் மட்டுமே உபதேசிக்கப்பட்டு வந்ததாகும். வாதம் செய்யும் பண்டிதர்கள் எவராலும் காண முடியாததாகும். இது பிறவித் தளையினின்றும் விடுபடுவதற்கே ஏற்பட்டதாகும். இது மிகவும் சிரேஷ்டமானதாகும். இது எந்த விடத்திலும் விளக்க முடையதே யாகும்.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:– நான் சொல்லும் இவ் விஞ்ஞானம் குருபரம்பரையில் வந்ததும், வாதிகளெவராலுங் காணக் கிடையாததும், பவ பந்த விடுதலையாம் பயனுடையதும், யாவற்றிலும் சிறந்ததும், எவ்விடத்தும் முகமுள்ளதுமாகும்.

*... எவையும் – தந்தே*

4. எவன்எல்லா வற்றும் இருக்கும்இத் தேவன்
எவன்எல்லாம் ஆகி இருப்பன் – எவன்முகம்
எங்கும்உளான் எண்ணஒணான் தத்துவமெல் லாம்தானாய்
தங்கிஎலாம் மிஞ்சிஉளன் தான்*பலவாய்ப் – பங்குபடும்*

5. தத்துவங்கள் எல்லாமும் தான்கடந்தோன் வாக்கோடு
சித்தமும் நாமமும் சேராதான் – அத்தன்
அவன்நான் எனவிகற்பம் அற்றசித் தத்தால்
சிவசிந் தனையேநீ செய்*வாய்...*

எவையும் தந்தே – எல்லாவற்றையும் சிருஷ்டித்தும்.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– எல்லாவற்றையும் சிருஷ்டித்தவன் எவனோ. அச் சிருஷ்டிகள் எல்லாவற்றுள்ளும் இருப்பு (சன்) மாத்திரமாய் விளங்கும் கடவுள் எவனோ, எல்லாப் பொருள்களின் வடிவும் ஆகியிருப்பவன் எவனோ, எங்கும் காணும் முகமுள்ளவன் எவனோ, எண்ணத்திற்கு எட்டாதவன் எவனோ, எல்லாத் தத்துவங்களிலும் தானே நிறைந்து நின்று எல்லாவற்றுக்கும்

அப்பாலும் உள்ளவன் எவனோ. பல்வேறு பாகுபாடு உடைய எல்லாத் தத்துவங்களுக்கும் எட்டாது கடந்து நிற்போன் எவனோ, வாக்கும் மனமும், பெயரும், இல்லாதவன் எவனோ, தலைவனாகிய அப்பரம் பொருளே நான் என்று பேதமற்ற ஏக பாவனையால் நீ சிவத்தியானமே செய்வாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:- எந்தத் தேவன் எல்லாவற்றிலும் நிறைந்திருப்பனோ, எல்லாவற்றுக்கும் ஆன்மாவாயிருப்பனோ, எங்கும் முகமுள்ளவனோ, நினைக்க முடியாதவனோ, எல்லாத் தத்துவங்களும் தானேயாத் தங்கி (பிறவெல்லா மழியவும் தான் மட்டு மழியாது) மிஞ்சியுள்ளவனோ, (எவன்) எல்லாத் தத்துவங்களையுந்தான் கடந்தவனோ, வாக்கு மனமும் பெயரும் இல்லாதவனோ, அந்தப் பரமனே நான் என நிர்விகற்ப சித்தத்தால் நீ சிவத் தியானஞ் செய்யக் கடவை.

*... – நவநவமாய்*

**6. என்றும்உள தாய்நிலையாய் அவ்யயமாய் எவ்விகற்பும்**
**இன்றியதாய் இன்னதுஎன எண்ணஒணாது – ஒன்றியுள**
**நிட்களம்ஆம் ஞானம் எதுதான் நிகழுமுதல்**
**திட்டாந்தம் இன்றியதாய்த் தேர்...**

ஒன்றியுள – கலந்துள்ள.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:- என்றும் புத்தம் புதிதாக உள்ளதாய், அழிவற்று நிலைத்துள்ள பொருளாய், எவ்வித பேதமும் இல்லாததாய், இன்ன தன்மையது என்று மனத்தால் சிந்திக்க முடியாததாய், உருவற்று ஏகமாய்ப் பொருந்தியுள்ள ஞானமயப் பொருள் எதுவொன்று விளங்கிக் கொண்டிருக்கிறதோ அதை காரணமும் சமானமும் அற்றதாக அறிக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:- பொருந்தியுள்ள எந்த நிஷ்கள ஞான சொரூபம் என்றுமுள்ளதாய், நிலைபெற்றதாய், குறைவற்றதாய், எவ்விகற்பமுமில்லதாய், இதுவென மனத்தாற் சுட்டப் படாததாய் நிகழுமோ, அதனைக் காரண வுவமைகளற்றதா யறி.

*... தரச் – சுட்டும்*

**7. அடையாளம் அற்றுஅழி(வு)அற்று ஆரும்உப சாந்தம்**
**விடயம் கடந்(து)ஒளிர் வேத்யம் – மடுக்காது**
**பாவனைக்(கு) ஐயம் படரா(து) அதுவேநான்**
**ஆவன்இதில் ஐயம் இலைஏதும்...**

மடுக்காது – எட்டாமல்; தர - உணர்த்த.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– அறிந்து கொள்ளும்படிச் சுட்டிக் காட்டப்படும் யாதொரு அடையாளமுமற்றதாய், அழிவற்றதாய், உபசாந்த வடிவாய், புல விஷயங்களைக் கடந்து அப்பால் விளங்கும் அறிவாய், நினைப்புக்கு எட்டாததாய், சந்தேகிக்க முடியாத இருப்பு மாத்திரமாய் உள்ளது எதுவோ அதுவே நானாகின்றேன். இதில் கொஞ்சமும் சந்தேகம் இல்லை.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:– மேலும் குறியற்று அழிவற்று நிறையுமுபசாந்தமாய், விடயங்கடந்து விளங்கும் விடயமாய், பாவனைக் கெட்டாததாய், ஐயமெழாதது மாமோ அதுவே நானாவன். இதில் சிறிதும் ஐயமில்லை.

*... – ஓவல் அறும்*

8. **அந்தப் பரதெய்வம் ஆகும் சிவன்நானே**
**மந்திரங்கள் யாவின் மயனும்அம் – மந்திரங்கள்**
**எல்லாங் கடந்தே இலய சிருட்டிகள்**
**இல்லா தவனும்ஆ மே...**

ஓவல் அறும் – துறக்க முடியாத, விடமுடியாத.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– யாராலும் வேண்டாம் என்று தள்ள முடியாத அந்தப் பரம தெய்வமான சிவன் நானேயாகும். நான் சகல மந்திர சொரூபியும் ஆவேன். மேலும் சகல மந்திரங்களையும் கடந்து தோற்ற மறைவு அற்று எப்போதும் விளங்குபவனும் நானே.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:– அந்தப் பரதெய்வமாகும் சிவனும் எல்லா மந்திரங்களின் வடிவமாவோனும், அம் மந்திரங்களெல்லாம் கடந்து ஆக்கலழித்தல் அற்றவனும் நானேயாம்.

*... எனைவிட்(டு) – இல்லாத்*

9. **திருசியம் சூன்யம் திரம்சரமும் என்னால்**
**பரவிடப் பட்டன வாம்இச் – சருவமும்**
**நானே உலகத்தின் நாதன்எல் லாம்என்னால்**
**தானே இலகுவன தாம்...**

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– என்னை விட்டுவிட்டு தாமாகவே ஓர் இருப்பு இல்லாத அறிபடுபொருள்களும் அறிபடாப் பொருள்களுமான இந்த சராசரம் முழுவதும் என்னால் வியாபிக்கப்

பட்டனவே யாகும். நானே இவ்வுலகத்தின் ஈசன். எல்லாப் பொருள்களும் என்னாலேயே விளங்குகின்றன.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— காண்பதும் காணப்படாததுமான இவ்வெல்லாச் சராசரங்களும் என்னால் நிறையப் பெற்றனவாம். நானே யுலகங்களுக் கெல்லாம் தலைவன். அவை யாவும் என்னாலேயே விளங்குனவாம்.

*... ஒவ்வா(து) — ஆன*

**10. விவித உருவத்தால் வேறுவே றாய**
**புவன நிரைகள் பொருந்திச் — சிவமுதல்**
**இவ்வுலகம் ஈறாய் இலகும் பிரபஞ்சம்**
**அவ்வளவும் என்னில்நிற்ப வாம்...**

ஒவ்வாதான — ஒன்றுக்கொன்று மாறுபட்ட

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— தம்முள் ஒன்றுக்கொன்று மாறுபட்ட பலவித வடிவங்களால் நிறைந்த வெவ்வேறு அண்ட கோளங்களின் வரிசைகளாய், சிவ தத்துவம் முதல் இப்பூவுலகம் வரை விளங்கும் பிரபஞ்சம் அனைத்தும் என்னிடத்திலேயே நிலைபெற்று இருக்கின்றன.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— நானாவித வடிவத்தால் பல்வேறு வகைப்பட்ட புவனக் கூட்டமும். இறைவன் முதல் இவ்வுலகு பரியந்தம் விளங்கும் பிரபஞ்சமனைத்தும் என்னிடத்தே பொருந்தி நிலைத்திருப்பனவாம்.

புவனப் பிரபஞ்சங்கள் முறையே சங்கேதத்தால் பகுதி தொகுதிகளைக் குறிப்பனவாகக் கொள்க.

*... நேரே — செவ்வை ஆய்*

**11. எவ்வளவு காணப் படுபவோ இவ்உலகில்**
**எவ்வளவு கேட்க இயைபவோ — உள்வெளி**
**பற்றிஒளிர் யாவும் பராவும்என் னால்பரவல்**
**உற்றவை யாம்அவை என்(று)ஓர்...**

இயைபவோ — கூடியதோ; பராவும் — துதிக்கப்படும்.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— இவ்வுலகத்தில் கண்ணெதிரே எவ்வெப் பொருள்கள் நன்றாய்க் காணப்படுகின்றனவோ, மேலும் எவையெவை கேட்கப் படுகின்றனவோ உள்ளும் புறத்தும் இருந்து

விளங்கும் அவை யாவும், போற்றப்படும் என்னால்தான் வியாபிக்கப்பட்டிருக்கின்றன என்று அறிக.

(காண்டல், கேட்டல் போலவே ஏனைய சுவைத்தல், நுகர்தல், ஸ்பரிசத்தல் என்னும் புலன்களும் அறிபடுவனவும் இதில் சேரும்.)

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— இவ்வுலகில் எவ்வெவை காணப்படுவனவோ அன்றிக் கேட்கப்படுவனவோ உள்வெளி பற்றி விளங்கும் அவையாவும் ஸர்வ வியாபகமான என்னால் வியாபிக்கப்பட்டனவா மென்றறி.

சிறப்புப் பற்றி கண்டு கேட்கப் படுவனவே கூறினாரேனும், உபலக்ஷணத்தா லுண்டுயிர்த்துறப் பெறுவனவும், உள்ளமும் ஒரோவழி ஞானேந்திரியங்களிற் சேர்த்தெண்ணப் படுதலாலும் உள் வெளி பற்றி யொளிர் யாவும் என்றதனாலும் உள்ளத்தாலுள்ளப் பெறுவனவும் உடன் கொள்க. இம் மூன்று திருவெண்பாவானும் ஆன்ம சொரூபமான சிவபரிபூரணம் கூறப்பட்டது.

*... உணர்தற்(கு) — உற்றவனாம்*

**12. ஆன்மாயான் என்னினும் அப்பரம் ஆன்மாவாய்த்
தான்மேவ உன்னுசிவன் தான்வேறு — மால்மேவி
இவ்வாறு உபாசிப்போன் எய்தான் சிவத்துவம்
அவ்ஆற்ற லால்என்(று) அறி...**

மேவ — இருக்க; என்னினும் — அப்படியிருந்தாலுங்கூட; மால்மேவி — மயக்கமடைந்து..

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— அறியப்படவேண்டிய ஆன்மா 'நான்' என்பதே என்றாலும், அந்தப் பரமாத்மாவாகத் தான் ஆவதற்குத் தான் தியானிக்கும் சிவன் வேறு, தான் வேறு என்று இவ்வாறு மயக்கமுற்று துவைத உபாசனை புரியும் ஒருவன் அவ்வுபாசனா பலம் எவ்வளவு பெற்றிருந்தாலும், அதனால் சிவத்துவத்தை அடையவே மாட்டான் என்று அறிவாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— தான் ஆன்மாவெனவும். அப்பரமான்மாவாய்த் தானடையக் கருதும் சிவன் தன்னினும் வேறெனவும் இவ்வாறு மோகங் கொண்டு துவித பாவத்தா லுபாசிப்போன் அவ்வுபாசனை வலியாற் சிவத்துவ மடையான் என்றறி

ஓதரிய துவிதமே யத்துவித ஞானத்தை யுண்டுபணு ஞானமாகும் என்றான்றோர் கூறியாங்கு துவித பாவனை நாளடைவில் வலுப்பட்டு

அத்துவித ஞானத்தை யுண்டாக்கல் வாயிலா யன்றி சிவத்துவ மடைவிக்கும் ஆற்றல் அதற்கு நேரே யில்லை யென்பது கருத்து.

*... அதனால் — எவ்வாற்றும்*

**13. அன்னிய னாம்சிவன் அன்னியன்நா னேஎன்னும்**
**பின்னபா வத்தைப் பெயர்த்திடுக — அன்னசிவன்**
**ஆவன்யா னேஎன்னும் அத்துவிதம் ஆகும்இப்**
**பாவனையே என்றும் பழகுக...**

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— அதனால் "சிவன் எனக்கு அன்னியனாகும். நான் சிவனுக்கு அன்னியனாவேன்" என்ற பேத பாவத்தை எப்படியும் விட்டொழிப்பாயாக. "அந்தப் பரமாத்மாவான சிவன் நானே" என்னும் இருமையற்ற ஏக பாவனையையே எப்போதும் பழகுவாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— (ஆதலால்) சிவன் என்னினும் வேறு, நானும் அவனினும் வேறு என்னும் வேறுபாட்டுணர்வை ஒழித்தவனாய் அந்தச் சிவன் நானேயாம் என்னும் இவ்வத்துவித பானையையே நீ யென்றும் பழகு.

நேரே சிவத்துவ மடைவிக்கும் ஆற்றல் பின்னபாவத்துக் கின்மையின் அதனைப் பெயர்த்திடுகவெனவும். அத்துவித பாவனை பாவனாதீதமான அச்சிவ சொரூபத்தை எளிதில் நேரே யடைவித்தலின் அதனையே பழகெனவுங் கூறினார்.

*... — ஓவல் அற்(று)*

**14. அத்துவித பாவனையே ஆர்ந்தோனாய் எவ்விடத்தும்**
**நித்தமும் ஆன்மாவில் நிற்கும்அவன் — அத்தனையே**
**எல்லாவற் றும்தனுக்கள் யாவின்உள்ளும் காண்பன்**
**இல்லைசந் தேகம் இதில்*அணுவும்...***

ஓவல் அற்று — இடைவிடாது.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— இடைவிடாமல் அத்வைத பாவனையையே அப்பியசிப்பவனாய் எல்லா தேச காலத்திலும் ஆன்மாவிலேயே நிலைபெற்று இருக்கும். ஒருவன் எல்லா வஸ்துக்களிலும் தேகங்கள் எல்லாவற்றினுள்ளும் அந்தத் தலைவனான சிவனையே காண்பான். இதில் அணுவளவும் சந்தேகமே இல்லை.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— அத்துவித பாவனையே பொருந்தியவனாய்

எங்கும் என்றும் ஆன்மாவின் கண்ணே நிலைத்திருப்பவன் எல்லா உருவங்களிலும் எல்லா வுடலங்களிலும் அந்தச் சிவனையே தரிசிப்பன். இதில் ஐயமில்லை.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்றார் நாயனாரும் பல்வேறு தன்மையவாய தனுகரணபுவன போகங்கள் யாவற்றுள்ளும் ஒரு படித்தாகப் பரமான்மசொரூபத்தையே காண்டற்குபாயம் 'அத்துவித பாவனையே யார்ந்தோனாய் எவ்விடத்து நித்தமுமான்மாவினிற்குமவன்' எனக் காண்பானுக்கடைமொழி யாக்கி உடம்பொடு புணர்த்துக் கூறப்பட்டது. பாசபந்தமான உலகைப் பரங்கருணைக்கடலான இறைவன் ஏன் படைக்க வேண்டும் என்னும் வினாவுக்கு விடையாக, உலகு பாசபந்தமன்று; அத்தகைய விபரீதக் காட்சியே பாசபந்தமாவது. ஆதலின், அந்தர்முகப்பட்டு நானாரெனத்தன் சொரூபத்தை விசாரிக்குமாற்றால் இயல்பான சொரூபாகாரமாகக் காட்சியை முதலில் மாற்றி, என்றும் சொரூபாகாரமாகவேயுள்ள உலகைப் பின்னர்க் காணட்டும் என உலகினுண்மை மறைமுகத்தாலுணர்த்துவது இத்திருவெண்பா. காண்பான் நிழலே காட்சியாதலின், தேகான்ம புத்தியாற் சடவுடலில் நிற்பவனுக்கு அவன் காணும் உடலுலகங்கள் யாவும் அவ்வாறே பூதபௌதிகங்களாகக் காணுமாறு போல. அத்துவித பாவனையால் ஆன்ம சொரூபத்தில் நிற்பவனுக்கும் அவையாவும் பரமான்ம சொரூபமாகவே தோன்றும் என்பதாம்.

"உருவந்தா னாயி னுலகுபர மற்றா
முருவந்தா னன்றே லுவற்றி – னுருவத்தைக்
கண்ணுறுதல் யாவனெவன் கண்ணலாற் காட்சியுண்டோ
கண்ணதுதா னந்தமிலாக் கண்".

என்னும் உள்ளது நாற்பது ஈண்டைக்குய்த்துணரத் தக்கதாம்.

*... – எல்லையற்று*

**15. ஏகம்ஆம் இவ்ஆன்ம பாவனையோ(டு) என்றும்உளான்**
**மோக விகற்பம் முனிந்தோனாம் – யோகிக்குச்**
**செவ்வேஎல் லாம்உணர்தல் செப்பப்பட் டுள்ளதாம்**
**அவ்வேதம் தன்னில் அறி*வாயே...***

முனிந்தோனாய் – விட்டொழித்தவனாய்

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– இந்த அகண்ட ஏகாத்ம பாவனையோடு எப்போதும் நிலைத்தவனாய், மயக்கத்தையும் பேதத்தையும்

விட்டொழித்தவனாய் உள்ள யோகிக்கு சர்வக்ஞத்வம் நன்றாக சித்திக்கும் என்று வேதங்களில் சொல்லப்பட்டுள்ளது என்று அறிவாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— என்றும் இவ்வத்துவித ஆன்ம பாவனையோடுள்ளவனும் மயக்கத்தாலெழுந்த துவித புத்தியைத் துறந்தவனுமாகிய யோகிக்கு அவ்வேதத்தில் முற்று முணர்தல் நன்கு கூறப்பட்டுள்ளதாம்.

எல்லாம் ஆன்ம சொரூபமே யாதலாலும், அதனைத் தவிர்த்து அயலொன்று மின்மையாலும் அவ்வான்ம பாவனையோடென்று முள்ளவன் எவற்றை யறிய வேண்டி மனத்தைச் செலுத்தினும் அவற்றை யெல்லா முணர்தல் எளிதென்பதாம். எனினும் எல்லா மென்பதொன்று மாயைக் கண்ணன்றி உண்மையிலின்மையானும், அம் மோக விகற்ப முனிந்த பரமான்ம யோகி தனக்கயலொன்றுங் காணாமையானும், விடயங்கள் புலப்படுங்காலும் அவற்றைப் பொருளா யெண்ணி. அவன் அவற்றின் வழித் தன் மனத்தைச் செலுத்தான் என்க.

*... — வெவ்வேறாம்*

**16. சாத்திரங்கள் யாவற்றும் சன்மம்இலன் ஈசன்என**
**ஏத்திடப் பட்டான் எவனோஅக் — காத்திரம்இல்**
**லான்குணம்இல் லான்ஆன்மா வாம்அவனே ஆவேனே**
**யான்சிறிதும் ஐயம் இலைஇதனில்...**

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— பலவகை நூல்கள் அனைத்திலும் பிறப்பற்றவன் என்றும், ஈசன் என்றும் எவன் போற்றப் படுகிறானோ, அசரீரியும் குண தோஷமில்லாதவனும் ஆன்மாவும் எவனோ அவனே நானாக இருக்கிறேன். இதில் கொஞ்சமும் சந்தேகம் இல்லை.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— ஜன்மமிலன் எனவும் ஈசன் எனவும் உடலிலன் எனவும் குணமிலன் எனவும் எல்லா மறைகளிலும் எவ்வான்மா துதிக்கப் பட்டானோ அவன் நானே யாவன்; ஐயமில்லை.

*... — ஆன்மாவாம்*

**17. தன்மெய் அறியா தவனே சிருட்டிமுதல்**
**தன்மம் உறுபசு தான்ஆவன் — தன்மெய்**
**எவன்அறிவன் என்றும் இருப்பான் விசுத்தன்**
**சிவன்அவனே ஐயம்இலை தேர்*வாய் — பவம்ஏது...***

பசு – ஜீவன்

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– ஆன்மாவாகிய தனது உண்மையை எவன் அறியவில்லையோ அவனே ஜனனம் முதலிய தர்மங்களையுடைய ஜீவனாவான். ஆனால் எவன் தனது உண்மையை (ஆன்மாவை) அறிவானோ அவன் நித்தியன், மலமற்ற பரிசுத்தன்; அவனே சிவன். இதில் சந்தேகமே இல்லை என்று அறிவாயாக. அவனுக்கு அதன்பின் பிறப்பு ஏது? (இல்லை என்பதாம்.)

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:– தன்னுண்மை யறியாதவனே படைப்பு முதலிய தொழில்களுக்குட்பட்ட பசு (ஜீவன்) ஆவன். தன்னுண்மை யெவனறிவனோ அவனென்று மழியான் விசுத்தன், அவனே சிவன். இதில் ஐயமில்லை.

சிருட்டி முதற்றன்மம் பிறத்த லுயிர்த்தலிறத்தல் மயங்கல் தெளிதல் என்பன. பாசத்தாற் கட்டுண்டோன் பசு. பாசம் அநித்த ஜட துக்கமாக ஆன்மாவை மருட்டும்அசுத்த மாயை. அஃதற்றவன் விசுத்தன். சிவன். மங்கல மயன் மத யானை குப்பையை வாரித் தானே தன்றலையிற் போட்டுக் கொள்ளுமாறு போலத் தன் மெய்யறியாதவன் தனதல்லாத உடலுயிர்த் தன்மங்களைத் தன்மேலேற்றி மலினமுற்றுச் சம்சாரத்துக்குள்ளா யழிதலின் 'அவன் சிருட்டி முதற் றன்மமுறு பசுதானாவன்' எனவும், தன் மெய்யறிந்தவன் தன்னிற்றானமைந்து தன்னியல்பான உண்மையறிவின்பமா யொளிர்தலின் 'என்று மிருப்பான் விசுத்தன் சிவனவனே' எனவும் கூறினார். அஞ்ஞான ஞானங்களே பந்த மோக்ஷங்க ளென்பதாம்.

**18. அதனால் விவேகிகள் ஆனோர்நன்(கு) ஆய்ந்து**
**நிதம்அறியத் தக்க(து)ஆன் மாநேர் –அதுவே**
**பரஅபர பேதம் பருமைஅணு பேதம்**
**இருவிதமு மாய்இலகு மே*காண்...***

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– ஆகையால் விவேகிகள் தினமும் நன்றாக விசாரித்து, பிரத்தியட்சமாய் அறியத்தக்க வஸ்து ஆன்மாவேயாகும், அவ்வான்மாவே பரம்-அபரம் என்ற பேதத்தோடும், ஸ்தூலம் - சூக்ஷ்மம் என்ற பேதத்தோடும் இருவிதமாய் விளங்கும். அவைகளைக் காண்போம்.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:– அதனால் விவேகிகள் நன்றாயாராய்ந்து இடைவிடா தறியத் தக்கது ஆன்மாவே. பராபர பேதம், தூல சூக்கும பேதம் என்னும் இருவிதமாகவும் அதுவே யெதிரிற் றோன்றும்.

நேரறியத் தக்கதெனக் .கூட்டி அபரோக்ஷமா யறியத்தக்க தெனலுமாம். சொரூபம் தன்னியல்பில் அணுவளவு பேதமுந் தோன்றப் பெறாதாகவும் அந்நிலையிற் பிறழ்ந்த பிரமாதத்தால் அநேக விதங் கண்டறிவு கலங்கும் பேத மதியாளர்க் கபேத மறிவுறுத்தவேண்டுதலால் அவ் விவிதங்களெல்லாம் உண்மையில் ஆன்ம சொரூபமான ஈசனோடபின்ன சத்தியான மனத்தை யன்றி யின்மையின், அம் மனத்தோ டான்மாவுக்குள்ள இயைபு பற்றி, அதுவே பரவபர பேதம் பருமையணு பேதமிரு விதமு மாயிலகும். என உபசார வகையா லிவ்வாறு கூறப்பட்டது.

*... – மருவும்*

**19. பரமநிர் வாணம் பரம்ஆம் அபரம்**
**சிருட்டி வகையால் திகழும் – பருமையாம்**
**மந்திரரூ பம்பகர்வர் சூக்குமம் மாறாத**
**சிந்தையில் நின்றதாத் தேர்*ந்திடுக...***

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– அடையப்படும் பர நிர்வாண (நாமரூபமற்ற) நிலையே ஆன்மாவின் பரநிலை எனப்படும், சிருஷ்டியாதி ஐந்தொழில்களோடு விளங்கும் ஈசுவரனே ஆன்மாவின் அபர நிலை யெனப்படும். மந்திர வடிவங்கள் ஆன்மாவின் ஸ்தூல ரூபம் ஆகும் என்று கூறுவர். நிலை பெற்ற மனத்தில் விளங்கும் ஆன்ம ஸ்புரணமே ஆன்மாவின் சூக்ஷ்மரூபம் என்று தெரிந்து கொள்க.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:– பரம நிர்வாணம் ஒன்றே (தன்னியல்பால்) பரமாகவும், படைப்பு வகையால் அபரமாகவும் ஒருங்கே விளங்கும். தூலம் மந்திர வடிவாகவும் சூக்குமம் இடைவிடாத் தியானத்தில் நிலை பெற்றதாகவும் அறிந்தோர் கூறுவர்.

*... – சிந்தையாம்*

**20. அஃதுஇன்றி ஆறு முகனே அனந்தவிதம்**
**எஃதுஉரைத்தும் என்ன இயம்புதி – அஃது**
**வியக்கத் தகும்சொல் விசித்திரமே புத்தி**
**மயக்கத்திற்(கு) ஏது மதி*யாய்...***

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– ஆறுமுகனே! தியானிக்க வேண்டிய அந்த ஸ்புரணரூப ஆன்மாவைத் தவிர அநேகவிதமாக எதை விவரித்துக் சொல்லித்தான் பயன் என்ன? நீயே சொல். அப்படி இதர தத்துவங்களை விவரித்துக் கூறுவதெல்லாம் ஆச்சரியப்படத் தக்க

சொற்சாதுரியமே என்றும் மேலும் அது புத்தியைத் தடுமாறச் செய்யும் வழியே என்றும் அறிவாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— ஆறுமுகனே. அது வல்லது பலபடியாக யாதுரைத்துந்தான் அதனாற் பயனென்ன சொல். அது முற்றும் வியக்கத் தகுஞ் சொல் விசித்திரமும் மதிமயக்கத்துக்குக் காரணமுமேயாம்.

*... — நயக்கும்*

**21. தருமங்கள் யாவும்ஆன் மாவின்கண் தங்கும்**
**நிருமிப்பன் யாது(ம்) நினைப்பால் — ஒருமையாய்**
**உன்னிஉன்னி என்றும்அதை உற்றிடுவன் அஃதுஅதனை**
**என்னும்இதில் ஐயம் இலை*ஏதும்* - *மன்னுகமெய்***

நயக்கும் — விரும்பும்; அஃதுதனை — அது அதை.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— விரும்பும் எல்லாவித (சிருஷ்டி முதல் சகலமுமான) தர்மங்களும் ஆன்மாவிலேயே இருக்கின்றன. (ஜீவன்) தன் நினைப்பினால் எல்லாவற்றையும் சிருஷ்டிக்கின்றான். பிறகு அவைகளை எப்போதும் ஏகாக்கிரமாக நினைத்து நினைத்து அவையவைகளை யடைகின்றான் என்று சொல்லப்படும் என்னுடைய இக்கருத்தில் யாதொரு சந்தேகமே இல்லை. ஆகையால் இந்த சத்திய ஆன்மாவையே (நினைத்து நினைத்து அதை) அடைவாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— தருமங்கள் (தன்மைகள், குணங்கள்) யாவும் ஆன்மாவினிடத்துள்ளன. எதனையெதனை நினைப்பு மாத்திரத்தால் கற்பிப்பனோ அதனையதனை ஒரு மனப்பாட்டாலிடை விடாதெண்ணி யெண்ணி (அவ்வாற்றால் முடிவில்) அதனையதனை யடைவன். இதில் ஐயமில்லை.

**22. இப்படி ஆன்மவிஞ் ஞானம்என்(று) என்னாலே**
**செப்பிடப் பட்டது சேர்த்(து)உருட்டி — எப்படியும்**
**எல்லாமும், ஆன்மமயம் என்(று)ஓர்ந்தே ஆன்மசிந்தை**
**வல்லானாய் என்றுமே வாழ்*வாயே...***

சேர்த்து உருட்டி — ஒன்று திரட்டி.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— நீ அறிய வேண்டிய யாவற்றையும் ஒன்று திரட்டி ஆன்ம விஞ்ஞானம் என்று என்னாலே இப்படிச் சொல்லப்பட்டது. ஆகையால் எப்படியும் சர்வமும் ஆன்ம மயமே

என்று அறிந்து நீ அந்த ஆனமத்தியானத்தில் சமர்த்தனாய் என்றென்றும் வாழ்வாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— ஆன்ம விஞ்ஞானம் இப்படிப்பட்டதென்று என்னாலே (வெண்ணெய் போலச்) சேர்த்துருட்டிச் (சுருக்கிச்) சொல்லப்பட்டது. எல்லாப் படியாலும். எல்லாம் ஆன்மமயம் என்றறிந்து ஆன்மத் தியானத்தில் உறுதியுடையோனாய் நீ என்றுமே வாழ்.

*... — பல்லா(று)ஆம்*

**23. தெய்வமோ வேதமோ தீயில்செய் வேள்வியோ**
**செய்வகையில் சேர்பலவாம் தட்சிணையோ — எவ்வகையும்**
**அங்(கு) இல்லை நின்மலமாய் எங்கும்முகம் ஆர்ந்ததாய்த்**
**தங்(கு)ஆன்ம விஞ்ஞானம் சார்*வாய்நீ...***

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— உபாசிக்கும் பலவிதமான தெய்வங்களோ, ஓதும் வேதங்களோ, அக்கினியில் செய்யும் யாகங்களோ அந்த யாகங்களைச் செய்யும் வகையில் இயற்ற வேண்டிய பலவகைப்பட்ட காணிக்கைகளோ ஏதொன்றும் அவ்வான்ம விஞ்ஞானத்தில் சிறிதும் இல்லை. நிர்மலமாகவும் எங்கும் காண வல்லதாகவும் விளங்கும் இவ்வான்ம விஞ்ஞானத்தையே நீ அடைவாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— தெய்வமும். வேதமும். தீயிற் செய்யும் யாகமும் அதனைச் செய்முறையிற் பொருந்தும் பலவாகிய தட்சிணையும் இவையாவும் ஆங்கில்லை. (அதனால் அவற்றிற் பொருந்திய மதிமயக்கத்தை மாற்றி) நின்மலமும் எங்குமுகமுள்ளதுமான அவ் வான்ம விஞ்ஞானத்தை யடை.

*... — பங்க*

**24. மரணபவ சம்சார மாக்கடல் மூழ்கிச்**
**சரணம்நா டிச்சார் உயிர்க்குச் — சரணம்**
**அருள்வ(து)அவ் ஆன்மவிஞ் ஞானத்தை அன்றி**
**ஒருபொருள்வே(று) இன்(று)எனவே ஓர்க...**

பங்க — கேடுதரும்.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— கேடுதரும் இறப்பு, பிறப்பு ஆகிய சம்சார மகா சமுத்திரத்தில் மூழ்கி அபயம் தேடி வந்தடையும் உயிர்களுக்கு,

அபயம் கொடுக்கக் கூடியது இந்த ஆன்ம விஞ்ஞானத்தைத் தவிர வேறொரு பொருளுமே இல்லை என்று அறிக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— பிறப்பிறப்பு வடிவான சமுசாரப் பெருங்கடலில் மூழ்கி (அதனின்று கரையேற) புகலிடந் தேடியடையும் உயிர்த் தொகைக்கு புகலிடமுதவுவது அவ்வான்ம விஞ்ஞானத்தைத் தவிர வேறொரு பொருள் இல்லை.

அஞ்ஞானமென்னும் அநான்ம ஞானத்தின் காரியமான மரணபவ சம்சாரம் அதற்குப் பகையாகிய ஆன்ம ஞானத்தா லன்றி யழியாதென்பதாம் (அநான்ம ஞானம் = நானாவாய்த் தோற்றும் அயலறிவு.)

*... — திரம் ஆம்*

**25. பரம்ஆகி அப்பரம ஆன்மாவை யாவன்**
**உரமாக உள்ளபடி ஓர்வன் — ஒரு முயல்வும்**
**இன்றிஅவன் வீ(டு)உறுவன் எல்லா அவத்தைகளும்**
**ஒன்றிடுவ னேனும் உணர்*ந்திடுக...***

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— எவனொருவன் அந்தப் பரமான்மாவை அது உண்மையாக உள்ளவாறே திடமாய் அறிந்து அதனால் அந்த நிலைத்த பரம் பொருளாகவே இருக்கின்றானோ. அவன் எல்லாவித அவஸ்தைகளையும் வாழ்வில் அடைந்த பொழுதிலும் ஒருவித முயற்சியும் இல்லாமலேயே மோக்ஷத்தை அடைவான் என்று உணர்ந்து கொள்க.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— பரமான்மாவாகிய தன்னை (அவ்வாறே) பரமாக, எவன் உறுதியா யுள்ளபடி யுணர்வனோ அவன் எல்லா அவத்தைகளிலும் பொருந்துவானேனும் ஒரு முயற்சியுமின்றியே (அச் சமுசார பந்தத்தினின்று) விடுதலையடைவான்.

கற்பனையான உலக நோக்குற்றவர்க்குப் பரம நிருவாணம் துரியம் (நான்காமவத்தை) ஆயினும் உண்மையான பரமான்ம ஞானம் உரமாயுற்றுவனுக்கு அது ஏனையவத்தைக ளெல்லாவற்றினும் ஒக்கக் கலந்த இரண்டற்ற அதீதமாதலின் பிறவவத்தைகளைப் பிறர் போலத் தானுங் காண்போனாகக் காணப்படினும் அவன் உண்மையில் அவ் வெல்லாவற்றினும் தன் சொரூபமான அவ்வதீதத்தையே காண்டலின் ‘எல்லாவவத்தைகளுமொன்றிடுவனேனும் ஒரு முயல்வு மின்றியவன் வீடுறுவன்’ எனக் கூறினார்.

"ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து". (குறள் - 353)
என உத்தர வேதமோதல் காண்க.

... - *வென்றிசேர்*

**26. ஆன்மலா பத்தினும் அன்னிய மாம்பேறு**
**தான்மற்றொன்(று) எங்குமே தான்இல்லை – ஆன்மாவை**
**என்றும்உபா சித்திடுக இவ்ஆன்மா யாவன்அவன்**
**ஒன்றுபர மான்மாவாம் ஓர்*உளத்(து)* – *என்றுமே...***

வென்றி – வெற்றி; சிறப்பு வென்றிசேர் – சிறப்புமிக்க.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— சிறப்புமிக்க ஆன்மாலாபத்தைவிட வேறு ஒரு லாபம் எதுவுமே எங்குமே இல்லை. ஆகையால் நீ எப்பொழுதும் ஆன்மாவையே உபாசிப்பாயாக. இந்த தேகத்தில் பற்றின்றி விளங்கும் ஆன்ம சொரூபம் எதுவோ அதுவே ஏகமான பரமாத்ம சொரூபமும் ஆகும் என்று எப்போதும் உள்ளத்தில் கொள்க.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— ஆன்ம லாபத்தினும் அன்னியமான லாபம் எங்கும் (தேடினும்) பிறிதொன்றில்லை, (அதனால் அறிஞன்) அவ்வான்மாவையே என்று முபாசிக்கக் கடவன். எவன் இவ்வான்மாவோ அவன் இரண்டற(ப் பொருந்திய) பரமான்மாவாம்.

எவன் இவ்வான்ம சாக்ஷாத்காரம் பெறுவனோ அவன் அத்துவிதீயமான பரமான்மாவாம் என்றபடி.

**27. அல்ல பிராணன் அபானனுமே அன்(று)அவ்வா(று)**
**அல்ல அவற்றின்மேல் ஆம்கரணம் – எல்லாம்**
**உணர்வதுவாய் உள்ளபரி பூரணமாம் ஆன்ம**
**எணம்நிதமும் எய்துவா *யேநீ...***

எணம் – எண்ணம்; மேலாம் – சிறந்த.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— (ஆன்மா) பிராணன் அல்ல. அபானனும் அல்ல. அவ்வாறே அவைகளினும் சிறந்த பொறி. புலன். மனம் ஆகிய அந்தக் கரணங்களும் அல்ல. இவை அனைத்தையும் அறிவதாய் இருக்கின்ற பரிபூரண வஸ்துவேயாகும். அப்படிப்பட்ட ஆன்ம சிந்தனையே நீ எப்பொழுதும் கைக்கொள்வாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— பிராணனும் அபானனும் அவ்வாறே அவற்றின் மேலாம் அந்தக் கரணமும் (ஆன்மா) அ்லல. (ஆதலால்) எல்லா முணர்வதுவும் ஒன்றாயுள்ள முழுமுதலும் ஆகிய அவ்வான்மத் தியானமே இடைவிடாதெய்துவாய்.

*... — உணரின்*

**28. அகத்தும் புறத்திலு மேஇல்லை அஃது**
**மிகத்தூரத்(து) அண்மையிலும் மேவா(து) — அகளமாம்**
**அந்தப் பரந்தாமம் ஆர்ந்(து)ஒளிரும் ஆங்கேநீ**
**சிந்தையை என்றும் செலுத்துக...**

ஆர்ந்தொளிரும் — இருந்து விளங்கும்; ஆங்கே — அதனிடத்திலேயே.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— அவ்வான்மாவை ஆராய்ந்தறிந்தால். அது உள்ளேயோ வெளியேயோ இல்லை. அது வெகு தூரத்திலோ அல்லது அருகிலோ உள்ளதும் அல்ல. உருவற்ற அந்தப் பரமஸ்தானம் (இருந்து) நிறைந்து விளங்கும் இடத்திலேயே நீ எப்போதும் உன் மனத்தை நாடச் செய்வாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— நிஷ்களமாகிய அந்தப் பரந்தாமம் உள்வெளி யிரண்டிடத்தும் இல்லை; அன்றித் தூர சமீபத்துங்கூடச் சற்றும் இல்லை. மற்றெங்கே அது நிறைந்து விளங்குமோ அங்கே உன் தியானத்தை நீ என்றுஞ் செலுத்து.

மனக் கற்பனையான அகம்புறம். தூரசமீபம் முதலிய தேசபேதங்கள் அம்மனாதீதமான பரந்தாமத்திலவா மாதலின், அகத்தும் புறத்திலுமே யில்லை, அஃது மிகத் தூரத் தன்மையிலு மேவாதெனவும், அந்தத் தாமம் அகளமாதலின் ஆர்ந்தொளிரு மெனவும், அந்தத் தாமமாகிய தன்னை விட்டவிடத்துக் கேவல மனோ பாவனையாற் கற்பிதமாகக் காணப்படும் ஆதாரங்கள் போலன்றி, அவ்வாதாரங்கட் கெல்லாம் பேராதாரமாகிய தன்னைப் பற்றி அந்தர்முகப்பட்ட அறிவால் நானாரெனச் செய்யும் ஆன்ம விசாரத்தால் அபரோக்ஷமாயறியப் படுதலின், இதயத்தைப் பெயர் சுட்டலின்றி ஆங்கே யெனவும், சிந்தையை அதன் பிறப்பிடமான அவ்விதயத்திற் சேர்த்தலே பலதிறப்பட்ட முயற்சிகளாலும் ஒருவன் அடையத் தகுந்த சிறந்த பரமாத்ம தியானமாதலின், சிந்தையைச் செலுத்தெனவும், பிரமாதமே மரணமாதலின் அதற்குச் சற்றுமவ காசங் கொடாதே யென்பார் என்றுஞ் செலுத்தெனவுங் கூறினார்.

*... – விந்தை*

**29. குறுத்கொடுமேல் கீழிலுமே கூறுபடும் உள்ளும்**
**புறத்திலும் எங்கும்எப் போதும் – உறப்பெறும்**
**சூனியமாய்த் தானே சொலிக்கும்ஆன் மாவையே**
**மேல்நிதமும் பாவனைசெய் மேல்...**

உறப்பெறும் – இருக்கும், விளங்கும்; சொலிக்கும் – ஜ்வலிக்கும்; மேல்மேல் – மீண்டும் மீண்டும்.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– என்ன ஆச்சரியம்! பகுக்கப் படுகின்ற குறுக்கிலும் (நெடுக்கிலும்) மேலேயும் – கீழேயும், உள்ளும் – புறத்தும், எங்கும் – எப்போதும், அன்னியப் பொருள்களின் இன்மையாய், சுயஞ்ஜோதியாய் விளங்கும் அவ்வான்மாவையே மீண்டும் மீண்டும் நீ தியானிப்பாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:– குறுக்கும் (நெடுக்கும்) மேலுங் கீழும் இருவகையாய்ச சொல்லப்படும் உள்ளும் வெளியும் ஆகிய எங்கும் எப்போதும் உளதாகும் சூனியமும் தானே விளங்குவதும் ஆகிய அவ்வான்மாவையே நீ இனி யென்றும் தியானம் செய் அதுவே சிறப்பாம்.

பொறிகளுக்குப் புலனாகாமையிற் சூனியமாய் என்றும். சூனியம் என்றது கொண்டு அஸத்தென்று கருதற்க சத்தே யென்பார். சித்தாதலிற்றானே விளங்கும் என்றும் கூறினார்.

*... மேலும் – வான்நிகர் ஆம்*

**30. சூனியமும் அல்ல அசூனியமும் அல்ல(து)ஆம்**
**சூனியம் அல்லதும்ஆம் சூனியம்ஆம் – தான்எங்கும்**
**பக்கபா தம்சற்றும் பற்றாத ஆன்மாவை**
**எக்காலும் சிந்தை இயற்று*தி...***

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– மற்றும் ஆன்மாவானது ஆகாசத்தைப் போன்ற சூன்யமுமல்ல, அசூன்யமுமல்லதாம். அது சூனியம் அற்ற வஸ்துவும் ஆகும். சூனியமும் ஆகும். தான் எதனிடத்திலும் கொஞ்சமும் பட்சபாதம் அற்றதாகிய ஆன்மாவை நீ எப்பொழுதும் சிந்திப்பாயாக.

ஆன்மா ஏகமாதலால் அன்னியப்பொருள் ஏதும் இன்மையைக் குறித்து, விஷய சூனியத்தை முன்னிட்டு அது சூனியம் எனப்பட்டது. அந்த நிர்விஷய சூனியத்திலும், 'இது சூனியம்' என்று அறியும் பிரஞ்ஞையாக இருத்தலால் அது அசூனியம் எனப்பட்டது.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— ஒருங்கே சூனியமுமன்றாய் அசூனியமுமன்றாய், சூனியமுமாய் அசூனியமுமாய் (இவ்வாறு விசித்திரமாய்த்) தானெங்கும் (பொருந்தலாற்) ஓரம் போக்குச் சற்றும் பொருந்தாத அவ்வான்மாவை இடைவிடாது தியானம் செய்.

பரமான்ம சொரூபம் சிந்தையுமொழிஞ் செல்லா நிலைத்தாகலின் சூனியமுமல்ல வசூனியமுமமல்லதா மெனவும், எனினும் அச் சூனியா சூனியங்கள் அதனாலன்றி விளங்கலின்மையின் சூனியமல்லதுமாஞ் சூனியமாமெனவும், பரிச்சின்ன அகங்காரமற்ற பரிபூரண சொரூபத்துக்குப் பக்ஷபாதஞ் சற்றுங் கூடாமையின் தானெங்கும் பக்ஷபாதஞ் சற்றும் பற்றாத வான்மாவை எனவுங் கூறினார்.

**... — *துக்கம் ஆம்***

**31. ஆமயமோ(டு) ஆதாரம் அற்றதாய் வர்ணமொடு**
**நாமரூ பங்களும் நண்ணிடா(து) — ஆம்அந்**
**நிரஞ்சன நிர்க்குண ஆன்மாவை நீயும்**
**நிரந்தர மாக நினை*வாய்...***

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— துன்பம் தரும் நோயற்றதாய், தனக்கு ஆதாரமாய் வேறொரு பொருளும் வேண்டாதாய், ஜாதி, பெயர், வடிவம் ஒன்றும் இல்லாததாய் உள்ள அந்தக் களங்கமற்ற குணங்கள் அற்ற ஆன்மாவை இடைவிடாமல் நீயும் கருதுவாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— நிராயமயம் நிராதாரமுமாய், நிறத்தோடு பெயர் வடிவங்களும் பொருந்தாததாய், நிரஞ்சனமும் நிர்க்குணமுமான அவ்வான்மாவை நீயுமிடைவிடாது தியானஞ் செய்.

**... — *உரம்பெறவே***

**32. ஆசிரயம் ஆலம்பம் அற்றதாய் மானத்தால்**
**கோசரம்ஆ கா(து) உவமை கூறஅரிதாய் — மா(சு)இல்இயல்**
**மன்னியதாய் நித்தியமாய் மன்னிய ஆன்மாவை**
**உன்னிடுக நாளும் உவந்(து)*உளமே...***

உரம்பெற — நிலைத்திருக்க;

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— தான் நிலைத்திருக்க மற்றொன்றையும் ஆசிரயிக்காததாய், தன்னைத் தாங்குகின்ற ஆதாரம் யாதொன்றும் இல்லாததாய். அளவைகளால் அறியப்படாதாய், தனக்குச் சமானமாக வேறெந்தப் பொருளையும் கூற முடியாததாய், குற்றமற்ற

இயல்பிலுடையதாய், நித்திய இருப்பு உள்ளதான ஆன்மாவையே எப்போதும் உள்ளத்தில் மகிழ்வுடன் தியானிப்பாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— நிராசிரய நிராலம்பமாய், அளவைகளாற் பற்றப்படாதாய், கூற(த் தகுவதோர்) உவமை யற்றதாய் (இயல்பாகவே) மாசற்ற தூய்மை பொருந்தியதாய், நித்தியமாய் நிலைத்த அவ்வான்மாவை நிதமும் மகிழ்நதெண்ணுக.

இவ்ஆறு திருவெண்பாக்களாலும் ஆன்ம லக்ஷணங்களின்னவை யெனவும், அத்தகைய ஆன்மானு சந்தானம் ஆற்றொழுக்குப் போல் அவிச்சின்னமா யாற்றக் கடவ னெனவும் கூறப்பட்டன.

... - *பின்னும்*

**33. வினைகள்எல் லாமுமே விட்டு நிராசை**
**தனைஉற்றுச் சங்கம் தணந்து – பினைஎன்றும்**
**தன்னிலே தன்னாலே தன்னில்அமர் தன்னையே**
**உன்னிட வேண்டும் உணர்*உள்ளே...***

தணந்து – விட்டு; பினை – பிறகு; தன்னில் அமர் தன்னையே – தனது ஆன்மாவையே.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— மேலும் எல்லா கர்மங்களையும் விட்டு. ஆசையற்று, மக்களிடமிருந்து விலகி இருந்து கொண்டு, பிறகு தன்னுள் விளங்கிக் கொண்டிருக்கும் ஆன்மாவையே தன்னிடத்திலேயே தன்னைக் கொண்டே உள்ளத்தில் தியானிக்க வேண்டும் என்று எப்பொழுதும் அறிக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— கன்மங்களெல்லாந் துறந்து. நிராசை பொருந்தி. கூட்டத்தினின்றும் பிரிந்து பின்னர், தன்னுட் பொருந்திய தன்னைத் தன்னிடத்துத் தன்னாலே இடையறத் தியானிக்க வேண்டும்.

... – *அன்னியமாய்த்*

**34. தேயமொடு சாதி திகழ்வர்ணம் ஆசிரமம்**
**ஆய இவற்றை அனுசரித்தும் – ஏயபல**
**சிந்தனைகள் எல்லாம் சிதைத்(து)அறிஞன் தன்உருவின்**
**சிந்தனையே செய்க தினம்*தினமும்...***

தேயம் – தேசம்; திகழ் – விளங்கும்; ஏய – பொருந்தியுள்ள, சேர்ந்துள்ள.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— விவேகியானவன் தனக்கு அன்னியமாக விளங்கும் நாடு. ஜாதி. குலம். ஆசிரமம் ஆகிய இவற்றைப் பற்றி உள்ளத்தில் சேர்ந்துள்ள பலவித எண்ணங்களையும் ஒழித்து. ஆன்ம சொரூப சிந்தனையையே தினம் தினம் செய்வானாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— தோன்றா நின்ற தேச ஜாதி வர்ணாசிரமங்கள் ஆகிய இவற்றைப் பற்றி எழும் பல்வகைப்பட்ட எண்ணங்களையும் முற்றக் கெடுத்து. விவேகி சொரூபத்தியானமே நாளும் செய்க.

... — *முந்தும்*

**35. இதுமந் திரம்ஆம் இதுதே வதைஆம்**
**இதுவே தியானம் எனலும் — இதுவே**
**தவம்ஆகும் எண்ணங்கள் எல்லாம் தணந்து**
**சுவரூப சிந்தை துணி*வாய்...***

முந்தும் — முதன்மையான.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— இதுவே முதன்மையான மந்திரமாகும். இதுவே தெய்வமாகும். இதுவே தியானம் என்பதுமாம். இதுவே தவமும் ஆகும். ஆகையால் எண்ணங்களையெல்லாம் விட்டு நீ ஆன்மசொரூபத்தியானமே துணிவுடன் செய்வாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— மற்றெல்லா நினைவுகளின்றும் நீங்கி. சொரூப நினைவே (தலையாயதென்று) துணிந்து செய். இந்த நினைவே மந்திரம். தேவதை தியானம். தவம் யாவுமாம்.

... — *விதவிதமாம்*

**36. எண்ணம் இலன்ஆம்தான் எண்ணமோடு ஒன்றிஅதை**
**எண்ணற்(கு) இடன்இலதாய்ச் செய்திடுக — எண்ணும்**
**மனதைஆன் மாவிலே மன்னச்செய்(து) ஒன்றும்**
**மனதால் நினையற்க மற்று...**

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— (எண்ணங்களை யெல்லால் நீக்குவதால் தூங்கிவிடாமல்) இவ்வாறு பற்பல விதமான எண்ணங்கள் ஏதும் இல்லாத மனமுற்றவனாகிய சாதகன் ஒருவன் சுவாத்ம எண்ணத்தோடுப் பொருந்தி. அதனால் நிரந்தரமாக அம் மனத்தை வேறு எண்ணம் கிளம்புவதற்குச் சற்றும் இடமில்லாததாய்ச் செய்க. நினைக்கும் மனத்தை ஆன்மாவில் நிலைபெறச் செய்து வேறொன்றையும் மனத்தால் நினையாது இரு.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— (அறவே) நினைப்பற்ற தான் (யாதானுமொரு) நினைப்போடுப் பொருந்திப் (பின்னர்) அந்நினைப்பையும் நினைப்புக்கு விடயமற்றதாகச் செயக்கடவன். அவ்வாறு நினைக்கும் மனதை ஆன்மாவின் கண்ணே நிலைபெறச் செய்து பின்னர் அம் மனத்தால் மற்றொன்றையும் சற்றும் நினையாதொழியக் கடவன்.

அதை யெண்ணற் கிடனிலதாச் செய்திடுக என்றது அந்தத் தியானத்தை நிராசிரயமாக ஒன்றையும் விடயமாகப் பற்றாது - செய்க என்பதாம்.

*... — மனதாலே*

**37. சிந்திக்கத் தக்க(து)அல சிந்திக்கவொண் ணா(து)அல்ல**
**சிந்தை அல(து)அதுவே சிந்தையும்ஆம் — எந்தவொர்**
**பக்கமும் சாயாப் பரமான ஆன்மாவை**
**எக்காலும் சிந்தைசெய் யே...**

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— மேலும் (இவ்வான்மா) மனத்தால் நினைக்கத் தக்கது அல்ல. ஆனால் சிந்திக்க முடியாததும் அல்ல. அது சித்தம் (எண்ணம்) அல்ல; ஒரு விதத்தில் அது சித்தமும் ஆகும். எந்த ஒரு பாரபக்ஷமுமற்ற சிரேஷ்டமான இவ்வான்மாவையே நீ எப்பொழுதும் சிந்தை செய்.

ஆன்மா அறிபடு பொருளல்ல. ஆதலால் அதை மனது எட்டாது. அதனால் 'சிந்திக்கத் தக்கது அல' என்று காண்க மனம் தன்னாட்டத்தால் ஆன்மாவில் மூழ்குவதால் அது 'சிந்திக்கவொண்ணாததும் அல' என்பது காண்க. மூல ஒளியான ஆன்மாவின் பிரதிபிம்பமே மனம். ஆதலால் அது 'சிந்தையுமாம்' எனப்பட்டது காண்க. ஆயினும் உற்பத்திலயமுள்ள பிரதிபிம்ப சுபாவம் அதற்கு இல்லாததால் அது 'சிந்தை யலது' எனப்பட்டது காண்க.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— தானொன்றே, நினைக்கத்தக்கது மன்றாய்த் தகாததுமன்றாய், நினைப்புமாய், அந் நினைப்பல்லாததுமாய், (எங்கும் நிறைந்தமையால்) எந்தப் பக்கமுஞ் சற்றுஞ் சாயாத அப் பரமான்மாவை இடைவிடாது தியானஞ் செய்.

பிற சிந்தையால் விடயமாகப் பற்றப் படாமையின் சிந்திக்கத் தக்கதல வெனவும், எனினும் சுவரூப சிந்தையாற் பற்றப்படுதலின் சிந்திக்கொண்ணாதல்ல வெனவும், சிந்தையின்றியுந் தானுளதாதலின்

சிந்தையல தெனவும் எனினும் எவ்வகை சிந்தையுந் தன்னை யொழிந்துள தாதலின்மையின் சிந்தையுமா மெனவுங் கூறினார். சிந்திக்கத் தக்கதும் தகாததுமாகக் கூறுபடுத்துச் சொல்லல் சிந்தனைக்கு வினை முதலாய் நின்ற தன்னினும் வேறாய விடயத்துப் பொருந்துதலன்றி அத் தன்னினும் வேறாய் விடய மாக்க வேறொரு தானின்றி அனைவரநுபவத்தாலும் ஒன்றேயாகிய ஆன்மாவிடத்துப் பொருந்தாமையின் 'சிந்திக்கத் தக்கதல்ல சிந்திக் கொண்ணாதல்ல' எனக் கூறினாரெனினு மமையும்.

"என்னை யறியேனா னென்னை யறிந்தேனா
னென்ன னகைப்புக் கிடனாகு - மென்னை
தனைவிடய மாக்கவிரு தானுண்டோ வொன்றா
யனைவரநு பூதியுண்மை யால்".

என்னும் உள்ளது நாற்பதன் பொருள் ஈண்டுய்த் துணரத் தக்கது. அத்தகைய பரமான்மாவைச் சிந்தித்தலாவது பரிச்சின்ன பாவத்தால் யானென்றெழுந்து விருப்பு வெறுப்புற்று யாதானு மொரு பக்கஞ் சாய்தல் (சலித்தல்) இன்றி சருவான்ம பாவத்தால் பூரண திருத்தனாய் நடுநிலை (அசல நிலை) யமைந்து அப்பரமான்ம நிட்டை பயிறல். 30ம் திருவெண்பாவோடு இதனை யொப்பிடுக.

*... மனமும் – புக்(கு) அகமே*

**38. சிந்தைசெய் வாய்தினமும் சிந்தைக்(கு)எட் டாததையே**
**சிந்தை நிராசிரயம் செய்தேநீ – எந்த சுகம்**
**அத்தத்து வாதீத நிட்கள ஆன்மாவில்**
**சித்தித் திடுமோ செறிந்(து)*உள்ளே* – *சுத்த***

**39 நிருவிகற்பம் ஆகி நினைக்கவொண் ணாதாய்**
**ஒருமுதல்திட் டாந்தம் உறாதாய் – ஒரு உவமை**
**அற்(று)அத்தி யந்தம்ஆம் அஃதுபரா னந்தமாய்ச்**
**சொற்றிடப் பெற்ற(து)அதில் தோய்*முற்றும்...***

செறிந்து – நிறைந்து; புக்கு அகம் – உண்முகப்பட்டு.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– நீ மனத்தின் பற்றுக்களையெல்லாம் விட்டு மனம் உண்முகப்பட்டு சிந்தைக்கு எட்டாததாகிய அவ்வாத்மாவையே எப்பொழுதும் கவனிப்பாயாக. அப்பொழுது உள்ளத்திலே தத்துவம் கடந்ததும் நாமரூபமற்றதுமான அவ்ஆன்மாவில் எந்தப் பேரானந்தம் மலிந்து அடையப்படுகிறதோ.

அது வேறுபாடு அறவே அற்றதாய், எண்ண முடியாததாய், காரணம் ஒன்றும் அற்றதாய், தான் ஒன்றுக்கும் திருஷ்டாந்தம் அற்றதாய், தனக்கும் எதுவும் திருஷ்டாந்தம் (உவமானம்) கூற முடியாததாய். மிகுந்து நிற்கும் பரமானந்தமாய் புகழப்படுகின்றது. அதில் நீ முற்றும் முழுகுவாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— முதலில் விடயமாய்த் தியானத்துக்கு ஒன்றும் இன்மையாக்கி அவ்வாற்றால், விடயமாய்த் தியானத்துக் கெட்டாத அப்பரமான்ம வஸ்துவை நீ இடைவிடாது தியானஞ் செய். தத்துவங் கடந்ததும் நிட்களமுமான அவ்வான்மாவில் எந்த சுகம் நிரம்ப அடையப் பெறுமோ, விகற்பமற்றதும் கருத முடியாததும் தனக்கொரு முதலும் உதாரணமும் இல்லதும் உவமையற்றதும் அத்தியந்தமும் ஆன அதுவே பரசுகமாய் நூல்களில் சொல்லப்பட்டதாம் - அதில் நீ தோய்வாய்.

சிந்தைக் கெட்டாததைச் சிந்திக்குமுபாயங் கூறுவார் சிந்தை நிராசிரயஞ் செய்தென்றார். ஒன்றையுஞ் சிந்தியாதிருந்தபடி யிருத்தலே சிந்தைக் கெட்டாதைச் சிந்தித்தலென்பது கருத்து. சிந்தையறச் சிந்தித்த லென்பதுமது. உள்ள பொருள் உள்ளலற வுள்ளத்தே யுள்ளதால் அவ்வுள்ளத்தே அவ்வாறு உள்ளலற்றுத் தானு முறைதலே அதனையுள்ளவாறுள்ளல் என உள்ளது நாற்பதினு முரைக்கப்பட்டது. இத்திரு வெண்பா விரண்டாலும், தன்மய நிட்டையும், அதனாலெய்தும் ஆன்ம சுகமே அனைத்தினும் சிறந்த சுகமென்பதுங் கூறப்பட்டன.

*... — பற்றும்*

**40. விடயப்பற்(று) எல்லாமே விட்டு மனத்தில்**
**படரும் விருத்தி படுப்பாய் — அடையும்என்(று)**
**உன்மனி பாவம்அன்(று) ஒன்றும்அ தேபரம**
**இன்பம் எனல்ஆவ தேஎன்றும் - *துன்பம் இலை...***

படுப்பாய் — தடுப்பாய், விலக்குவாய், ஒழிப்பாய்; ஒன்றும் — அடையப்படும்; உன்மனிபாவம் — இதயத்தில் ஒடுங்கும் நிலை.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— பிறவிதோறும் தொடர்ந்து வரும் விஷய வாசனைகளை யெல்லாம் விட்டு. மனத்தில் எழும்பும் எண்ணங்களையும் நீக்கி விடுவாயாக. எப்போது மனமற்ற நிலை பெறுமோ. அப்போது அனுபவிக்கப்படுவதே பேரின்பம் எனப்படுவதாம். பிறகு ஒரு நாளும் துன்பமே இராது.



சிந்தையல தெனவும் எனினும் எவ்வகை சிந்தையுந் தன்னை யொழிந்துள தாதலின்மையின் சிந்தையுமா மெனவுங் கூறினார். சிந்திக்கத் தக்கதும் தகாததுமாகக் கூறுபடுத்துச் சொல்லல் சிந்தனைக்கு வினை முதலாய் நின்ற தன்னினும் வேறாய விடயத்துப் பொருந்துதலன்றி அத் தன்னினும் வேறாய் விடய மாக்க வேறொரு தானின்றி அனைவரநுபவத்தாலும் ஒன்றேயாகிய ஆன்மாவிடத்துப் பொருந்தாமையின் 'சிந்திக்கத் தக்கதல்ல சிந்திக் கொண்ணாதல்ல' எனக் கூறினாரெனினு மமையும்.

"என்னை யறியேனா னென்னை யறிந்தேனா
னென்ன னகைப்புக் கிடனாகு - மென்னை
தனைவிடய மாக்கவிரு தானுண்டோ வொன்றா
யனைவரநு பூதியுண்மை யால்".

என்னும் உள்ளது நாற்பதன் பொருள் ஈண்டுய்த் துணரத் தக்கது. அத்தகைய பரமான்மாவைச் சிந்தித்தலாவது பரிச்சின்ன பாவத்தால் யானென்றெழுந்து விருப்பு வெறுப்புற்று யாதானு மொரு பக்கஞ் சாய்தல் (சலித்தல்) இன்றி சருவான்ம பாவத்தால் பூரண திருத்தனாய் நடுநிலை (அசல நிலை) யமைந்து அப்பரமான்ம நிட்டை பயிறல். 30ம் திருவெண்பாவோடு இதனை யொப்பிடுக.

*... மனமும் — புக்(கு) அகமே*

**38. சிந்தைசெய் வாய்தினமும் சிந்தைக்(கு)எட் டாததையே**
**சிந்தை நிராசிரயம் செய்தேநீ — எந்த சுகம்**
**அத்தத்து வாதீத நிட்கள ஆன்மாவில்**
**சித்தித் திடுமோ செறிந்(து)*உள்ளே* — *சுத்த***

**39 நிருவிகற்பம் ஆகி நினைக்கஒண் ணாதாய்**
**ஒருமுதல்திட் டாந்தம் உறாதாய் — ஒரு உவமை**
**அற்(று)அத்தி யந்தம்ஆம் அஃதுபரா னந்தமாய்ச்**
**சொற்றிடப் பெற்ற(து)அதில் தோய்*முற்றும்...***

செறிந்து — நிறைந்து; புக்கு அகம் — உண்முகப்பட்டு.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— நீ மனத்தின் பற்றுக்களையெல்லாம் விட்டு மனம் உண்முகப்பட்டு சிந்தைக்கு எட்டாததாகிய அவ்வாத்மாவையே எப்பொழுதும் கவனிப்பாயாக. அப்பொழுது உள்ளத்திலே தத்துவம் கடந்ததும் நாமரூபமற்றதுமான அவ்ஆன்மாவில் எந்தப் பேரானந்தம் மலிந்து அடையப்படுகிறதோ.

அது வேறுபாடு அறவே அற்றதாய், எண்ண முடியாததாய், காரணம் ஒன்றும் அற்றதாய், தான் ஒன்றுக்கும் திருஷ்டாந்தம் அற்றதாய், தனக்கும் எதுவும் திருஷ்டாந்தம் (உவமானம்) கூற முடியாததாய். மிகுந்து நிற்கும் பரமானந்தமாய் புகழப்படுகின்றது. அதில் நீ முற்றும் முழுகுவாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— முதலில் விடயமாய்த் தியானத்துக்கு ஒன்றும் இன்மையாக்கி அவ்வாற்றால், விடயமாய்த் தியானத்துக் கெட்டாத அப்பரமான்ம வஸ்துவை நீ இடைவிடாது தியானஞ் செய். தத்துவங் கடந்ததும் நிட்களமுமான அவ்வான்மாவில் எந்த சுகம் நிரம்ப அடையப் பெறுமோ, விகற்பமற்றதும் கருத முடியாததும் தனக்கொரு முதலும் உதாரணமும் இல்லதும் உவமையற்றதும் அத்தியந்தமும் ஆன அதுவே பரசுகமாய் நூல்களில் சொல்லப்பட்டதாம் - அதில் நீ தோய்வாய்.

சிந்தைக் கெட்டாததைச் சிந்திக்குமுபாயங் கூறுவார் சிந்தை நிராசிரயஞ் செய்தென்றார். ஒன்றையுஞ் சிந்தியாதிருந்தபடி யிருத்தலே சிந்தைக் கெட்டாதைச் சிந்தித்தலென்பது கருத்து. சிந்தையறச் சிந்தித்த லென்பதுமது. உள்ள பொருள் உள்ளலற வுள்ளத்தே யுள்ளதால் அவ்வுள்ளத்தே அவ்வாறு உள்ளலற்றுத் தானு முறைதலே அதனையுள்ளவாறுள்ளல் என உள்ளது நாற்பதினு முரைக்கப்பட்டது. இத்திரு வெண்பா விரண்டாலும், தன்மய நிட்டையும், அதனாலெய்தும் ஆன்ம சுகமே அனைத்தினும் சிறந்த சுகமென்பதுங் கூறப்பட்டன.

*... — பற்றும்*

**40. விடயப்பற்(று) எல்லாமே விட்டு மனத்தில்**
**படரும் விருத்தி படுப்பாய் — அடையும்என்(று)**
**உன்மனி பாவம்அன்(று) ஒன்றும்அ தேபரம**
**இன்பம் எனல்ஆவ தே*என்றும்* - *துன்பம் இலை...***

படுப்பாய் — தடுப்பாய், விலக்குவாய், ஒழிப்பாய்; ஒன்றும் — அடையப்படும்; உன்மனிபாவம் — இதயத்தில் ஒடுங்கும் நிலை.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— பிறவிதோறும் தொடர்ந்து வரும் விஷய வாசனைகளை யெல்லாம் விட்டு. மனத்தில் எழும்பும் எண்ணங்களையும் நீக்கி விடுவாயாக. எப்போது மனமற்ற நிலை பெறுமோ. அப்போது அனுபவிக்கப்படுவதே பேரின்பம் எனப்படுவதாம். பிறகு ஒரு நாளும் துன்பமே இராது.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— விடயப் பற்றுக்களெல்லாம் விட்டு, அவ்வாற்றால் (கடலினலை போல ஒன்றன்பின்னொன்றாய்) மனத்தின்கண் (மேன்மேல்) எழும் நினைப்புகளையெல்லாம் அழிப்பாய். (இவ் வுபாயத்தால்) நிருவிகற்பநிலை என்று அடையப்பெறுமோ அன்று தோன்றுவதே பரம சுகம் என்றுரைக்கப்படுவதாம்.

மனத்தை யலைக்கும் விருத்திகள் விடயங்களைப் பற்றியே விளைதலின் அவ்விருத்தி நாசத்துக்குபாயங் கூறுவார், விடயப் பற்றெல்லாமே விட்டென்றார். மனவொடுக்கம் பயில்வோன் விடயங்களை விடுத்து அவற்றின் காரியமாம் விருத்திகளை மாய்க்குங்கால் விடயமின்மையால் மனம் உறக்கமுறின் அப்பொழுது எண்ணமிலனாந்தா னெண்ண மோடொன்றி அதனை யுறக்கத்தினின்று முணர்த்தி இவ்வாறு ஒடுக்கலுணர்த்தல்களை இடைவிடாது மாறி மாறிச் செய்ய அப் பயிற்சியால் உறக்கமலைவிரண்டு மொருங்கொழிந்து கேவல வுணர்வுருவாய் விளங்கும் அவ்வுபசாந்த நடு நிலையே உன்மனிபாவமாம்.

" உறக்கத்தி னின்று முணர்த்திடுக சித்த
முறிற்சலனம் பின்ன ரொடுக்கா - யுறக்க
மலைவென்னு மிவ்விரண்டு மற்றநிலை யுற்றா
னிலையிதனி னிச்சலமா நில்".

எனத் தேவிகாலோத்தர மோதல் காண்க. நனவிற் சுழுத்தி என்றுரைக்கப்ப படுவதுமது. ஆன்ம சொரூபமான அப்பரம வின்பம் அநாதியே யென்று முளதாயினும் சகலாவத்தையில் மனம் விடயப் பற்றுக் கொண்டு வெளியில் அலைதலாலும் கேவலாவத்தையில் தன்னை மறந்து மயங்கலாலும் இவ்விரண்டவத்தைகளிலும், எத்துணைப் பாடுபட்டுந் தோன்றாது, சுத்தாவத்தையாகிய அவ்வுன்மனி பாவ மடைந்த பின்பே உணர்வாதலால் அப்பொழுது தானுண்டானது போல அடையுமென்று உன்மனி பாவமன்றொன்று மதே யெனக் கூறப்பட்டது.

**41. எத்திக்கும் தேயமும் எல்லாக்கா லங்களுமே**
**ஒத்ததுயோ கத்திற்(கு)என்(று) ஓதும்நூல் — இத்தனையும்**
**ஞானத்தில் பேதமே நண்ணாவர் ணஆசிரமம்**
**ஆனஇவற் றால்என்(று) அறிஉண்மை...**

இத்தனையும் — சிறிதளவேனும்.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— இந்த ஞானயோகத்திற்கு எல்லாத்திசைகளும், எல்லா இடங்களும், எல்லாக் காலங்களுமே ஏற்றவை யென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஒருவன் சார்ந்துள்ள வர்ணம். ஆசிரமம் முதலிய வற்றால் இந்த ஞானத்தில் இம்மியளவு கூட பேதம் சாராது என்று அறிவாயாக. இதுவே சத்தியம்.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— யோகத்திற்குத் திசாதேச காலங்கள் யாவுமே யொக்கப் பொருந்துமெனவும். வருணாசிரம பேதத்தாலும் ஞானத்திற் பேதமுளதாகா தெனவும் நூல்கள் ஓதுவனவாம்.

திசாதேச காலங்கள் உள்ளத்தினின்று வெளிப்பட்ட மனத்தின் கற்பனைகளே யாதலால் அவையாவும் அம்மனோமயமான உலகியற் செயல்களுக்குப் போலன்றி அம்மனம் மீளத் தன் பிறப்பிடமான அவ்வுளத்துட் புக்கொடுங்கும் ஆன்ம யோகத்துக் கொக்கப் பொருந்துவனவாதலும், அன்றியும் வருணாசிரம பேதங்கள் உபாதிகளை யொட்டியனவே யாதலால் அவ்வுபாதிரகிதமான ஆன்ம ஞானத்தால் அவற்றாற் பேதமெய்தாதாதலுங் காண்க.

*... — பானமாம்*

**42. பால்வண்ணம் ஒன்று பசுக்கள் பலநிறங்கள்**
**பால்போலும் ஞானம்எனப் பார்த்திடுவர் - சால்புபல**
**லிங்கம்உள எல்லாம் பசுக்களை ஏய்ந்தவே**
**இங்(கு)அறிதிட் டாந்தம் இது*வேஆம்...***

சால்பு — குணம்; லிங்கம் — உருவம்; ஏய்ந்தவே — போன்றதே.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— அருந்தும் பால் ஒரே வெண்மை நிறமுள்ளது. ஆனால் அதைத் தரும் பசுக்களோ பல நிறங்கள் உடையன. பலவித குணங்களையும் பலவித உருவங்களையும் பெற்ற ஜீவர்களெல்லாம் பசுக்களைப் போன்றவர்களே. அவர்கள் தம்முள்ளே அடையப்படும் ஞானமோ பாலைப் போன்று ஒரே தன்மையதாம் என்று ஞானிகள் காண்பர். இது தான் இங்கு திருஷ்டாந்தமாக அறியத் தக்கது.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— பசுக்கள் பல நிறத்தன வாயினும் அவற்றின் பால் ஒரே நிறத்ததாம்.பல திறப்பட்ட குறிகளையுடைய அவ்வருணாசிரமங்கள் எல்லாம் பசுக்களைப் போன்று வேறுபட்டனவாம். (எனினும்) அவற்றுக்கெல்லாம் ஞானம் மட்டும் பால் போலப் பொதுவாம் என்றறிஞர் காண்பர். (ஆதலின் இவ் வுண்மைக்கு) அறியத்தகு முதாரண மிதுவாம்.

முந்திய திருவெண்பாவில் வருணாசிரம பேதங்களால் ஞான பேத நண்ணாமை கூறியவர் இத் திருவெண்பாவால் அதற்கோருதாரணங் கூறினார்.

... — *சங்கம்அற*

**43. யாவிலும்உற் றுப்பரவி அப்பிரமம் எங்கும்முகம்**
**மேவிய தாக மிளிர்வதால் — ஓவல் அற**
**உன்மனத்தை அப்பிரமத்(து) ஊன்றியே தேயம்திக்(கு)**
**என்னும்இவை எண்ணிடா தே*சற்றும்*...**

ஓவலற — தடையில்லாமல்.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— அந்தப் பிரம்மமானது பற்றின்றி எல்லா உயிர்களிலும் சமமாக வியாபித்திருந்து, எல்லாம் காண வல்லதாய் விளங்குகின்றது. ஆகையால் உன்னுடைய மனத்தை இடைவிடாமல் அந்தப் பிரம்மத்தில் நிலைபெறச் செய்து தேசம், திக்கு என்பவற்றையும் சிறிதும் எண்ணாமல் இருப்பாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— அந்தப் பிரம வஸ்து திசா தேசகாலங்கள் யாவற்றிலு மொக்கப் பரவி நின்று எங்கும் முகமுடைத்தாக விளங்குதலால் அவற்றைச் சற்றும் எண்ணாதொழித்து. அந்தப் பிரம வஸ்துவின் கண்ணே உன் மனத்தை இடையறாது நிலைபெறுத்து.

41 ஆம் திருவெண்பாவில், பரமான்ம யோகப் பயிற்சிக்கு எல்லா திசாதேச காலங்களும் ஒக்கப் பொருந்துமெனக் கூறியவர் இத்திருவெண்பாவால் அதற்குக் காரணங் கூறுவார், 'யாவிலுமுற்றுப் பரவியப் பிரம மெங்கு முக மேவியதாக மிளர்வதாலெனவும்', உய்த்துணர வல்லார்க்கு, உள்ளது பிரமமொன்றே யாதலால் 'உன் மனத்தை யப்பிரமத் தூன்றியே' யெனவும், ஏனைத் திசாதேச காலங்கள் கயிற்றிற் பாம்பும் கட்டையிற் கள்வனும் போல அவ் வஸ்துவிற் கற்பனைகளே யாதலால் தேயந்திக் கென்னு மிவை யெண்ணிடாதே யெனவும் கூறினார். சிலர் கருதுமாறு பரமான்ம யோகப் பயிற்சியின் முன்னேற்றத்தை எந்தத் திசாதேச காலமும் சற்றுந் தடை செய்யாதென்பது தாற்பரியம். தேயந் திக்குக் காலத்துக்கும் உபலக்ஷணம்.

.. — *இன்ன(து)என*

**44. இப்புவியில் ஓர்குறிஇன்(று) ஆசிரம்ஆ சாரம்இலை**
**அப்பரமான் மாவில்நிலை ஆர்ந்தோனுக்(கு) — அப்புருடன்**
**செய்ததனால் ஒன்(று)இல்லை செய்திடவும் ஒன்றுஇல்லை**
**செய்என் விதியும்இலை தேர்*திரமாய்*...**

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— இப்பூவுலகில் உடல்வாழும் பொழுதே அந்தப் பரமாத்மாவில் நிலைபெற்ற ஜீவன் முக்தனுக்கு இன்னதுதான் அடையாளம் என்றோ, இன்னதுதான் ஆசிரமம் என்றோ, இன்னதுதான் ஆசாரம் என்றோ ஒன்றுமில்லை, அம் மகாபுருஷன் எக்கருமத்தைச் செய்ததனாலும் ஒரு பலனும் அனுபவிப்பதில்லை, அவன் இனிச்செய்ய வேண்டியதாகவும் யாதோர் கர்மமும் இல்லை. அவன் இன்னதைத்தான் செய்ய வேண்டும் என்ற நிபந்தனையும் இல்லை என்று திடமாய் அறிவாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— இவ்வுலகில் அந்தப் பரமான்மாவில் நிலைபெற்றவனுக்கு ஒரு குறியுமில்லை; ஆசிரமாசாரமுமில்லை. அம் மகாபுருடன் ஒன்றைச் செய்ததனாலடையும் பயனுமில்லை. கடமையாகச் செய்யத்தகுங் கன்மமும் அவன் செய்தற்கொன்றில்லை. ஒன்றனைச் செய்யென்னும் விதியும் அவன் மாட்டில்லை.

ஆசிரமாசாரம், வருணாசாரத்துக்கும் உபலக்ஷணம். சகஜ நிஷ்டனைக் குறித்து நிலையார்ந்தோனுக் கென்றார்.

"மனவுரு மாயமெய்ம் மன்னுமா யோகி
 தனக்கோர் செயலிலை யுந்தீபற".

எனவரும் உபதேச வுந்தியாரும், "தன்னை யழித்தெழுந்த தன்மயா னந்தருக்கென்னை யுளதொன் றியற்றுதற்கு" என வரும் உள்ளது நாற்பதும் உற்று நோக்குக. விதியுமிலை என்றதனால் அவனுக்கு ஒன்றனைச் செய்தலாகா தென்ற விலக்குமிலை என்றவாறாயிற்று.

... — *வையமிசை*

**45. செல்லினும் நிற்கினும் நித்திரை செய்யினும்
புல்லினும் சாக்கிரம் போசனம்நீர் — கொள்ளினும்
காற்றுகுளிர் வெய்யில் கலந்திடுங் காலும்எவ்
ஆற்றினும்எக் காலத்தும் மற்று*அகத்தே-தோற்று***

**46. பயமும் வறுமைநோய் பற்றுசுரம் மந்தம்
இயைந்திடும் காலத்தும் ஏதும் — தியங்கானே
ஆன்மநிட் டன்சாந்தன் ஆர்நிட் களன்ஆகி
ஆன்ம திருத்தன்ஆ வான்...**

தியங்கான் — கலங்க மாட்டான்.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— ஆன்ம நிஷ்டனாய், சாந்தனாய், களங்கமற்றவனாய், ஆன்மாவில் திருப்தியுற்றவனாய், எவன்

இருக்கிறானோ, அவன் இவ்வுலகில் சென்றாலும், நின்றாலும், தூங்கினாலும் விழித்தாலும், உண்டாலும், நீர் அருந்தினாலும், காற்று குளிர் வெய்யில் இவை தாக்குகின்ற போதும், இன்னும் எல்லா நிலைகளிலும் எல்லாக் காலங்களிலும் மனத்தில் பயம் தோன்றும் போதும், தரித்திரம் நோய், எரியும் ஜுரம், மந்தம் முதலியவை நேரிடும் போதும் கொஞ்சங் கூட கலக்க மடைய மாட்டான்.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:– நடப்பினும், நிற்பினும், உறக்கங் கொள்ளினும், விழிப்புப் பொருந்தினும், அன்னபான மருந்தினும், காற்று குளிர் வெய்யில் இவை (மிகப்) பொருந்துங் காலத்தும் அவ்வாறே அச்சம், வறுமை, நோய், காய்ச்சல், அஜீரணம் இவை பற்றுங் காலத்தும் மற்றெக் காலத்தும் எவ்விதத்தும் இவற்றாற் சற்றுங் கலங்காமல் ஆன்ம நிட்டன் சாந்தனாயும், நிட்களனாயும், ஆன்மாவில் அமைதி பெற்றவனாவன்.

***... உலகில் – ஊன்மன்னி***

**47. போனாலும் வந்தாலும் போனவன் வந்தவனும்**
**நான்ஆகேன் போக்குவரல் நாடின்இலை – நான்அப்**
**பிரகிருதி தன்மாறப் பெற்றதரு மம்தோய்ந்(து)**
**இருந்தோன் இருப்போன் அலன்ஏ...**

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– இவ்வுலகத்தில் சரீரம் தாங்கி, நடந்து போனாலும் வந்தாலும் நான் போனவனும் ஆக மாட்டேன், வந்தவனும் ஆக மாட்டேன். ஆராயுமிடத்து போக்கோ வரவோ (தேகத்திற்கே யன்றி) எனக்கில்லை. பிரகிருதியினுடைய (மாயையின்) மாறும் தர்மங்களில் ஒருக்காலும் பொருந்தி இருந்தவனும், இனி பொருந்தி இருக்கப் போகிறவனும் அல்ல.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:– போனாலும் வந்தாலும், போனவன் வந்தவனும் நானல்லன்; ஏனெனில், ஆராயின் (பூரணனாமெனக்குப்) போக்கு வரத்தில்லை; அன்றியும் இடைவிடாது மாறும் அந்தப் பிரகிருதி தருமத்துக்குட்பட்டவனும், படுபவனும் நானல்லன்.

போதல் வருதல் உபாதிகளை யொட்டியவை யாதலாலும், தான் நிருபாதிகனாதலாலும், போனாலும் வந்தாலும் போனவன் வந்தவனு நானாகேன் என்றும், தான் ஆகாயம் போற் பூரணனாதலிற் போக்குவரத்துக் கூடாமையின் தனக்குள்ளவாகத் தோற்றுமவை அவிசாரத்தாலடைந்தனவே யென்பார் போக்குவரனாடினிலை யென்றும், பிரகிருதி தர்மங்களான மாற்றங்கள் அப்பிரகிருதிக் கதிஷ்டானமாய் அப்பிராகிருதமான தனக்கென்று மின்மையின் நானப் பிரகிருதி தன் மாறப் பெற்ற

தருமந் தோய்ந் திருந்தோ னிருப்போனலன் என்றும் கூறினார். போக்கு வரனாடினிலை யென்னுமிவ் வுண்மையே.

" குடங்கொண்டு போங்காற் குடத்துளா காய
முடன்செல்வ தாக வுணர்ந்துங் - குடந்தானே
சென்றிடுவ தாகாயஞ் செல்வதிலை யான்மாவு
நின்றிடுமே யாகாய நேர்".

என்னுந் திருவெண்பாவில் உதாரண பூர்வமா யுரைக்கப் படுவ தென்க.

... — *பொருந்தும்*

**48. பிரகிருதி காரியமாம் கன்மங்கள் பேசும்
பிரகிருதி கன்மப் பிறப்பே – நிருமலன்
யான்ஓர் செயல்இலன்என் றேயுக்த தத்துவவித்(து)
ஆனோன் அனுசந்திப் பான்...**

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— என்னிடத்தில் பொருந்தியுள்ள பிரகிருதியின் செயல்களே கர்மங்கள் எனப்படும். நூல்களில் சொல்லப்படும் பிரகிருதியே கர்மங்களின் பிறப்பிடம் ஆகும். ஆனால் நானோ மலமற்றவன், ஒரு கர்மமும் இல்லாதவன் என்றே தத்துவ ஞானத்தை யடைந்த ஞானி எப்போதும் அறிந்து நிலைத்திருப்பான்.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— கன்மங்கள் பிரகிருதியின் செயல்களும், அந்தப் பிரகிருதி கன்மத் தோற்றமுமாம். நானோ அப்பிராகிருதன், அகர்த்தா என்றே தக்கோனாந் தத்துவ ஞானி கருதுவன்.

தனித்தனி சிறப்பித்துக் கூறப்படும் கன்மமும் பிரகிருதியும் ஒன்றுக்கொன்று காரியமாம். தன்னுண்மை நிலை சார்ந்த தத்துவ ஞானி தன்னை அப்பிராகிருதனாகவும், அகர்த்தாவாகவும், அறிந்தமைந் தொழுகுவன்.

பிராரப்த கன்மமான விதியும் ஜீவப் பிரகிருதியான மதியும் இரண்டும் அநாதியாதலால் இதற்கிது முற்பட்டதெனக் கூறலாகாமையின் அவை ஒன்றுக்கொன்று காரியமாகக் கூறப்பட்டன. ஆனமாவை விட்ட விடத் தல்லது உண்மையில் இரண்டுக்கு மிருப்பின்மையின் அவ்வாறுரைப்பதிற் சற்று மிழுக்கில்லை யென்க. பேசு கன்மங்களென விசேடணத்தைக் கன்மங்களோடும், பிரகிருதிகள் கன்மப் பிறப்பெனப் பன்மையைப் பிரகிருதியோடுங் கூட்டுக. உயிர்கள் பலவாதலின் அவற்றைப் பற்றிய விதி (கன்மம்) மதி (பிரகிருதி)களும் பலவாயின. கன்மப் பிறப்பு கன்மத்தினின்று பிறந்தது. பஞ்ச கோசங்களுள் யாதானுமொன்றைப் பற்றி

நிற்கும் ஆணவ மலமே வியத்தித்துவ மாதலின், நிருமலன் என்றது வியத்தித்துவமற்றவனென்றவாறு. கர்த்தத்துவமின்றேல் ஊழ்வினை பற்றி யுடற்றலும் வியத்தித்துவ மின்றேல் அகந்தை மதி பற்றி யலைத்தலு மாகாமையின் பாமரர் விதிமதி யாட்சிக் குள்ளாதற்குக் கர்த்தத்துவமும், வியத்தித்துவமுமே வாயில்களாதலால் தத்துவ ஞானி அவையற்றவனாகவே அவ்விதிமதிகளைக் கடந்து விளங்குவனென்பதாம். விதிமதிகளைச் சார்ந்து நின்ற வழி தன்னிலை தவறுமாறு போலத் தன்னிலையைச் சார்ந்து நின்ற வழி அவை யகலு மென்றறிக.

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்". குறள் 380
என மதியின் வலிதாகக் கூறும் விதியும்,
"ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்". குறள் 620

என விதியின் மிக்கதாகக் கூறும் மதியும் ஒன்றுக் கொன்று காரியமாதலால் அவற்றுயர்வு தாழ்வுகளைப் பற்றிய ஆராய்ச்சி அவலமாமென்றும், அவையுளவாதற் கின்றியமையாது வேண்டப்படும் முதலான தன்னைப் பற்றி யாராய்ந்தறிந்த வழி அவை கதிரவன் முன்னர்க் காரிருள் போலக் கடிது நீங்கலால், அவ் வாராய்ச்சியே அறிஞர் செய்யத் தக்கதா மென்றும் கூறிய வாறாயிற்று.

"விதிமதி மூல விவேக மிலார்க்கே
விதிமதி வெல்லும் விவாதம் - விதிமதிகட்
கோர்முதலாந் தன்னை யுணர்ந்தா ரவைதணந்தார்.
சார்வரோ பின்னுமவை சாற்று".
என்னும் உள்ளது நாற்பது இத் திருவெண்பாவின் பொருளையுணரப் பெரிது முதவுவதாம்.

*... அதுவே – ஆனான்*

**49. அவற்குப் பிரகிருதி யால்பந்தம் இல்லை**
**அவன்முக்தன் நாமம் அடைந்தான் – அவன்தான்**
**பிரகிருதி காரியமாப் பேசுதோ டத்தால்**
**ஒருபொழுதும் ஒட்டல் உறான்ஏ...**

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– இவ்வாறு தத்துவ ஞானத்தால் தானாய் அமர்ந்த ஒருவனுக்கு மாயையால் பந்தம் ஏற்படாது. அவன் முக்தன் என்னும் பெயரை அடைந்தவன் ஆவான். அவன் மாயையின் காரியங்களாகச் சொல்லப்படும் குற்றங்களால் என்றும் தீண்டப்பட மாட்டான்.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— அவனுக்குப் பிரகிருதியாற் பந்தமில்லை. அவன் முக்தனென்னும் பெயரை யடைந்தான். பின்னுமவன் பிரகிருதியின் காரியங்களாகச் சொல்லப்படுங் குற்றங்களாலும் ஒருபொழுதும் பற்றப்பட மாட்டான்.

*... — விரியும்*

**50. ஒளியால் இருளின் உருவம் ஒழித்து**
**விளக்குளவ் விதந்தான் விளங்கும் — விளக்கம் இல்**
**அஞ்ஞானத்(து) உண்டாகி ஆர்இருளை மாய்த்(து)ஒளிரும்**
**சுஞ்ஞான சோதிஆன் மா...**

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— ஓர் விளக்கு எப்படி தனது பரவும் வெளிச்சத்தால் இருளின் இருப்பை ஒழித்து தான் விளங்குகின்றதோ அவ்விதம் சுத்த ஞான ஜோதியாம் ஆன்மா சுய விளக்கம் இல்லாத அஞ்ஞானத்தால் உண்டாகியிருக்கும் ஆவரண இருளை அறவே அழித்து தான் மாத்திரமாய் விளங்கும்.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— விளக்கு எவ்வாறு தன்னொளியால் இருளின் வடிவத்தைக் கெடுத்து விளங்குமோ அவ்வாறே அறிவொளியாகிய நல்லான்மாவும் தெளிவற்ற அறியாமையினின்று தோன்றிய இருளை (விருத்தி ஞானத்தாற்) கெடுத்து விளங்கும்.

சொரூப ஞானம் அஞ்ஞானத்தைத் தடை செய்யாமையின் விருத்தி ஞானத்தா லெனப்பட்டது.

*... தானாம் — விஞ்ஞானி*

**51. நெய்தீர்ந்த தீபம்தான் நிர்வாணம் உற்றிடல்போல்**
**மெய்ஆன்ம சிந்தை விடாமலே — செய்யோகி**
**ஆன்மாவின் கண்ணேயே ஆர்ந்திருப்பன்; ஆன்மாவில்**
**மேல்மேவ ஒன்(று)இன்று மெய்...**

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— மெய்யான ஆன்ம தியானத்தை இடைவிடாமல் இயற்றும் யோகியும், ஆன்மாவே தானாய் விளங்கும் விஞ்ஞானியும் ஆகிய ஒருவன் நெய் வற்றிப் போன தீப ஜ்வாலை ஆகாயத்தில் சாந்தமடைந்து உரு ஓய்தல் போலவே அவ்வான்மாகாசத்திலேயே உருவற்று சாந்தனாய்க் கலந்து நிற்பான். ஏனெனில் ஆன்மாவை விட மேன்மையானதாக அடையத்தக்கது யாதொன்றும் இல்லை. இதுவே சத்தியம்.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— நெய்யற்ற விளக்கு சூனியமடைதல் போன்று உண்மையான ஆன்ம தியானத்தை இடைவிடாதியற்றும் ஞான யோகியும் அவ்வான்மாவின் கண்ணே நிலைபெற்றமைவன். அவ்வான்மாவினுஞ் சிறந்து ஒருவன் அடையத்தகும் பேறு உண்மையாகவே வேறொன்று மின்று.

விளக்கு எரிதற்குக் காரணமான நெய் தீர்ந்தவுடன் தன்னிற்றானடங்கி விடுதல் போன்று, நால்வகைத் தோற்றத்தோடு கூடிய எழுவகைப் பிறப்பினுள்ளும் ஒருவன் சென்றுழல்வதற்குக் காரணமான கன்மத் தொடர்பு தைல தாரை போல் அவிச்சின்னமான ஆன்ம சிந்தையாலழி வெய்துங் கர்த்தத்துவ வடிவ அகந்தையோடு உடனழிதலின் 'ஆன்மாவின் கண்ணேயே யார்ந்திருப்பன்'எனவும் ஆன்ம சித்தனுக்குப் பிற சித்திகள் வேண்டாமென்பர் ஆன்மாவின் மேன்மேவ வொன்றின்று மெய் யெனவும் கூறினார்.

'ஆன்ம லாபத்தினு மன்னிய மாம்பேறு
தான் மற்றொன் றெங்குமே தானில்லை' - 26

என முன்னுங் கூறப்பட்டது.

"சித்தமா யுள்பொருளைத் தேர்ந்திருத்தல் சித்திபிற
சித்தியெலாஞ் சொப்பனமார் சித்திகளே - நித்திரைவிட்
டோர்ந்தா லவைமெய்யோ வுண்மைநிலை நின்றுபொய்ம்மை
தீர்ந்தார் தியங்குவரோ தேர்".

என்னும் உள்ளது நாற்பதனுதவியால் இவ்வுண்மையை நன்குணர்க. சூனியமாதல் - உருவழிதல்; அங்ஙனமே முத்தனுக்கும் அன்னியர் நோக்காலன்றி வியத்தித்துவ மின்றெனக் கொள்க.

*... இடமாம் — வான்மன்*

**52. குடம்கொண்டு போங்கால் குடத்(து)உள்ஆ காயம்
உடன்செல்வ தாக வுணர்ந்துங் — குடம்தானே
சென்றிடுவ(து) ஆகாயம் செல்வ(து)இலை ஆன்மாவும்
நின்றிடுமே ஆகாயம் நேர்*நிலையே...***

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— இடம் என்று சொல்லப்படும் ஆகாயம் நிறைந்துள்ள ஓர் குடமானது எடுத்துப் போகப்படும்போது அந்தக் குடத்தின் உள்ளேயுள்ள ஆகாயமும் கூடவே எடுத்துச் செல்லப்படுவதாகத் தோன்றினாலும், குடம் மட்டுமே போகின்றது; ஆகாயம் போகின்றதில்லையல்லவா? (தேகத்தில் இருப்பது போலக் காணப்படும்) ஆன்மாவும் (தேகத்தின் சலனத்தால் தான் சலனம் அடையாமல்) ஆகாயத்தைப் போலவே நிலைத்து நிற்கும்.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— குடம் (இடம் விட்டிடம்) கொண்டு போகப்படும் பொழுது குடத்துட் பொருந்திய ஆகாயமும் உடன் கொண்டு போகப்படுவதாக ஒருவன் கருதினும் எப்படிக் குடம் மட்டுமே கொண்டு போகப்படுவதாமோ, ஆகாயம்கொண்டு போகப்படுவ தில்லையோ, அப்படியே ஆன்மாவும் ஆகாய நிகர்த்து (நின்றாங்கே) அசைவற நிற்கும்.

குடம் புடைப்பெயர்ச்சி யுறுங்கால் குடத்துளவாகாயமும் அதனுடன் புடைப்பெயர்ச்சி யுறுவதாகக் காண்பதே போல் உடலுயிர்கள் பிறப்பிறப்புகளிற் சென்றுழலுங்கால் ஆன்மாவும் உடனுழல்வதாகக் கருதுவது மனமயக்கமே யாமெனவும், அவ்விதங் காணினும் அவ்வாகாயம் எவ்வாறிருந்த படிக்கே யிருப்பதாமோ அவ்வாறே ஆன்மாவும் எஞ் ஞான்றும் போல நின்ற நிலைக்கேநிற்பதாமெனவும் அறிக. 47ஆம் திருவெண்பாவில் காரணத்தோடு ஆன்மாவுக் கசலத்துவங் கூறியவர் இத்திருவெண்பாவால் அதற்கோருதாரணங் கூறினார்.

... — *அன்றிக்*

**53. குடம்உடை யுங்கால் குடத்(து)உள ஆகாயம்**
**உடன்மகா காயமோ(டு) ஒன்றும் — சடம்ஆம்**
**உடல்அக லுங்கால் உடல்உளஆன் மாவும்**
**உடன்பரமான் மாவாய் உறும்ஏ — *திடம்ஆம்ஈது***

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— மேலும் அந்தக் குடமானது உடையும் அந்த சமயத்திலேயே குடத்தில் உள்ள ஆகாயம் வெளியில் உள்ள மகாகாயத்தோடு ஒன்றாகி விடுகின்றது. அது போலவே ஜடமாகிய இவ்வுடல் மரிக்கும்பொழுது (அந்த ஜீவன் முக்தனின்) உடலில் இருந்த ஆன்மாவும் உடனேயே பரமாத்மாவாய் அமையும். இதுவே திண்ணம்.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— குடம் உடையும் பொழுது குடத்துட் பொருந்திய ஆகாயம் மகாகாயமோ டைக்கியமாம். அவ்வாறே ஜடவுடல் மாயும் பொழுது அவ்வுடலுட் பொருந்திய ஜீவான்மாவும் பரமான்மாவோ டைக்கிய மாம்.

இவ்வாறு கூறினாரேனும் இவ்வுதாரண வலியால் உய்த்துணர வல்லார்க்குக் குடத்துள வாகாயம் மகாகாயத்தினின்று முதலிற் குடத்தாற் பிரிவு பட்டதே யின்றாதலின். அக்குட முடையுங்கால் அவ்வாகாயம் மகாகாயமோடு மீளக் கலக்கும் என்றது முதலிற் பிரிவு பட்டதாகத் தன்மதி மயக்கத்தாற் கருதினார் கருத்தைப் பற்றியாதல்

போல, ஜீவான்மாவும்பரமான்மாவினின்று ஜடவுடலாலென்றும் பிரிவுபட்டதே யின்றாதலின் அவ்வுடலகலுங்கால் அந்த ஜீவான்மாவும் பரமான்மாவோடு மீளக் கலக்கு மென்றதும், முன்னர் பிரிவு பட்டதாகப் பேதுற்றார் பேதமதியைப் பற்றி யென்றறிக. ஆகாயம் போன்று ஆன்மாவும் பிரிவுபடவோ படுத்தவோ முடியா ஒரே முழுமுதற் பொருளாம்; ஆதலின் விசாரிக்குங்கால் விபத்தி பத்திகளுக்கோ வியோக யோகங்களுக்கோ அவ்வான்மாவிற் சற்று மவகாச மில்லையென உயரியதோ ருண்மை இத்திரு வெண்பாவில் அறிஞர்க்குய்த்துணரவைக்கப் பட்டது. கன்மத்தில் அகன்மத்தைக் காணுமாறு போல உருவத்தில் அருவத்தைக் காண வல்லார்க்கு இவ்வுண்மை எளிதிற் புலனாம். இத்திருவெண்பா எடுத்துக் காட்டுவமையணி.

**54. என்(று)அதி காரியாய் எல்லாம் உணர்ஈசன்**
**அன்(று)அதிகா ரத்தொ(டு)இவ் வாறுஅறைந்தான் - வென்(று) எல்லாப்**
**பந்தங்க ளின்வீடு பற்றினோன் முற்(று)உணர்வோடு**
**அந்தம்இலாது எங்கும்உள னாம்...**

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— என்று சொல்லி அனைத்தும் அறியும் அதிகாரியாகிய சிவபிரான் அப்பொழுது தனது உபதேச அதிகாரத்தின்படி கீழ்க்கண்டவாறு மேலும் போதித்தான்: எல்லா பந்தங்களையும் வென்று அவற்றினின்று முக்தி பெற்றவன் சர்வஞ்ஞத்துவத்தோடு என்றும் அழிவற்றவனாய் எங்கும் உள்ளவனாய் ஆவான்.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— என்று (எவர்க்கும் எவைக்குந்) தலைவனாய் எல்லாமுணர்ந்த ஈசன் அன்று தன்னாணையால் இவ்வாறருளினான். எல்லாக் கட்டுகளையு மறுத்து அவற்றினின்று விடுதலை யடைந்தோன் (என்போன்று தானும்) முற்றுமுணர்ந்தவனாய் எல்லையிலா தெங்கு நிறைந்துளோனாவன்.

அந்தமிலாது-அழிவற்று என்றுமாம். இவ்வாறென்றது முன்னர்க் கூறிய தன்றிப் பின்னர்க் கூறுவதுமாம்.

***... அதனால் — புந்திஉளோன்***

**55. ஆகமங்கள் எல்லாம் அறவிட்(டு) அமலஆன்ம**
**யோக சமாதியே உற்(று)இதன்மேல் — ஆகஅயல்**
**ஒன்றுமே இன்(று)எனா ஓர்ந்தே மனவிகற்பம்**
**ஒன்றும் உறாமல் ஒழித்(து)*உளத்தே — நின்(று)ஆன்ம***

**56. விஞ்ஞானம் இங்ஙன் விடா(து)உன்னி யோகிதான்
எஞ்ஞான்றும் எய்தும்உடல் இன்மைஅச் – சுஞ்ஞானி
அத்தரும தர்மி அகம்புறமும் ஆர்முத்தன்
எத்தலமும் ஏகுவனா மே*மனம்போல் – நித்தமுமே...***

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– ஆகையினால் நல்ல விவேகமுள்ளவன் ஆகம நெறிகளைப் பின்பற்றுவதை யெல்லாம் அடியோடு விட்டு விட்டு. பரிசுத்தமான ஆன்மயோக சமாதியே அனுஷ்டித்து, அதற்குமேல் அடையத்தக்கது வேறொன்றுமே இல்லையென்று அறிந்து மனத்தில் விகற்பங்கள் ஒன்றுகூட சேராதபடி நீக்கி, உள்ளத்தே நிலைபெற்றவனாய், ஆன்ம பிரஞ்ஞையை இடைவிடாது இவ்வாறு பொருந்தி அதனால் அம்மகா யோகி தான் என்றும் அசரீரி என்று அறிகின்றான். அந்தப் பரிசுத்த ஞானி ஆன்மாவின் தர்மத்தையே தர்மமாய்க் கொண்டவன் ஆதலால் உள்வெளி எங்கும் நிறைந்த முக்தனாய்த் தன் இஷ்டப்படி எப்போதும் எங்கும் சஞ்சரிப்பவன் ஆவன்.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:– (பயின்று வந்த) ஆகமங்களெல்லாம் பற்றற விட்டுப் பரிசுத்தமான ஆன்ம யோகமாகிய சமாதியே யடைந்து, இதன்மேற் பயில வேறொன்றுமே யின்றென வறிந்து, மன விகற்பஞ் சற்று மெழாது கெடுத்து,

விஞ்ஞான சொரூபத்தை இவ்வாறிடைவிடா தெண்ணி அவ்வான்மயோகி யாவான் அசரீரத் தன்மையை எந்நாளுமடைவன்; அடைந்து, அம் மெய்ஞ்ஞானியாகிய முத்தன் அந்தத் தருமங்கட் கெல்லாந் தருமியாய், உள்வெளி எங்கும் நிறைந்தவனாய், எவ்வுலகத்துஞ் செல்ல வல்லவனாவன்.

**57. முற்(று)உணர்வு இன்பமொடு மூதறிவு தன்வயம்
வற்றல் வரம்புஇல் வலியும்இவை – உற்(று) என்றும்
ஆரும் நிராமய ஆன்மா அவன்சிவமே
சேரும் விசுத்தஉடல் சேர்ந்(து)...**

விசுத்தவுடல் – ஆன்மா; ஆரும் – விளங்கும்.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:– அவன் சர்வஞ்ஞத்வமும், பேரின்பமோடு பேரறிவும், சர்வ சுதந்தரமும், குன்றா எல்லையற்ற சக்தியும் இவையெல்லாம் படைத்தவனாய், நிராமய ஆன்மாவாய் தூய மேனியடைடைந்து என்றும் விளங்கும் சிவ சொரூபத்தில் ஒன்றாய்க் கலந்திருப்பான்.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— முற்றுமுணர்வு, வரம்பிலா வின்பம், இயற்கையறிவு, தன்வயம், என்றுங் குன்றாத வாற்றல், எல்லையிலா வாற்றல் - இவற்றையுற்று, இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய வான்மா தூய உடம்பு - இவையும் பொருந்தி இவ்வாற்றா லவன் பூரண சிவத்தை நிலைபெறச் சேர்வான். சிவனதெண் குணங்களும் அவனுக்குளவாம் என்பதாம்.

சிவபூரணமான உண்மை நிலையில் நின்று நோக்க முப்புடியோடு கூடிய முற்று முணர்தல் முதலியன ஒரு பொருளன்றாகவும் அவற்றைப் பெறலரும் பேறுகள் போல நூல்கள் சிறப்பித்துக் கூறல் மாயாகாரிய உலகத்துழன்று மயங்கும் மக்கட்கு ஆன்ம சாட்சாத்கார மடைதலில் வேட்கையும் விடா முயற்சியும் ஒருங்கு விளைத்தற் கென்க.

*... அவற்குத் – தேரும் ஓர்*

**58. நாமசெபம் அர்ச்சனை நன்னீரில் ஆடலும்
ஓமமும் சாதனம்மற்(று) ஒன்றும்இன்(று) – ஆமே
தருமஅதர் மப்பலன்கள் பிண்டமொடு தண்ணீர்க்
கிரியைகளும் இல்லையாம் கேள்*நீ...***

தேரும் – தெரிந்தெடுக்கும்

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— (உலகோர் செய்யத் தக்கதாய்த்) தெரிந்தெடுக்கும் எந்தவொரு நாமஜெபம், தேவார்ச்சனை, ஸ்நானம், ஹோமம், முதலியவையும் இவை போன்று செய்ய வேண்டிய பிற சாதனங்களும் அம்மகாத்மாவுக்கு யாதொன்றும் இல்லையாம். அவனுக்கு புண்ணிய பாப பலன்களும், பிதிரர்களுக்குப் பிண்டம் அளித்தலும், தர்ப்பணம் போன்ற தண்ணீர்க் கிரியைகளும் கிடையாது. நீ மேலும் கேட்பாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— நாம ஜெபம், நாமாருச்சனம், நல்ல நீராடல், ஓமம் எனுமிவையும் இவை போன்ற பிற சாதனங்களும் அவனுக்கொன்றுமே யின்றாம். பிண்டமிடல், நீரிறைத்தல் ஆகிய பிதிரர் காரியங்களுமுட்பட அவனுக்கிலவாம். இருவினைப் பயன்கள் அவனைச் சற்றுந் தொடராவாம். நாமம் அருச்சனையோடுங் கூட்டப் பட்டது.

*... புரியவோ*

**59. இல்லை நியமங்கள் இல்லைஉப வாசமும்
இல்லை பிரவிருத்தி எவ்வகையும் – இல்லை
நிவிருத்தி நேர்பிரம சாரி விரதம்
அவற்(கு)இல்லை என்றே அறி*வாய்...***

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— அப்பெரியோன் அனுஷ்டிப்பதற்கு யாதொரு நியமங்களும் இல்லை; உபவாசமும் இல்லை. அவன், ஈடுபடவேண்டிய பிரவிருத்திகளும் அவன் விலக்கவேண்டிய நிவிருத்திகளும் எவ்விதத்திலும் இல்லவே இல்லை. அவனுக்குச் செவ்வையான பிரம்மச்சரிய விரதமும் அவசியமும் இல்லை என்றே அறிவாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— அவனுக்கு நியமங்களில்லை. உபவாசமுமில்லை. பிரவிருத்தி நிவிருத்தி தன்மங்கள் எவ்விதத்துமில்லை. நேர்மையான பிரமசாரி விரமுங்கூட இல்லை என்றறி.

*... அவலமாய்*

**60. அங்கிநீர் வீழ்வுஅசலம் நின்றுவிழல் அற்றுசிவ**
**துங்கஞான அமுதம் துய்த்துசிவ — அங்கனாய்**
**நித்தியனாய் நின்மலனாய் விட்டுச் சிருட்டிதன்மம்**
**சித்தம்போல் சஞ்சாரம் செய்*திடுக...***

அவலமாய் — வீணே.

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— வீணே பயனின்றி (தேகத்தை விட்டுவிட எண்ணி) நெருப்பில் விழுவதும். நீரில் விழுவதும், மலைச் சிகரங்களின்றும் விழுவதுமாகிய செயல்களை விடுத்து மேன்மையான சிவஞான அமிர்தத்தைப் பருகி, சிவ சொரூபியாய், அழிவற்றவனாய், மலமற்றவனாய், சிருஷ்டியாதி தர்மங்கள் யாவும் நீத்து உன்னிச்சைப்படி சுகமாய் சஞ்சரித்து இருப்பாயாக.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— நெருப்பில் விழல் நீரில் விழல், மலை நின்றுருளல் இவை யொன்றுமின்றி சிறந்த சிவ ஞானாமுதம் பருகி, சிவ சொரூபனாய், என்றுமுள்ளவனாய், மலமற்றவனாய், படைப்பு முதலிய தொழில்களினின்று விடுபட்டு, மனம் போல் வாழக் கடவை.

*... புத்திர*

**61. சத்தியம் சத்தியம் சத்தியம்என் றேமூன்று**
**சத்தியம் இப்போது சாற்றினேன் — உத்தமம்**
**மிக்கது இதில்எங்கும் வே(று)எதுவு மேதெரியத்**
**தக்கது இலைகுகனே தான்...**

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— ஓ, புத்திரனே! குகனே! இப்பொழுது நான் சத்தியம், சத்தியம், சத்தியம் என்று மும்முறை சத்தியம் செய்து

சொல்கின்றேன். (யாதெனின்) இதைவிட மேன்மை மிகுந்ததாக நீ அறிந்து கொள்ளத் தக்கது வேறெதுவே எங்குமே ஒன்றுமில்லை.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— வாய்மை, வாய்மை, இது வாய்மை என்று மும்முறை இப்போது (உன்பொருட்டு) ஆணையிடுகின்றேன். இதனைக் காட்டிலும் உயர்வாயுணரத் தக்கது வேறெதுவும் எங்கும் இல்லை; எனவே, குகனே, இதுவே யாவற்றிலும் சிறந்ததாம்.

*... தவமே — தொக்க*

**62. அமலனும் மூடமதி அல்லனாய்ப் புத்தி
நிமலனாய் நின்மலஆன் மாவாய் — விமலமாம்
பாவத்தி னால்விமலம் பார்ப்பஎலாம் என்(று)அமலம்
பாவித்துப் பார்த்திடுவன் பார்*என்றான் — தேவன்...***

தொக்க — சேர்ந்த; நிறைந்த

அ) ஸ்ரீ சாது ஓம் உரை:— அம்மகா புருஷன் தவம் நிறைந்து மலமற்றவனும் மந்த புத்தியின்றி பரிசுத்த விவேக புத்தி யுடையவனுமாய், மாசற்ற ஆன்ம சொரூபியாய் இருந்து கொண்டு அவன் பரிசுத்த ஆன்மாவையே கருதி, அந்தக் களங்கமற்ற கருத்தால் காணப்படுபவை யாவும் பரிசுத்த ஆன்மாவே என்று காண்பான், அறிக என்று தேவதேவனான சிவபெருமான் குகனுக்கு உபதேசித்தார்.

ஆ) ஸ்ரீ முருகனார் உரை:— மலமற்றவனும், மடமையற்றவனும், தெளிந்த புத்தியுடையவனும், விசுத்தான்மாவுமாய், அவன் பரிசுத்தான்மாவை (இடைவிடாது) எண்ணி, அப்பரிசுத்த எண்ணத்தால் பார்ப்பவற்றை யெல்லாம் அவ்வாறே பரிசுத்தமாகப் பார்ப்பன்.

கண்ணெப்படி காட்சியுமப்படி யாதலால், 'விமலமாம் பாவத்தினால் பார்ப்ப வெலாம் விமலமென்று பார்த்திடுவன்' என்றும், அவ் விமல பாவத்தை யெய்தற்குபாயங் கூறுவார் 'அமலம் பாவித்து' என்றுங் கூறினார்.

**இதனைத் தமிழில் இசைத்தான் ரமணன்
இதயத்(து) அமிழ்துஆம் இது.**

ஆன்ம சாட்சாத்காரப் பிரகரணமாகிய இதை ஸ்ரீ ரமணபிரான் தமிழில் அருளினார். இது அவருடைய திருவுள்ளத்தில் உதித்த அமுதமாகும்.



ஸ்ரீ

# 3. பகவத்கீதாசாரம்

## பாயிரம்

(வெண்பா)

தீர்த்தன் குருரமணன் சீர்ப்பகவற் கீதையிடைச்
சீர்த்தபொருள் வாய்ப்புடைய தேர்ந்தேடுத்துக் -கோத்துச்
சுருக்கமாத் தந்த சுலோகமா றேழு
மிருக்குமன மீசர்க் கிருப்பு.

நாற்பத் திரண்டுமொரு நற்கலிவெண் பாவாக்கி
யேற்பத் தமிழி லினிதிசைத்தான் - பாற்பயிலும்
பத்தரனு சந்தான பாரா யணமுறையில்
வைத்தவர்தா மோத மகிழ்ந்து

## காப்பு

பார்த்தன் றேரினல், வார்த்தை யாலவன்
ஆர்த்தி போக்கருண், மூர்த்தி காக்கவே.

பார்த்தன் தேரில் நல் வார்த்தையால் அவன் ஆர்த்தி போக்கு அருள்மூர்த்தி காக்கவே.

அர்ச்சுனனது தேரில் சாரதியாய் அமர்ந்து உத்தமமான உபதேசமொழிகளால் அவ்வருச்சுனனது கிலேசத்தை நீக்கிய கிருபா மூர்த்தியான ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா (நம்மைக்) காப்பாராக.

## நூல்

(கலிவெண்பா)

1. கருணை மிகுந்த கருத்தனாய்த் துக்கம்
பெருகி விழிநீர் பெருக – வருந்துமப்
பார்த்தன் றுயரகலப் பார்த்துமது சூதனனிவ்
வார்த்தை யுரைத்தான் வகுத்து*ணரப்...* II-1

கருணை மிகுந்த கருத்தனாய் துக்கம் பெருகி விழி நீர் பெருக வருந்தும் அப் பார்த்தன் துயர் அகல பார்த்து மதுசூதனன் வகுத்துணர இவ் வார்த்தை உரைத்தான்.

(உறவினராய பகைவர்களிடம்) இரக்கம் அதிகரித்த மனத்தினனாய், வருத்தம்மிகுந்து, கண்ணீர் வழிய வியாகூலப்படுகின்ற அவ் வருச்சுனனின் துயரம் நீங்கும்படி கடைக்கணித்து, மதுவென்ற அரக்கனை சங்கரித்தவனான கண்ணபிரான் சமயத்தை நன்கு ஆராய்ந்து (அர்ச்சுனன்) அறியும்படி பின்வரும் இம்மொழிகளை உபதேசித்தருளினான்.

பாரதயுத்தம் ஆரம்பிக்கும் முன் இரக்கத்தால் துயர மடைந்து கலங்கிய அர்ச்சுனனுக்குக் கிருஷ்ணன் இவைகளை உபதேசிக்கலானார்.

*... – பார்த்தனே*

**2. தேகமிது சேத்திரமாச் செப்பப் படுமிந்தத்**
**தேகத்தை யாவன் றெரிவனோ – தேகியவன்**
**சேத்திரஞ்ஞ னாமென்று செப்புவார் தாமதனைப்**
**பார்த்தறிந் தோர்கள் பகுத்து*ணர்வாய்...*** XIII-1

பார்த்தனே! தேகம் இது சேத்திரமாச் செப்பப்படும் இந்த தேகத்தை யாவன் தெரிவனோ தேகி அவன் சேத்திரஞ்ஞன் ஆம் என்று அதனைப் பகுத்துப் பார்த்து அறிந்தோர்கள் செப்புவார் தாம் உணர்வாய்.

பார்த்தனே! இந்த உடலானது (ஆன்மாவின்) இருப்பிடமாகக் கூறப்படும். இவ்வுடலை எவன் தன் இருப்பிடம் என்று அறிகிறானோ தேகியாகிய அவன் இந்த (தேகமாகிய) க்ஷேத்திரத்தின் அதிபதியாகுமென்று விசாரித்து அனுபவமாய்க் கண்டறிந்த ஞானிகள் கூறுவார்கள். நீ இதை அறிந்து கொள்வாயாக.

*... – காத்திரமாம்*

**3. சேத்திரங்கள் யாவுள்ளுஞ் சேர்ந்தே யிருக்கின்ற**
**சேத்திரஞ்ஞ னாவென்னைத் தேர்வாயே – சேத்திரஞ்**
**சேத்திரஞ்ஞன் றன்மை தெரிகின்ற ஞானமே**
**தோர்த்திடஃ தேயெனக் கொப்பு...** XIII-2

காத்திரமாம் சேத்திரங்கள் யாவுள்ளும் சேர்ந்தே இருக்கின்ற சேத்திரஞ்ஞனா என்னைத் தேர்வாயே. சேத்திரம் சேத்திரஞ்ஞன் தன்மை தெரிகின்ற ஞானம் ஏது அஃதே எனக்கு ஒப்பு ஓர்த்திடு.

(ஜீவர்களின்) உடம்பாகிய சேத்திரங்கள் எல்லாவற்றிலும் அனுஸ்யூதமாய் விளங்கிக் கொண்டிருக்கின்ற சேத்திரஞ்ஞனாகவே என்னை அறிந்து கொள்க. இருப்பிடமாகிய உடலினதும்இருப்பவனாகிய ஆன்மாவினதும்

உண்மைநிலையைத் தெரிந்து கொள்ளுகின்ற ஞானமே அறிவே- எதுவோ அந்த ஞானமே நான் சம்மதிக்கத் கூடியது என்று உணர்ந்து கொள்.

***... ஒன்றாய்ச் – சேர்த்துணரும்***

**4. ஆன்மாக்கள் யாவி னகத்து மமர்கின்ற**
**வான்மாயா னாவ னருச்சுனா – வான்மாக்கட்**
**காதியொடு மத்தியமு மந்தமு மாமிவைக**
**ளாதியாம் யானே யறி...** X - 20

அருச்சுனா, ஒன்றாய்ச் சேர்த்து உணரும் ஆன்மாக்கள் யாவின் அகத்தும் அமர்கின்ற ஆன்மா யான் ஆவன். ஆன்மாக்கட்கு ஆதியொடு மத்தியமும் அந்தமும் ஆம் இவைகள் ஆதியாம் யானே அறி.

அருச்சுனா, சேத்திரத்தையும் சேத்திரஞ்ஞனையும் வேறுபாடுகாணாமல் ஒன்றாய்ச் சேர்த்து நான் என்று உணருகின்ற சர்வ ஜீவர்களது இதயத்திலும் உள்ள பரமாத்மா நானே யாகும். அந்த சர்வ ஜீவர்கட்கும் முதலும் (உற்பத்தியும்) நடுவும் (இருப்பும்) முடிவும் (லயமுமான) மூன்று நிலைகளும் முழு முதற் பொருளாகிய நானே யாவன் என்பதை நீ அறிவாயாக.

***... மெய்யெப் – போதும்***

**5. பிறந்தா ரிறக்கப் பெறுத லுறுதி**
**யிறந்தார் பிறப்ப தெனலு – முறுதி**
**விலக்கற் கரிய விதியிதினீ வீணே**
**கலக்க முறலேன் கழறாய்...** II - 27

மெய் எப்போதும் பிறந்தார் இறக்கப் பெறுதல் உறுதி இறந்தார் பிறப்பது எனலும் உறுதி. விலக்கற்கு அரிய விதி இதில் நீ வீணே கலக்கமுறல் ஏன் கழறாய்.

எக்காலத்திலும் உண்மையாதெனில், உடலோடு பிறந்த ஜீவர்களில் யாரும் மரணமடைவது நிச்சயமாகும். அப்படி உடலிறக்கப் பெற்ற ஜீவர்கள் மீண்டும் பிறக்கிறார்கள் என்பதும் திண்ணமே யாகும். தவிர்க்க அரியதான இந்த நியதியில் - நெறியில் - நீ அவசியமின்றி வருந்துவது எதற்காக? சொல்லுவாயாக.

*... கலக்கும்*

6. **பிறப்பிறப்பில் லானென்றும் பின்னு மிவன்றான்**
**பிறந்து கழியப் பெறானே – பிறவாதா**
**னென்றுமுளன் சாசுவத னிவ்வுடல்கொல் லப்படினுங்**
**கொன்றுபடான் றொல்லோனுட் கொள்***ளுக...* II - 20

இவன்தான் என்றும் கலக்கும் பிறப்பு இறப்பு இல்லான் பின்னும் பிறந்து கழியப் பெறானே பிறவாதான் என்றும் உளன் சாசுவதன் தொல்லோன் இவ்வுடல் கொல்லப்படினும் கொன்றுபடான் உட்கொள்ளுக.

இவ்வாத்மாவானவன் எக்காலத்திலும் கலக்கத்தை உண்டாக்குகின்ற ஜனனமும் மரணமுமற்றவன். மேலும் (இவன்) புதிதாக உண்டாகிறவனும் இருந்து பிறகு இல்லாமற் போகிறவனும் ஆகான். (ஆகையால்) உற்பத்தியற்றவன்; எப்போதும் உள்ளவன்; ஸ்திரமானவன்; புராதனன் (மிகப் பழையோன்). இவ்வுடல் நாசமடைந்தாலும் அழிக்கப்பட முடியாதவன். (இதை) அறிக.

*... – என்றும்*

7. **இவன்றுணிக்க வொண்ணா னெரிக்கவொண் ணாதா**
**னிவனனைக்க வற்றவொணா னேது – மிவனித்த**
**னெங்குமுளன் றாணு வியல்பாற் சனாதனன்**
**றங்கு மசலனே தா***னான்மா...* II - 24

என்றும் ஆன்மா இவன் ஏதும் இவன் துணிக்க ஒண்ணான்; எரிக்க ஒண்ணாதான் ; இவன் நனைக்க, வற்ற ஒணான், இவன் நித்தன்; எங்கும் உளன்; தாணு; இயல்பால் சனாதனன்; தங்கும் அசலனேதான்.

எக்காலத்திலும் ஆன்மாவாகிய இவன் எவ்விதமாகவும் வெட்டுண்டு போக தக்கவனல்ல. எரிக்கப்படவும் முடியாதவன். இவன் நனைக்கப்படவோ, உலர்த்தப்படவோ முடியாதவன். இவன் எப்போதும் உள்ளவன். சர்வ வியாபி; ஸ்திரமானவன்; சுபாவமாகவே அனாதியாயுள்ளவன்; சலனமற்றிருப்பவனேயாகும்.

*... – பங்கில்*

8. **எதனா னிறைவெய்து மேயுமிவை யாவு**
**மதழிவில் லாத தறிவா – யெதனானு**
**மாளாத வப்பொருளை மாளச் செயவல்ல**
**வாளாகா னாரு மறி...** II - 17

ஏயும் இவையாவும் பங்குஇல் எதனால் நிறைவு எய்தும் அது அழிவில்லாதது அறிவாய். எதனாலும் மாளாத அப்பொருளை ஆரும் மாளச் செயவல்ல ஆள் ஆகான் அறி.

தோன்றுகின்ற இச்சகமனைத்தும் கூறுபடாத எந்த ஆத்மாவினால் வியாபிக்கப்பட்டுள்ளதோ அந்த ஆன்ம சொரூபமானது அழிவற்றதென்று அறிக. எதனானும் நாசமாகாத அந்த ஆத்மாவை எவனும் அழிக்க வல்லவனாக மாட்டான். இதனை அறிவாயாக.

***...யுண்மை – கேளாய் நீ***

**9. இல்லா ததனுக் கிருப்பில்லை யுள்ளதனுக்**
**கில்லாமை யென்ப திலையெனவே – யில்லதுள**
**தென்னு மிரண்டி னியல்பிதுதாங் கண்டார்மெய்**
**தன்னை யறிந்த தவர்*மெய்யின் – மன்னிடினும்...*** II - 16

உண்மை கேளாய் நீ. இல்லாத அதனுக்கு இருப்பு இல்லை. உள்ள அதனுக்கு இல்லாமை என்பது இலை. எனவே இல்லது உளது என்னும் இரண்டின் இயல்பு இதுதான் கண்டார் மெய்யின் மன்னிடினும் மெய்தன்னை அறிந்தவர்.

(இன்னும்) அர்ச்சுனா, இவ்வுண்மையைக் கேட்பாயாக. இல்லாத ஒரு பொருளுக்கு (அசத்துக்கு) இருக்கிறேன் என்ற நிலை எக்காலும் கிடையாது. எப்போதும் உள்ள வஸ்துவுக்கு (சத்துக்கு) இல்லாமற் போதல் (அபாவம்) என்பதே எக்காலத்தும் கிடையாது. ஆகவே (சத் அசத்துக்கள் எனப்படும்) உள்ளது. இல்லாதது எனப்படும் இவ் விரண்டின் தன்மையை இன்னதென்று அறிந்தவர்களே தேகத்தில் சேர்ந்திருந்தாலும் நிச்சயம் சத்தியத்தை (மெய்ஞ்ஞானத்தை) உணர்ந்த (பெற்ற) தவப் பெரியோராகும்.

**10. எங்குமெவற் றும்விண் ணிருந்தாலு நுண்மையினாற்**
**றங்குமவற் றிற்பற்றாத் தன்மைபோ – லெங்குமே**
**தேகத் திருந்தாலுந் தேகியா மான்மாவுந்**
**தேகத்தி லொட்டான் றெளி...** XIII - 32

எங்கும் எவற்றும் விண் இருந்தாலும் நுண்மையினால் தங்கும் அவற்றில் பற்றாத் தன்மை போல் தேகியாம் ஆன்மாவும் எங்குமே தேகத்து இருந்தாலும் தேகத்தில் ஒட்டான். தெளி.

எல்லா விடத்திலும் எப்பொருள்களிலும் ஆகாயமானது நிறைந்திருந்தாலும் அதனுடைய சூக்ஷ்மத் தன்மையினால் தான்

வியாபித்துள்ள அப்பொருள்களோடு ஒன்றாகி விடாத தன்மையைப் போல் தேகியாகிற ஆன்மாவும் எல்லா தேகங்களிலும் இடங் கொண்டிருந்தாலும் தேகத்தோடு ஒன்றாகிவிடமாட்டான். இதை உணர்ந்து தெளிவடைக.

*... யொளிவிண் — ணாகக்*

**11. கதிரோன் மதியுங் கனலுமெக் காலு**
**மதனை யொளிர்வித்த லாகா — தெதனை**
**யடைந்தே மடங்காரோ வஃதுபர மாமென்**
**னுடையவீ டாமெனவே யோர்*வாய்...*** XV - 6

விண் ஒளியாக கதிரோன் மதியும் கனலும் எக்காலும் அதனை ஒளிர்வித்தல் ஆகாது. எதனை அடைந்தே மடங்காரோ அஃது பரமாம் என்னுடைய வீடாம் எனவே ஓர்வாய்.

ஆகாயத்தில் பிரகாசிக்கின்றதாயுள்ள சூரியனும், சந்திரனும், அக்கினியும் எக்காலத்தும் அவ்வான்மாவை பிரகாசப்படுத்த (விளக்கி வைக்க) முடியாததாகும். எந்த நிலையை அடைந்து திரும்பவும் பிறப்பிறப்பை அடையாரோ அதுவே மேன்மையான எனது மோக்ஷ வீடாகும் என்று உணர்வாயாக.

*... — வடிவுற்(று)*

**12. உதியா தொழியாதென் றோதிடப் பட்ட**
**வதுமே னிலையென் றறைவ — ரெதனை**
**மருவித் திரும்பாரோ மற்றஃதென் மேலா**
**மரியவீ டாகு ம*றிவாய்...*** VIII - 21

வடிவுற்று உதியாது ஒழியாது என்று ஓதிடப்பட்ட அது மேல்நிலை என்று அறைவர். மற்று எதனை மருவித் திரும்பாரோ அஃது என் மேலாம் அரிய வீடு ஆகும் அறிவாய்.

உருவங்கொண்டு பிறக்காததென்றும் இறக்காததென்றும் சொல்லப்பட்ட அந்த பரமாத்ம பதமே உயர்வற உயர்ந்த பதமாகும் என்று ஞானிகள் கூறுவர். மேலும் எதை யடைந்த பின் திரும்பவும் ஜனன மரணமடைவதில்லையோ அந்த பதமே என்னுடையதும், மேலானதும், அரியதானதுமான மோக்ஷ பதமாகும். நீ அறிவாயாக. (தெரிந்து கொள்)

*... — கருவஞ்சேர்*

13. மானமிலார் மோகமிலார் மாற்றினார் சார்பாசை
தாநிலைத்தா ரெக்காலுந் தன்னிலே — யூனசுக
துக்கமெனுந் தொந்தந் தொலைந்தவரா ஞானியரவ்
அக்கரவீ டாளு மவர்... XV - 5

கருவம் சேர் மானம் இலார் மோகம் இலார் சார்பு ஆசை மாற்றினார் எக்காலும் தன்னிலே தான் நிலைத்தார் ஊன சுகதுக்கம் எனும் தொந்தம் தொலைந்தவராம் ஞானியர் அவ் அக்கர வீடு ஆளும் அவர்.

ஒன்றிலும் அகங்கார அபிமானமற்றவராயும், மயக்கமற்றவராயும், தன்னைப் பற்றும் ஆசைகளை எல்லாம் நீக்கியவராயும், எப்போதும் தன் ஆத்மாவிலேயே நிலைபெற்றுள்ளவராயும், குறைபாடுடைய இன்ப துன்பங்கள் எனப்படும் இரட்டைகள் எல்லாம் அற்றவர்களாயும் உள்ள அறிஞர்கள் அந்த அழிவற்ற மோக்ஷ பதத்தை ஆட்சி செய்பவராகும்.

*... ஆசை — மிக்க*

14. எவனூல் விதியை யிகந்திச்சை யேவு
மவவழி தன்னை யடுப்பா — னவனென்றுஞ்
சாரானே சித்தியொடு சாந்தி சுகத்தினையுஞ்
சேரானே முத்திச் சிறப்*பதையும்...* XVI - 23

ஆசைமிக்க எவன் நூல் விதியை இகந்து இச்சை ஏவும் அவவழி தன்னை அடுப்பான் அவன் சித்தியொடு சாந்தி சுகத்தினையும் என்றும் சாரானே. முத்திச் சிறப்பு அதையும் சேரானே.

உலக ஆசைகள் மிகுந்த எந்த மனிதன் (புலனை அடக்கு என்று புகட்டும்) சாத்திர நெறியை விடுத்து ஆசையில் தூண்டப்பட்ட மனம் செல்லுகின்ற தீய நெறிகளைப் பின் பற்றுவானோ அந்த மனிதன் ஆத்ம சித்தியையும் அதனால் பெறும் சாந்தானந்தத்தையும் என்றைக்கும் அடைய மாட்டான். மோக்ஷ சிறப்பையும் ஒழுங்காகப் பெறமாட்டான்

*.... — நேராக*

15. எல்லா வுயிர்களிலொத் தேகனாய் நாசமுறு
மெல்லாவற் றும்பொன்றா தேய்ந்தோனா — யெல்லோரும்
பார்ப்பதற் கொண்ணாப் பரமேச் சுரனையெவன்
பார்ப்பா னவனேபார்ப் பா*னயலார் — பார்ப்பாரோ...* XIII - 27

எல்லா உயிர்களில் ஒத்து ஏகனாய் நாசமுறும் எல்லாவற்றும் பொன்றாது ஏய்ந்தோனாய் எல்லோரும் பார்ப்பதற்கு ஒண்ணா பரமேச்சுரனை எவன் பார்ப்பான் அவனே பார்ப்பான் அயலார் பார்ப்பாரோ.

சகல உயிர்களிடத்தும் சமமாயிருக்கின்ற ஒருவனாகவும், அழியக் கூடிய எல்லாப் பொருள்களிடையிலும் அழியாது விரவி இருப்பவனாய், எல்லோராலும் பார்க்க முடியாதானாய பரமேசுவரனை (பரம்பொருளை) எவன் அறிந்து கொள்கிறானோ அவனே உண்மையறிந்த ஞானியாவான். அப்படி அறியாத மற்றவர்கள் ஞானியாவரோ?

**16. அன்னிய மெண்ணாத வன்பினா லென்னையெவ
ருன்னிடுவா ரன்னவர்க்கே யுத்தமனே – யென்னையிவ்
வாறாக மெய்யா யறியத் தரிசிக்கப்
பேறாக்கத் தக்கோன்யான் பின்...** XI - 54

உத்தமனே, அன்னியம் எண்ணாத அன்பினால் என்னை எவர் உன்னிடுவார் அன்னவர்க்கே இவ்வாறாக என்னை மெய்யாய் அறிய தரிசிக்க பின் பேறாக்க யான் தக்கோன்.

உத்தமனான அர்ச்சுனா, என்னைத் தவிர வேறு கருதாத பக்தியினால் என்னை யார் நினைத்திருக்கின்றனரோ அவர்களுக்குத்தான் மேற்கூறியவாறு என்னை உண்மையாகவே அறிந்து கொள்ளவும், கண்டுகொள்ளவும் பிறகு அனுபவிக்கவும் நான் தகுந்தவனாவேன்.

*.... பல – வாறாம்*

**17. அவரவர் தன்மைக் கடுத்த படியே
யெவர்க்குஞ் சிரத்தை யெழுங்காண் – புவியிற்
சிரத்தை யுருபுருடன் சேர்சிரத்தைக் கொத்தே
புருடனு மாதல் பொது...** XVII - 3

பலவாறாம் அவர்அவர் தன்மைக்கு அடுத்த படியே சிரத்தை எவர்க்கும் எழும்காண் புவியில் சிரத்தை உருபுருடன் சேர் சிரத்தைக்கு ஒத்தே புருடனும் ஆதல் பொது.

பலவிதப்பட்ட அந்தந்த ஜீவர்களது இயல்புக்கு ஏற்றவிதமாகவே ஒவ்வொன்றில் ஒவ்வொருவருக்கு சிரத்தையானது உண்டாகும் அறிக. இவ்வுலகில் சிரத்தை கொண்டவன் தான் எப்பொருளில் சிரத்தை கொண்டுள்ளானோ அதற்குத் தக்க புருஷனாக ஆகிறான் என்பது நியதியாகும்.

*.... மெய் – தெரியச்*

**18. சிரத்தையுள் ளோனே திருத்திப் பொறியைக்**
**கருத்தில் விடாதே கருதி – மருவுவான்**
**மெய்யறிவு மேவிப்பின் மேலான சாந்தியினை**
**யெய்துவான் சின்னாளி லிங்கு...** IV - 39

மெய் தெரிய சிரத்தை உள்ளோனே பொறியைக் கருத்தில் விடாதே திருத்திக் கருதி மெய்யறிவு மருவுவான் மேவி பின் சின்னாளில் இங்கு மேலான சாந்தியினை எய்துவான்

உண்மையை அறிய வேண்டுமென்ற தீவிர சிரத்தை கொண்டவனே. ஐம்பொறிகளையும் அவை செல்லும் போக்கில் விடாமல் தடுத்து பரிசுத்தப் படுத்தி இடைவிடாது உள்ளே நாடி மெய்ஞ்ஞானமடைவான். பிறகு சீக்கிரத்தில் இங்கேயே (இந்த ஜென்மத்திலேயே) மேன்மையான மோக்ஷ சாந்தியை பெறுவான்.

*.... இந்த – மெய்யுற*

**19. என்பாலே சித்த மிருத்தியெப் போதுமுள்**
**ளன்பாலே பத்திசெயு மன்பருக் – கென்னையவர்**
**சார்வா ரெதனாலச் சற்புத்தி யோகத்தை**
**யீவேனா னென்னருளா லெண்...** X - 10

இநத மெய்யுற எப்போதும் என்பாலே சித்தம் இருத்தி உள் அன்பாலே பத்தி செயும் அன்பருக்கு என்னை அவர் எதனால் சார்வார் அச்சற்புத்தி யோகத்தை நான் என்னருளால் ஈவேன் எண்.

மெய்தெரிய வேண்டுமென்ற சிரத்தையாகிய உண்மை விருப்புடன் எப்போதும் என்னிடத்திலேயே மனத்தைப் பதியவைத்து இதய பூர்வமான அன்பினால் பக்தி செய்கின்ற உத்தம பக்தர்களுக்கு என்னை அவர்கள் எவ் வுபாயத்தால் அடைய முடியுமோ அந்த உத்தமமான புத்தி (ஞான) யோகத்தை நானே அருள் கூர்ந்து அளிப்பேன் அறிவாயாக.

*.... அதனைச் – சேர்வோராம்*

**20. அன்னவ ருள்ளத் தமர்ந்தே யருளதனாற்**
**றுன்னுமறி யாமையாந் தொல்லிருளை – மின்னு**
**மறிவாம் விளக்கா லறவே யிறுதி**
**யுறச்செய்வேன் யானென் றுணர்*வாய்...*** X - 11

அதனைச் சேர்வோர் ஆம் அன்னவர் உள்ளத்து யான் அமர்ந்தே அருளதனால் துன்னும் அறியாமையாம் தொல் இருளை, மின்னும் அறிவாம் விளக்கால் அறவே இறுதி உறச் செய்வேன் உணர்வாய்.

அந்த மெய்யுறவை யார் உடையவர்களாயிருக்கிறார்களோ அவர்களது இதயத்தில் நானே இருந்து கொண்டு எனதருளினாலேயே அவர்களிடம் ஏற்பட்டுள்ள அஞ்ஞானமாகிய மிக பழமையான இருளை, பிரகாசிக்கின்ற ஞானமாகிற தீபத்தால் அடியோடு ஒழியும்படிச் செய்கின்றேன். இதை அறிவாயாக.

*.... — பெறுமவ்*

**21. வறிவா லெவர்த மகத்தறி யாமை**
**யறவே யழிந்த தவர்த — மறிவும்**
**பரிதியைப் போலப் பரத்தை யொளிரப்**
**புரிவித் திடுமப் பொழுதே...** V - 16

பெறும் அவ் அறிவால் எவர் தம் அகத்து அறியாமை அறவே அழிந்தது அவர்தம் அறிவும் பரிதியைப் போல அப்பொழுதே பரத்தை ஒளிரப் புரிவித்திடும்.

அப்படி என்னால் கிடைக்கப் பெற்ற ஞானத்தால் எவருடைய இதயத்திலிருந்த அஞ்ஞானமானது முற்றும் நாசமாயிற்றோ அவர்களது ஞானமே சூரியனைப்போல (சுயஞ்ஜோதியாய்) அக்கணமே பிரம்மத்தின் விளக்கத்தை நன்றாய் உணர்த்தும்.

*.... — தெரியுலகின்*

**22. மேன்மை யுறப்பொறிகண் மேவும் பொறிகட்கு**
**மேன்மன மம்மனத்தின் மேன்மதி — தான் மதியின்**
**மேன்மையா யாவன் மிளிர்வா னவன்றன்னை**
**யான்மாவா மென்ன வறி...** III - 42

தெரி உலகின் பொறிகள் மேன்மை உற மேவும் பொறிகட்கு மனம் மேல் அம் மனத்தின் மேல் மதி மதியின் மேன்மையாய் யாவன்தான் மிளிர்வான் அவன் தன்னை ஆன்மாவாம் என்ன அறி.

காணப்படுகின்ற இவ்வுலகை விட இந்திரியங்கள் உயர்ந்தனவாம். அவ்வாறாக மேன்மையான அந்த இந்திரியங்களை விட மனம் உயர்ந்ததாகும். அந்த மனத்தினும் மேன்மையானது புத்தி. அந்த புத்தியை விட மேன்மையானவனாக எவன் 'தான்' என்று விளங்குகின்றானோ அவனையே ஆன்மா என்று அறிவாயாக.

*.... யறிவாம் – ஆன்மா*

**23. மதிக்குயர்வி்வ் வாறு மதித்தே மனத்தை
மதியா னிறுவியான் மாவின் – மதிசேர்
விசயா செயிப்பாய் வெலற்கரிய காம
நிசசத் துருவுருவை நீயும்...** III - 43

மதிசேர் விசயா. அறிவாம் ஆன்மா இவ்வாறு மதிக்கு உயர்வு மதித்தே மனத்தை மதியால் ஆன்மாவில் நிறுவி வெலற்கு அரிய காம நிச சத்துரு உருவை நீயும் செயிப்பாய்.

விவேகியான அர்ச்சுனா! அறிவுமயமான ஆன்மாவை இவ்விதமாக புத்தியை விடச் சிறந்ததாக நீ அறிந்து கொண்டு மனத்தைப் புத்தியால் ஆன்மாவில் நிலைநிற்கும்படிச் செய்து வெல்லுவதற்கு எளிதில் முடியாததான ஆசைகளாகிற உனது உண்மையான எதிரிகளை நீயும் வெல்வாயாக.

*.... – இசைந்தே*

**24. எரியு மெரியு மெரிகரும்பை யெல்லா
மெரித்துநீ றாக்க லெனவே - யெரியா
மறிவுங் கரும மனைத்து மெரித்தே
யுறுவிக்கு நீறா வுணர்...** IV - 37

இசைந்தே எரியும் எரியும் எரி கரும்பை எல்லாம் எரித்து நீறு ஆக்கல் எனவே எரியாம் அறிவும் கருமம் அனைத்தும் எரித்தே நீறாய் உறுவிக்கும். உணர்.

மண்டி எரிகின்ற தீயானது எரிபடு பொருளான விறகுகளை முற்றும் சுட்டு எப்படிச் சாம்பலாக்குமோ அவ்விதமே ஞானமாகிய அக்கினியும் சர்வ கர்மங்களையும் எரித்து, சாம்பலாகச் செய்யும் என்று அறிக.

*.... மெய் – யறிவால்*

**25. எவனியக்க மெல்லாமு மிச்சையெண்ண மென்னு
மிவையில் லனவா வியங்கு – மவனே
யறிவெரியால் வெந்தவினை யானவனை யான்றோ
ரறிவொளிசேர் பண்டிதனென் றார்...** IV - 19

மெய் அறிவால் எவன் இயக்கம் எல்லாமும் இச்சை எண்ணம் என்னும் இவை இல்லனவாய் இயங்கும் அவனே அறிவு எரியால்

வெந்த வினையான் அவனை ஆன்றோர் அறிவு ஒளிசேர் பண்டிதன் என்றார்.

மெய்ஞ்ஞானத்தினால் எவனொருவன் எல்லா கருமங்களும். ஆசை. சங்கற்பம் என்று சொல்லப்படும் இவைகளும் இல்லாதவனாக இருக்கிறவனோ, ஞானாக்கினியால் தகிக்கப்பட்டவனான அன்னவனை பெரியோர்கள் ஞான ஒளி பெற்ற பண்டிதன் என்று கூறுகின்றனர்.

*.... மெய் – யறிவுற்றே*

26. **ஆசைசின மற்றா ரடங்கு மனமுற்றார்**
**தேசுறூஉ மான்மாவைத் தேரெதிகள் – பாசமில்**
**புத்த ரவருக்குப் பூரணநிர் வாணசுக**
**நித்தமனு பூதமா நேர்...** V - 26

மெய் அறிவு உற்றே ஆசை சினம் அற்றார் அடங்கு மனம் உற்றார் தேசுறூஉம் ஆன்மாவை தேர் எதிகள் பாசம் இல் புத்தர் அவருக்கு பூரண நிர்வாண சுகம் நேர் நித்தம் அனுபூதமாம்.

இந்த உண்மை ஞானம் பெற்று ஆசையும் கோபமும் அற்றவர்களாய். அடங்கிய மனமுடையவர்களாய் சுயம்பிரகாசமான ஆன்மாவை உணர்ந்த சந்நியாசிகளாய் உள்ள பற்றற்ற ஞானபோதம் பெற்ற அவர்களுக்கு பரிபூரணமான பிரம்ம நிர்வாண சுகமானது (இங்கேயே) தடையின்றி எப்போதும் அனுபவமாகின்றது (அடையப்படுகின்றது) தெரிந்து கொள்க.

*.... அதற்கா – வெத்தனித்துத்*

27. **தீரஞ்சேர் புத்தியினாற் சித்தத்தை மெல்லமெல்ல**
**நேரச் செயவேண்டு நிச்சலன – மாரதனே**
**சித்தத்தை யான்மாவிற் சேர்த்திடுக மற்றெதுவு**
**மித்தனையு மெண்ணிடா தே...** VI - 25

அதற்கா எத்தனித்து தீரம் சேர் புத்தியினால் சித்தத்தை மெல்ல மெல்ல நிச்சலனம் நேரச் செய வேண்டும். மாரதனே. சித்தத்தை ஆன்மாவில் சேர்த்திடுக மற்று எதுவும் இத்தனையும் எண்ணிடாதே.

அந்த ப்ரம்ம நிர்வாண சுகத்திற்காக முயற்சி செய்து மஹா தைரியம் பொருந்திய விவேகத்தினால் மனதை கிரமமாக (கொஞ்சம் கொஞ்சமாக படிப்படியாக) அலைவற்ற நிலையை அடையும்படிச் செய்ய வேண்டும். மஹா ரதனே, மனதை ஆன்மாவில் நிலைபெறச் செய்வாய். வேறு எதையும் கொஞ்சம்கூட நினைக்கவே வேண்டாம்.

*.... மந்தி – யொத்தே*

**28. எதுவுந் திரமின்றி யென்றுமலை சித்த**
**மெதெதனைப் பற்றியே யேகு – மததனின்**
**றீர்த்தந்தச் சித்தத்தை யெப்போது மான்மாவிற்**
**சேர்த்துத் திரமுறவே செய்...** VI - 26

மந்தி ஒத்தே எதுவும் திரம் இன்றி என்றும் அலை சித்தம் எது எதனைப் பற்றியே ஏகும் அது அதனின்று அந்தச் சித்தத்தை ஈர்த்து ஆன்மாவில் சேர்த்து எப்போதும் திரம் உறவே செய்.

குரங்கைப் போல கொஞ்சமும் நிலைத்து நிற்காமல் எப்போதும் அலைகின்ற மனமானது எவ்வெவ் விஷயங்களைப் பற்றிக் கொண்டு ஆன்மாவை விட்டு வெளிச் செல்கிறதோ அந்தந்த விஷயங்களிலிருந்தும் அந்த மனதை இழுத்து வந்து ஆத்மாவினிடத்தில் சதாகாலமும் நிலைநிற்கும்படியாகச் செய்வாயாக.

*.... இங்ஙன் – சேர்த்தே*

**29. ஒடுக்கிப் பொறியை யுளத்தை மதியை**
**விடுத்தாசை யச்சம் வெறுப்பு – மடுத்தென்று**
**முத்தி தனக்கே முனையு முனிவனெவன்**
**முத்தனே யந்த முனி*வரனும்...*** V - 28

இங்ஙன் சேர்த்தே பொறியை உளத்தை மதியை ஒடுக்கி ஆசை அச்சம் வெறுப்பும் விடுத்து முத்தி தனக்கே என்றும் அடுத்து முனையும் முனிவன் எவன் அந்த முனிவரனும் முத்தனே.

இப்படி மனதை ஆத்மாவில் நிலைநிறுத்தி இந்திரியங்களையும் மனதையும் புத்தியையும் ஒடுக்கி ஆசை, பயம், குரோதம் இவைகளையும் விட்டு மோக்ஷத்திற்காகவே சதாகாலமும் முயற்சியோடு உள்ள முனிவன் எவனோ அந்த முனி சிரேஷ்டனும் முத்தியை அடைந்தவனே யாவான்.

*.... – நித்தம்*

**30. சகல வுயிர்களிற் றன்னையுந் தன்னிற்**
**சகல வுயிர்க டமையும் – விகலமறத்**
**தன்னினிலைத் தெங்குஞ் சமநோக்குள் ளான்காண்பன்**
**றன்னிய னந்தத் தவன்...** VI - 29

நித்தம் விகலம் அற தன்னில் நிலைத்து எங்கும் சமநோக்கு உள்ளான் சகல உயிர்களில் தன்னையும் தன்னில் சகல உயிர்கள் தமையும் காண்பன் அந்தத் தவன் தன்னியன்.

என்றும் இடைவிடாமல் ஆன்மாவில் நிலைபெற்று எவ்விடத்திலும் சமநோக்கம் உடையவன் எல்லா உயிர்களிலும் (ஜீவராசிகளிலும்) தன்னையும், தன்னிடத்தில் எல்லா உயிர்களையும் (ஜீவராசிகளையும்) காண்கின்றான். அந்த தவசிரேஷ்டன் பாக்கியசாலி.

*.... போல — மன்னினராய்*

**31. அன்னிய சிந்தை யணுவுமிலா தென்னையே**
**யுன்னியெவ ரென்று முபாசிப்பா — ரென்னிலே**
**யென்றுமொன்று மன்னவர்தம் யோகக்ஷே மங்களை**
**யென்றும் தரித்திடுவேன் யான்*றலையால்...*** IX - 22

போல மன்னினராய் அன்னிய சிந்தை அணுவும் இலாது என்னையே உன்னி எவர் என்றும் உபாசிப்பார் என்னிலே என்றும் ஒன்றும் அன்னவர்தம் யோக க்ஷேமங்களை என்றும் யான் தலையால் தரித்திடுவேன்.

அவனைப் போல ஆன்மாவில் நிலைபெற்றவர்களாய் வேறு சிந்தை கொஞ்சம் கூட இல்லாமல் என்னையே நினைத்து எப்போதும் உபாசிக்கிறவர்கள் எவர். அவர் (மேற்கூறிய உபாசனையின் காரணத்தால்) என்னிடத்தில் எப்போதும் நிலைபெற்றிருக்கும் அவர்களது வாழ்வின் அத்தியாவசியங்களை எல்லாம் எப்போதும் நானே தலையால் தாங்கி வகிக்கின்றேன்.

*.... — ஒன்றும்*

**32. அவர்களின் ஞானி யனனிய பக்த**
**னவன்விடா யோகியு மாவ — னவனே**
**பெரிய னவற்குப் பிரியன்யா னெற்குப்**
**பிரிய னவனும் பெரிது*ம்...*** VII - 17

ஒன்றும் அவர்களின் ஞானி அனனிய பக்தன் அவன் விடா யோகியும் ஆவன். அவனே பெரியன் அவற்கு பிரியன் (பெரிதும்) யான் எற்கு அவனும் பெரிதும் பிரியன்.

(அப்படி ) என்னை உபாசித்து அடைந்தவர்களில் ஞானியே (ஆன்ம ஞான முற்றவனே) என்னில் அன்னியமாகாத (உத்தம) பக்தனும் ஆவான். அவனே என்னை என்றும் நீங்காது சேர்ந்த உத்தம

யோகியுமாவான். அவனே அனைவரினும் மேலோன். அவனுக்கு நானே மிகவும் பிரியமுள்ளவனாவேன். எனக்கும் அவனே மிகவும் பிரியமுள்ளவனாவான்.

*.... – பிரிவில்லா*

33. **எண்ணில்சென் மங்க ளிறுதி யதின்ஞானி**
**யெண்ணி யகத்திலெனை யெப்போது – மெண்ணி**
**யெலாம்வாசு தேவனென வென்னுறுவான் மான்மா**
**வெலார்க்கு மரிய னிவன்...** VII - 19

ஞானி பிரிவில்லா எண்ணில் சென்மங்கள் இறுதி அதில் அகத்தில் எனை எப்போதும் எண்ணி எலாம் வாசுதேவன் என எண்ணி என் உறுவான் மா ஆன்மா இவன் எலார்க்கும் அரியன்.

ஞானியானவன். தொடர்ந்துள்ள கணக்கற்ற பிறவிகளின் முடிவில் தன் இதயத்திலேயே என்னை எப்போதும் பாவித்தும் (அதனால்) சகலமும் வாசுதேவனே என்று அறிந்து என்னை அடைகின்றான். மகாத்மாவான இந்த ஞானி எல்லோரிலும் அருமையாய்க் கிடைக்கக் கூடியவனாகும். (முக்கியமானவனாகும்).

*.... எண் – ணிலாதே*

34. **அகத்துள பற்றெல்லா மற்றானெப் போதி**
**லுகப்புந் தனிற்றன்னா லுற்றான் – வகுத்தன**
**ரப்போ தவன்மெய் யறிஞனா னானென்று**
**மெய்ப்போத முற்றார் *மிகத்தேர்ந்தே...*** II - 55

எண் இலாதே அகத்து உள பற்று எல்லாம் எப்போதில்அற்றான் உகப்பும் (எப்போது) தன்னில் தன்னால் உற்றான் அப்போது அவன் மெய் அறிஞன் ஆனான் என்று மெய்ப்போதமுற்றார் மிகத் தேர்ந்தே வகுத்தனர்.

கணக்கற்றனவாய் மனத்தில் குடி கொண்டிருந்த (உள்ளதுமில்லதுமாய் கண்ட) ஆசைகளை எல்லாம் எப்போது ஒழித்தவனாகிறானோ. ஆனந்தத்தையும் எப்போது தன்னிடத்திலேயே தன்னாலேயே அடைகிறானோ அப்போதுதான் அவன் உண்மை ஞானியானான் என்று உண்மை ஞானம் பெற்ற பெரியோர்கள் நன்றாக ஆய்ந்தறிந்து தீர்மானித்திருக்கின்றனர்.

*.... – எப்போ(து)*

35. இகந்தவனா யிச்சையெலா மெய்தாத திற்பற்
றகன்றவனு மாயுள்ளா னார்தா – னகந்தை
மமதையு மில்லாவம் மாபுருட னென்று
மமைதி யுறுவா னறி*வாய்...* II - 71

எப்போது இச்சை எலாம் இகந்தவனாய் எய்தாததில் பற்று அகன்றவனுமாய் ஆர் உள்ளான் அகந்தை மமதையும் இல்லாதான் அம் மா புருடன் என்றும் அமைதி உறுவான் அறிவாய்.

எப்பொழுது ஆசைகளெல்லாம் விட்டு நீங்கியவனாய். கிடைக்காதவற்றில் விருப்பமல்லாதவனுமாய் எவன் இருக்கின்றானோ, அகங்கார மமகாரங்கள் அற்ற (நான் எனது என்பதில்லாத) சமாதி நிஷ்டையோடு கூடிய அந்த ஜீவன் முக்தனாகிய மஹா புருஷனானவன் (மஹான்) எப்போதும் சாந்தியை அடைவான் (பெற்றவனாயிருப்பான்). நீ இதை அறிவாயாக.

*.... – அமைந்த*

36. எவன்பா லுலகுபய மேது முறாதோ
வெவனுலகுக் கஞ்சானோ வேது – மெவன்றா
னுவப்புவர்ப்பு பீதி யுளக்கலக்க மற்றோ
னவனெனக்கு மீப்பிரிய னா*ந்தேர்...* XII - 15

அமைந்த எவன்பால் உலகு ஏதும் பயமுறாதோ எவன் ஏதும் உலகுக்கு அஞ்சானோ, உவப்பு, உவர்ப்பு, பீதி, உளக்கலக்கம் எவன்தான் அற்றோன் அவன் எனக்கு மீப்பிரியனாம் தேர்.

இவ்வாறு ஆன்ம சாந்தி யடைந்த எவனிடத்தில் உலகத்தில் உள்ள எந்த ஜீவனும் ஏதும் பயமடையாதோ, எவன் சிறிதேனும் உலகத்தைக் கண்டு பயப்பட மாட்டானோ விருப்பு, வெறுப்பு, பயம், மனக்கலக்கம் ஆகிய இவைகள் இல்லாதவன் எவனோ அவனே எனக்கு மிகவும் பிரியமானவனாகும் என்று தெரிந்து கொள்க.

*.... – எவனொருவன்*

37. மானமவ மான மருவிற் சமனாகி
யேனையருற் றார்களிலொப் பேய்ந்தோனாய்த் – தானே
தணந்தான் றனையகலாத் தன்முயற்சி யெல்லாங்
குணங்கள் கடந்தோனாக் கூ*றாய்...* XIV - 25

எவன் ஒருவன் மானம் அவமானம் மருவில் சமனாகி உற்றார் ஏனையர்களில் ஒப்பு ஓய்ந்தோனாய் தனை அகலா தன் முயற்சி எல்லாம் தணந்தான்தானே குணங்கள் கடந்தோனாய் கூறாய்.

யார் ஒருவன் (எந்த மேலோன்) புகழ்ச்சியும் இகழ்ச்சியும் வந்தவிடத்தில் அவைகளால் (கலங்காமல்) சமபுத்தி உடையவனாகி மித்ரர், சத்ருக்கள் ஆகிய இரு திறத்தாரிடத்தும் சமபுத்தி உடையவனாய் எளிதில் விட்டு அகலாததான, (கர்மங்களை ஆரம்பிக்கும்) தனது முயற்சிகள் எல்லாவற்றினின்று நீங்கப் பெற்றவனோ அவனே குணாதீதன் என்று சொல்க.

*.... – தணவா(து)*

**38. எவனான்மா வின்க ணிரமிப்பான் மற்று**
**மெவனான்மா விற்றிருத்தி யேய்ந்தா – னெவனான்மா**
**வின்கண்ணே யின்புற் றிருப்பா னவன்றனக்**
**கென்றுமே செய்வதற்கொன் றின்*றாமே...*** III - 17

தணவாது எவன் ஆன்மாவின் கண் இரமிப்பான் மற்றும் எவன் ஆன்மாவில் திருத்தி ஏய்ந்தான் எவன் ஆன்மாவின் கண்ணே இன்புற்று இருப்பான் அவன் தனக்கு என்றுமே செய்வதற்கு ஒன்று இன்று ஆமே.

எப்போதும் நீங்காமல் எவன் ஆத்மாவிலேயே ரமித்திருப்பானோ மேலும் எவன் ஆத்மாவிலேயே திருப்தி உற்றிருக்கிறானோ எவன் ஆத்மாவிலேயே இன்பமடைந்திருப்பானோ அவனுக்கு எக்காலத்தும் தான் செய்ய வேண்டியதாக ஒரு காரியமும் கிடையாது.

*.... – அன்றியவன்*

**39. பண்ணும் வினையாற் பயனேது மெய்தலிலை**
**பண்ணா ததனாலும் பாவமிலை – நண்ணியவற்**
**கெவ்வுயிர்க் ளாலுந்தா னெய்திடத் தக்கதா**
மெவ்வித மாம்பொருளு மின்*றெங்கு – மெவ்விதத்தும்...* III - 18

அன்றி அவன் பண்ணும் வினையால் ஏதும் பயன் எய்தல் இலை. பண்ணாததனாலும் பாவமிலை. நண்ணி எவ்உயிர்களாலும் தான் எய்திடத் தக்கதாம் எவ்விதமாம் பொருளும் அவற்கு இன்று எங்கும் எவ்விதத்தும்.

அல்லாமலும் அவன் ஏதேனும் செய்தால் அப்படிச் செய்த கர்மங்களால் எத்தகைய பயனையும் அனுபவிப்பதில்லை. அவன் எதைச் செய்யாமலிருந்தாலும் பாவமில்லை. அவ்ன் அடுத்து எந்த

ஜீவர்களாலும் தான் அடையத் தக்கதான எத்தகைய பொருளும் எவ்விடத்திலும் எவ்விதமாகவும் அவனுக்கு இல்லை.

**40. உற்றதாம் பேற்றி லுவப்புற்றான் றொந்தங்க**
**ளிற்றா னழுக்கா றிலாதவ – னொற்றுமை**
**பெற்ற வவற்றுப் பெறாதவற்றுற் றான்செய்த**
**லுற்றாலும் பந்த முறா*னென்றும்...*** IV - 22

உற்றதாம் பேற்றில் உவப்பு உற்றான் தொந்தங்கள் இற்றான் அழுக்காறு இலாதவன். பெற்ற அவற்று பெறாத அவற்று ஒற்றுமை உற்றான் செய்தல் உற்றாலும் என்றும் பந்தம் உறான்.

தன்னை வந்தடைந்தவைகளில் திருப்தி அடைந்தவனாய் இரட்டைகளின் உணர்வு இல்லாதவனாய் பொறாமையற்றவனாய் கைக்குக் கிடைத்த பொருள்களிலும் தனக்குக் கிட்டாத பொருள்களிலும் சமநோக்குடையவனாய் உள்ளவன் எக்கர்மங்களைச் செய்தானாயினும் எக்காலும் பந்தமடைய மாட்டான்.

*.... – பற்றற்றே*

**41. ஈச னுயிர்க ளெவற்றுள்ளுஞ் சேரிதயத்**
**தேசத்தி லென்றுந் திகழ்கின்றான் – பாசமா**
**மாயையா லெந்திரஞ்சேர் மன்னுயிர்கள் யாவினையு**
**மோயலற நின்றுழற்ற லுற்று...** XVIII-61

ஈசன் உயிர்கள் எவற்றுள்ளும் சேர் இதய தேசத்தில் பற்றற்றே நின்றுஎந்திரஞ் சேர் மன்னுயிர்கள் யாவினையும் பாசமாம் மாயையால் ஓயல் அற உழற்றல் உற்று என்றும் திகழ்கின்றான்.

கடவுளானவர் எல்லா உயிர்களின் உள்ளேயும் உள்ள இதயத்தில் பற்றற்றவனாய் இருந்து கொண்டு தேகமாகிய யந்திரத்தில் பிணைக்கப்பட்டுள்ள நிலைபெற்ற எல்லா ஜீவராசிகளையும் ஆசை என்னும் மயக்கத்தால் (மாயை என்னும் கயிற்றால்) ஓயாமல் ஆட்டி வைத்தவனாய் எப்போதும் விளங்கிக் கொண்டிருக்கின்றான்.

*.... உயிர்கள் – நேயன்*

**42. அவனைச் சரண மடைகவெவ் வாற்று**
**மவனருளாற் சாந்தி யடைவா – யவனருளா**
**லீறில்லா வப்பதமு மெய்துவாய் பாரதனே**
**பேறிதனி லில்லை பிற...** XVIII - 62

உயிர்கள் நேயன் அவனை எவ்வாற்றும் சரணம் அடைக. அவன் அருளால் சாந்தி அடைவாய். ஈறில்லா அப்பதமும் அவன் அருளால் எய்துவாய். பாரதனே. இதனில் பேறு பிற இல்லை.

ஜீவர்களிடத்தில் கருணையுள்ளவனான அந்த ஈசுவரனையே எவ்விதத்திலும் சரணமாக அடைவாய். அவனது அருளினால் பரம சாந்தியைப் பெறுவாய். அழிவற்ற ப்ரம்ம நிலையும் அவனது அருளால் அடைவாய். பரத வம்சத்துதித்த அர்ச்சுனா. இதைவிட அடையத் தக்க லாபம் வேறொன்றும் இல்லை.

*.... என்றே – கூறும்*

**பகவற்கீ தைப்பேர்ப் பனுவலின் சாரம்**
**தொகை ஆறே ழாகும் சுலோகம் - தகவே**
**சுருக்கி ரமணன் தொகுத்தளித்த இந்நூல்**
**இருக்குமனம்) ஈசற் கிருப்பு.**

(வாழ்த்து)

அருச்சுனற்கு கீதை யருளினான் வாழி
விரிச்சுரைத்த நூலை மிகவே - சுருக்கியவிந்
நூல்வாழி வாழி நுவலடியர் சீரமணன்
றால் வாழி வாழியருட் டாள்.



நினைவே குறைவை நிகழ்விப்ப தாலந்
நினைவற்ற மோனமே நிறைவென்னும் பாதம்.

ஓம்
நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

ஸ்ரீ

# 4. தக்ஷிணாமூர்த்தி தோத்திரம்

## மங்கலம்

**மன்னுமா முனிவரர் சாந்தி மன்னவே**
**தென்முக மூர்த்தியாய்த் திகழ்ந்து மோனமாந்**
**தன்னிலை திகழ்த்தியித் துதியிற் றன்மயஞ்**
**சொன்னவச் சங்கரன் றுன்னு மென்னுளே.**

மன்னும் மா முனிவர் சாந்தி மன்னவே தென்முக மூர்த்தியாய் திகழ்ந்து மோனமாம் தன்னிலை திகழ்த்தி இத் துதியில் தன்மயம் சொன்ன அச்சங்கரன் என்னுளே துன்னும்.

தன்னை வந்தடைந்த (அல்லது நிலைபெற்ற) பெரிய முனி சிரேஷ்டர்களான சனகர், சனந்தனர், சனத் சுஜாதர், சனத்குமாரர் என்னும் நால்வரும் பரம சாந்தியை அடையும்படியாக தக்ஷிணா மூர்த்தியாயெழுந்தருளி பரமௌனமாதிய ஆத்ம தத்துவத்தை (உணர்த்தி அவர்கட்கு பிறகு அவரே சங்கர வேடம் தாங்கி) இந்த தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்தில் (எதுவும் தன்னையன்றி யில்லை யாதலால்) எல்லாம் தன்மயமே என்று விளக்கிக் கூறிய அந்த சங்கர ஜகத்குரு எனக்குள்ளே விளங்குகின்றார்.

## நூல்

(அறுசீராசிரிய விருத்தம்)

1. **மவுனமா முரையாற் காட்டு மாப்பிரம வத்து வாலன்**
**சிவநிலைத் தவர்சற் சீடர் செறிகுரு வரன்சிற் கைய**
**னுவகையோ ருருவன் றன்னு ளுவப்பவன் களிமு கத்த**
**னவனையாந் தென்பான் மூர்த்தி யப்பனை யேத்து வோமே.**

மவுனமாம் உரையால் காட்டு மா பிரம வத்துவாலன் சிவநிலைத்தவர் சற்சீடர் செறி குருவரன் சிற்கையன் உவகை ஓர் உருவன் தன்னுள் உவப்பவன் களிமுகத்தன் அப்பன் தென்பால் மூர்த்தி அவனை யாம் ஏத்துவோம்.

மௌனமாகிய வியாக்கியானத்தால் தெரிவித்த பரப்பிரம்ம சொரூபனும், பாலனும், பிரம்ம நிஷ்ட முனிகளான உத்தம சிஷ்யர்கள் (நால்வரும்)

சூழ விருக்கும் குரு சிரேஷ்டனும், சின்முத்திரைக் கையனும், ஆனந்த மூர்த்தியும், தன்னிலேயே ரமிப்பவனும், சந்தோஷ முகனும் ஆகிய பரமபிதாவான அந்த தக்ஷிணாமூர்த்தியை நாம் துதிப்போம்.

2. **உலகுகண் ணாடி யூர்நே ருறத்தனு ளஞ்ஞா னத்தால்**
**வெளியினிற் றுயிற்க னாப்போல் விளங்கிடக் கண்டு ஞான**
**நிலையுறு நேரந் தன்னை யொருவனா யெவனேர் காண்பன்**
**றலையுறு குருவா மந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி.**

உலகு கண்ணாடி ஊர் நேர் தனுள் உற அஞ்ஞானத்தால் துயில் கனாப் போல் வெளியினில் விளங்கிடக் கண்டு ஞான நிலை உறும் நேரம் தன்னை ஒருவனாய் எவன் நேர் காண்பன் தலை உறு குருவாம் அந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி.

உலகமானது கண்ணாடியிற் காணப்படும் பட்டணம் போலத் தனக்குள்ளாகவே யிருந்தும், தன் அறியாமையால், நித்திரையாற் கனவு (காண்பது) போலத் தனக்கு வெளியிலிருப்பதாகப் பார்த்து (துயில் நீங்கி விழித்ததும் தன்னை மட்டுமே காண்பது போலத்) தன்னை யறியும் போது தானொருவனே இருப்பதாக எவன் பிரத்யக்ஷமாகப் பார்க்கின்றானோ ஆதி குருவான (முதற் குருவான) அந்த தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

3. **வித்துளே முளைபோன் முன்னம் விகற்பமி லிச்ச கம்பின்**
**கற்பித மாயா தேய காலகர் மத்தாற் பற்பல்**
**சித்திரம் விரிப்பன் யாவன் சித்தனு மாயி கன்போற்**
**சத்தியாற் குருவா மந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி.**

முன்னம் வித்துளே முளைபோல் விகற்பம் இல் இச்சகம் பின் மாயா கற்பித தேய கால கர்மத்தால் பற்பல் சித்திரம். சித்தனும் மாயிகன் போல் சத்தியால் யாவன் விரிப்பன் குருவாம்அந்த தக்ஷிணாமூர்த்தி போற்றி.

முன்பு விதைக்குள் முளை போலத் தனக்குள் வேற்றுமையின்றி யிருந்த இவ்வுலகத்தைப் பின்பு, மாயையாற் பொய்யாய்த் தோற்றுகின்ற தேச கால கர்ம வசத்தால் அநேக விசித்திரமாக சித்தனையும், ஜாலக் காரனையும் போலத் தனது இச்சை (சக்தி)யால் எவன் வெளியில் விரிக்கின்றானோ அந்த தக்ஷிணாமூர்த்தி குருவுக்கு நமஸ்காரம்.

4. எவனொளி யுண்மை யின்மை யியைபொரு ளிலங்கு நேரே
யெவனது நீயா னாயென் றிசைத்துணர்த் துவன்சேர்ந் தோரை
யெவனைநேர் காணின் மீண்டு மிப்பவக் கடல்வீழ் வில்லை
தவருறு குருவா மந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி.

எவன் உண்மை ஒளி இன்மை இயை பொருள் இலங்கும் எவன் சார்ந்தோரை அது நீ ஆனாய் என்று நேரே உணர்த்துவன் எவனை நேர் காணில் மீண்டும் இப்பவக்கடல் வீழ்வு இல்லை தவர் உறு அந்த குருவாம் தக்ஷிணா மூர்த்தி போற்றி.

எவனது உண்மைப் பிரகாசமே பொய்யாய்த் தோற்றும் பொருள்களில் விளங்குகின்றதோ, எவன் தன்னை யடுத்தவர்களை 'தத்துவமஸி' (தத் - அது, துவம் - நீ, அஸி - ஆனாய்) என்னும் வேத வாக்கால் நேராக அறிவிக்கின்றானோ, எவனைப் பிரத்யக்ஷமாய்க் கண்டாற் பின்னுமிச் சம்சார சாகரத்தில் படிவதில்லையோ, தவத்தினர் விரும்பி அடையும் அந்த குருவாகிய தக்ஷிணா மூர்த்திக்கு நமஸ்காரம்.

5. பலதுளைக் குடத்துட் டீபப் பாய்கதிர் போல்யார் ஞானம்
விழிமுதற் பொறிவாய்ப் பாய்ந்து வெளிசரித் தறிந்தே னென்ன
விளங்கிடு மெவனைச் சார்ந்து விளங்குமிவ் வவனி யாவுஞ்
சலமறு குருவா மந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி.

பல துளை குடத்து உள் தீப பாய்கதிர் போல் யார்ஞானம் விழி முதல் பொறிவாய் பாய்ந்து வெளி சரித்து அறிந்தேன் என்ன விளங்கிடும் எவனைச் சார்ந்து இவ் அவனி யாவும் விளங்கும் சலமறு குருவாம் அந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி.

அநேக துவாரமுள்ள குடத்தினுள்ளிருக்கும் தீபத்தினின்றும் புறப்படும் பிரகாசம் போல (தீபப்பிரகாசம் போல) எவனது ஞானம் கண் முதலிய பஞ்சேந்திரியங்களின் வழியாக ஊடுருவி வெளியில் சஞ்சரிக்க (வெளிப்பட்டு விளக்க), (அதனால்) 'நான் அறிகிறேன்' என்பதாக சுயம்பிரகாசனான எவனை அனுசரித்தே இந்த ஜகமெல்லாம் பிரகாசிக்கின்றதோ, சலனமற்ற குருவான அந்த தக்ஷிணா மூர்த்திக்கு நமஸ்காரம்.

6. உடலுயிர் பொறிகள் புந்தி யொன்றுபா ழகமாத் தேர்வர்
மடந்தையர் பால ரந்தர் மடையரேய் மூட வாதி
மடமையால் விளையு மம்மா மயக்கமே மாய்க்கு ஞானத்
தடையறு குருவா மந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி.

உடல் உயிர் பொறிகள் புந்தி ஒன்று பாழ் அகமாத் தேர்வர் மடந்தையர், பாலர், அந்தர், மடையர் ஏய் மூடவாதி மடமையால் விளையும் அம்மா மயக்கமே மாய்க்கும் தடையறு ஞான குருவாம் அந்த தக்ஷிணாமூர்த்தி போற்றி.

தேகத்தையும், பிராணனையும், இந்திரியங்களையும், புத்தியையும், இவைகள் ஒடுங்குகின்ற சூன்யத்தையும் (அஞ்ஞானத்தையும்) தானாகக் கருதுகின்றவர்களாய், பெண்டிரைப் போலவும், குழந்தைகளைப் போலவும், குருடர்களைப் போலவும், உணர்வற்ற சடர்களைப் போலவும், உணர்கின்ற (அறிகின்ற) அறிவில்லாத தர்க்கியவர்களது (மூடவாதிகளது) மெய்ஞ்ஞானமின்மையால் (உண்மையறிவின்மையால்) உண்டாகின்ற அப் பெரு மயக்கத்தைப்போக்கும் மயக்கமற்ற ஞான குருவான அந்த தக்ஷிணா மூர்த்திக்கு நமஸ்காரம்.

7. **இராகுபற் றிரவி திங்க ளெனவுளன் மாயை மூடப்
பராவுள மொடுங்கத் தூங்கிப் பரவிட வுணருங் காலம்
புராவுறங் கினனா னென்று போதனா மெவன்பு மானாய்ச்
சராசர குருவா மந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி.**

இராகு பற்று இரவி திங்கள் என உளன் எவனோ மாயை மூட புமான் ஆய் பரா உளம் ஒடுங்க தூங்கி பரவிட உணருங்காலம் நான் புரா உறங்கினன் என்று போதனும் சராசர குருவாம் அந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி.

இராகு (கேது)வால் பிடிபட்ட சூரிய சந்திரர் போல எப்பொழுதுமுள்ளவனான எவன், மாயையானது (பின்னர்) மூடவே (மறைக்கவே) புருடனாய் (ஜீவனாய்), விரிந்த மனம் ஒடுங்கும் போது தூங்கி (பிறகு) அந்த மனம் விரிந்து விழிக்கும் போது நான் முன்பு தூங்கினேன் என்று தனது இருப்பை உணர்கின்றானோ, சராசர சற்குருவான அந்த தக்ஷிணா மூர்த்திக்கு நமஸ்காரம்.

8. **குழவிமுன் னனவு முன்னாக் கூறுபல் லவத்தை யெல்லாஞ்
சுழலினுங் கலந்தி ருந்தே சொலிக்குமுள் ளகமா நாளுங்
கழல்விழு வோர்க்கார் தன்னைக் காட்டுவன் சிற்கு றிப்பாற்
றழல்விழிக் குருவா மந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி.**

குழவி முன் நனவு முன்னா கூறுபல் அவத்தை யெல்லாம் சுழலினும் கலந்திருந்தே உள் அகமா நாளும் சொலிக்கும் தன்னை கழல் விழுவோர்க்கு சிற்குறிப்பால் ஆர் காட்டுவன் தழல் விழி குருவாம் அந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி.

குழந்தைப் பருவம் முதலியனவும். நனவு முதலியனவுமாக, மற்றும் கூறப்படும் எல்லா அவஸ்தைகளும் மாறி மாறி வந்தாலும் அவற்றுள் மாறாமல் கலந்திருந்து, உள்ளே 'நான்' என்றபடி எப்போதும் விளங்கிக் கொண்டிருக்கும் (பிரகாசிக்கும்) ஆத்மாவை (தன்னை) சரணமடைந்தவர்கட்கு சின்முத்திரையால் எவன், விளக்குகின்றானோ, ஞானாக்கினி நேத்திரனான (ஞானத் தீக் கண்ணனான) அந்த தக்ஷிணா மூர்த்திக்கு நமஸ்காரம்.

**9. உலகையா ரிப்பு மானோக் குறும்பல நனாக்க னாவிற்**
**கலங்கியே மாயை யாலே காரிய கார ணம்பின்**
**றலைவனுந் தாசன் சீடன் குருமகன் றந்தை யாதி**
**தலமுறு குருவா மந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி.**

மாயையாலே கலங்கியே உலகை காரிய காரணம் பின் தலைவன் தாசன் சீடன் குரு மகன் தந்தை ஆதி பல நனா கனவில் நோக்கு உறும் இப்புமான் யார் தலம் உறு குருவாம்அந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி.

மாயையால் மயங்கி உலகத்தைக் காரிய காரணமாகவும், பிறகு உடையவன் (தலைவன்/எஜமானன்) உரிமையவன் (தாசன்/ வேலைக்காரன்) ஆகவும், சிஷ்யன் குருவாகவும், புத்திரன் பிதா முதலிய இப்படிப் பேதங்களாகவும் பலவிதமாக நனவிலும் கனவிலும் காண்கின்ற இப்புருடன் எவனோ, இவ்வுலகில் உற்ற ஜகத்குருவான அந்த தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

**10. மண்புன லனல்கால் வான மதிகதி ரோன்பு மானு**
**மென்றொளிர் சராச ரஞ்சே ரிதுவெவ னெட்டு மூர்த்த**
**மெண்ணுவார்க் கிறைநி றைந்தோ னெவனினன் னியஞ்சற் றின்றாந்**
**தண்ணருட் குருவா மந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி.**

மண், புனல், அனல், கால், வானம், மதி, கதிரோன், புமானும் என்று ஒளிர் சராசரம் சேர் இது எவன் எட்டு மூர்த்தம் எண்ணுவார்க்கு நிறைந்தோன் எவனின் இறைசற்றும் அன்னியம் இன்றோ அந்த தண் அருள் குருவாம் தக்ஷிணா மூர்த்தி போற்றி.

பூமி, நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், சந்திரன், சூரியன், புருஷன் என்று விளங்குகின்ற சரங்களும், (அசைபொருள்களும்), அசரங்களுமாய் (அசையாப் பொருள்களுமாய்)க் கலந்துள்ள

இத்தோற்றம் எவனுடைய அஷ்ட மூர்த்தமோ தன்னைக் கருதுவோர்க்கு (விசாரிப்போர்க்கு) ஈசுவரனாக எங்கும் நிறைந்து விளங்கும் இவ்வஷ்ட மூர்த்தமானது எவனை காட்டிலும் கொஞ்சமும் வேறாகாதோ, அந்த அதிசாந்த அருட்குருவாகிய தக்ஷிணா மூர்த்திக்கு நமஸ்காரம்.

**11. சருவமுந் தானா நன்றாய்ச் சாற்றுமித் தோத்தி ரத்தின்**
**சிரவணந் தன்னா லர்த்த சிந்தனந் தியானங் கானம்**
**புரிவதா லெல்லாந் தானாம் பூதிசே ரீசன் றன்மை**
**மருவிடு மற்று மெட்டா மடிவறு செல்வந் தானே.**

சருவமும் தானா நன்றாய்ச் சாற்றும் இத் தோத்திரத்தின் சிரவணம் தன்னால் அர்த்த சிந்தனம் தியானம் கானம் புரிவதால் எல்லாம் தானாம் பூதி சேர் ஈசன் தன்மை மற்றும் மடிவு அறு எட்டாம் செல்வம் தானே மருவிடும்.

எல்லாம் தானே யாதலை (சர்வாத்ம தத்துவத்தை) தெளிவாய்த் தெரிவிக்கின்ற இந்த தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்தைக் கேட்பதனாலும், பொருளை விசாரிப்பதனாலும், (அப்பொருளை) தியானிப்பதாலும், இத் தோத்திரத்தைப் பாடுவதாலும், எல்லாம் நானே என்ற சர்வாத்ம தத்துவானு பூதியுடைய ஈசுவரத்வமும், அதோடு அழிவற்ற அணிமாதி அஷ்ட ஐசுவரியங்களும் தாமாகவே சித்திக்கும்.



இன்பமுறற் கேதுவா வின்னொன்றை நாடளவும்
இன்பமுனக் கின்றெனநன் கெச்சரிக்கும் பாதம்.

ஓம்
நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

ஸ்ரீ

# 5. ஆன்ம போதம்

## பாயிரம்

(நேரிசை வெண்பா)

**தான்மகிழ்ந்தெங் கோரமணன் சாற்றினான் றன்னடியர்க்**
**கூன்மயல்சேர் பந்த மொழியவே – வான்மணிபோ**
**லாரியத்திற் சங்கரர்சொல் லான்மபோ தந்தமிழிற்**
**சீர்கலிவெண் பாவாச் சிறந்து.**

வடமொழியில் ஆதிசங்கரர் அருளியதும், சூரியனைப் போற் பிரகாசிப்பதுமான 'ஆன்ம போதம்' என்ற நூலை, எமது குருநாதனான ஸ்ரீ ரமணபிரான், தமது அடியார்கட்கு தேகாத்ம புத்தியாகிய மயக்கம் நீங்குவதற்காக தமிழில் சிறந்த சீர்களையுடைய கலி வெண்பாக்களாக மகிழ்வோடருளினர்.

## மங்கலம்

(கலிவெண்பா)

**ஆன்மாவின் போதமரு ளாசானாஞ் சங்கரனவ்**
**வான்மாவுக் கன்னிய னாவனோ – வான்மாவா**
**யென்னகத் தேயிருந் தின்றுதமிழ் சொல்வானு**
**மன்னவ னன்றிமற் றார்*உளர்* – *முன்னற்***

ஆன்ம போதத்தை யருளிய ஆச்சாரிய சங்கரன் ஆன்மாவுக்கு அன்னியனாக முடியுமா? (ஆகவே) என் இதயத்தில் ஆன்மாவாயிருந்து அந்நூலை தமிழில் இன்று சொல்பனும் அச் சங்கரனே யன்றி வேறு யாராக உள்ளனர்?

## நூல்

(கலிவெண்பா)

1. **றவங்களினாற் பாவந் தவிர்ந்தவராய்ச் சாந்தி**
**யவிர்ந்தவரா யாசையறுந் தாராய்ப் – பவமுக்தி**
**யாதரமார்ந் தாருக் கடையத் தகுமான்ம**
**போதமா மீது புகலாகு – *மோதிவ்...***

தவங்கள் புரிந்து அதனால் பாபங்களை நீக்கிக் கொண்ட பரிசுத்த சித்தமாகவும், (உலக விடயங்களில் உழன்று அலையும்) மனஅலைவு அடங்கினராகவும், ஆசைகளை விட்டவர்களாகவும், பிறவிப் பிணியினின்று விடுபட விரும்புவோராகவும் (முமுக்ஷுக்களாகவும்) உள்ள அதிகாரிகளுக்கு ஆன்மபோதம் எனும் இந்நூல் அடையத்தகுந்த புகலாகும் என்று கூறி இவ்... (1. சித்த சுத்தி, 2. மன ஒருமை, 3. விரக்தி, 4, முமுக்ஷுத்வம் - இவை நான்கும் உடையவர்கள் ஆதல் வேண்டும் என்பது கருத்து.)

**2. அறிவொன்றே நேர்முக்தி சாதன மாகும்**
**பிறசா தனங்களின் பேறா – மறிவின்றி**
**யாகாது முக்தியுற லக்கினியின் றிப்பாக**
**மாகாத வாறென் றறி*வாய்நீ...***

அறிவே (ஞான மார்க்கமே) முக்திக்கு நேரான சாதனமாகும். அக்கினியின்றி எப்படி சமைக்க முடியாதோ அவ்வாறே ஏனைய பிற (ஜப, தப, ஹோமாதி கர்ம மார்க்கமும், ஹடம் முதலிய யோக மார்க்கமுமான) சாதனைகளிற் பயின்று அதன் பயனாகக் கடைசியில் அடையப்படும் சாதனமாகிற இந்த ஞானமின்றி முக்தியுறல் முடியாது என்று நீ அறிவாயாக.

*... – மோக*

**3. அறியாமைக் குப்பகை யன்றதனாற் கன்ம**
**மறியாமை தன்னை யகற்றா – தறிவே**
**யழிக்குமறி யாமையொளி யந்தகா ரக்கும்**
**பொழிக்குமா றென்றே யுணர்*வாய் – முழுதும்***

மோகமாகிய அஞ்ஞானத்துக்கு எவ்வித கர்மங்களும் பகையல்ல. (அஞ்ஞானத்தை வளர்க்கும் உறவே). ஆகையால் கன்மங்கள் அறியாமையை நீக்கா. ஒளியானது இருளை ஒழிப்பது போல, அறிவே அறியாமையை முழுதும் ஒழிக்கும் என்று உணர்வாயாக.

**4. அறியாமை யான்மறை வானதுபோ லான்மா**
**வறவேயஃ தேகம தாகி – நிறைவா**
**யிலகுமே தானா யிரியவே மேக**
**மிலகுமா தித்தனென வே*நன்(கு)...***

ஆன்மா அறியாமையால் மறைவு பட்டது போலிருக்கும். மேகங்கள் விலகவே சூரியன் விளங்குவது போல அறியாமை முற்றும் நீங்கும்

போது அவ்வான்மா தானாகவும், ஏகமாகவும், பூர்ணமாகவும் நன்கு விளங்கும்.

.... — *உலகில்*

5. அறியாமை யாங்கலக்க மாருமுயிர் தூய்தா
மறிவுப் பயிற்சியி னாலவ் — வறிவு
மகற்றியறி யாமை யழியுமே நீர்மா
சகற்றுந்தேற் றாம்பொடியொப் பாய்*த்தன்* — *னகத்து*

உலகில் அறியாமையால் கலக்கமுற்றிருக்கும் உயிர், அறிவுப் பயிற்சியால் (விவேகாதி விசாரம் செய்வதால்) தூய்மை பெறும். தேற்றான் கொட்டையின் தூள் கலங்கிய நீரைத் தெளிவித்த பின், தானும் அடியிற் சென்று படிந்து விடுவது போல, அறியாமை நீங்கியதும் அவ்வறிவுப் பயிற்சியும் (பிணஞ்சுடு தடி போல்) தன் அகத்து நீங்கி விடும்.

6. விருப்பு வெறுப்பாதி விகாரசம் சாரத்
திருப்புங் கனாவுக் கிணையஃ — துருப்படும்
போதுமெய் போலப் பொலியுமே போதமுதி
போததுவும் பொய்யாகிப் போம்பி*ன்னர்க்* — *கேதமிலை*

விருப்பு, வெறுப்புக்கள் முதலிய விகாரங்களையுடைய சம்சாரத்தின் (உலக வியவகாரிக புத்தியின்) இருப்பும் கனவுக்குச் சமமானதே. கனவு தோன்றும்போது மெய் போலவே இருந்து விழித்தவுடன் பொய்யாகி விடுவது போல, இச் சமுசாரமும் காணப்படும் போது உண்மை போல தோன்றினாலும் ஆன்ம போதம் உண்டாகும் போது பொய்யாகப் போகும். அதன் பின்னர் துக்கமில்லை.

7. எவ்வளவு கால மெவைக்குமதிட் டானமா
மவ்வியய மாம்பிரம மாய்ந்தறித — லொவ்விடா
தத்துணைக் கால மகிலமுமெய் யாய்த்தோன்றுஞ்
சுத்திவெள்ளி போலத் துணி*வாய்நீ...*

எப்பொருள்கட்கும் அதிஷ்டானமும், அவ்யயமுமான பிரம்மம் எவ்வளவு காலம் வரை ஆய்ந்தறியப் படாமல் இருக்குமோ, அதுவரை அகில மெல்லாம் சிப்பியில் வெள்ளி போலத் தோன்றிக் கொண்டே யிருக்கும் என்று நிச்சயித்து இரு.

*.... – மொத்த*

8. முதற்கா ரணமாய் முழுதினா தார
மதுவாம் பரேச னகத்தே – யுததி
யுதிகுமிழி கள்போ லுலகங்க ளெல்லா
முதித்திருந் தோயு முணர்*வாய்...*

சமுத்திரத்தில் குமிழிகள் (அலை நுரையாதிகளும்) உண்டாகி, இருந்து, மறைந்து போவது போல், முழு முதல் காரணமானவனும், காணப்படும் இவை யாவற்றின் ஆதார வஸ்துவுமாகிய பரமேஸ்வரனிடத்தே (ஆன்மாவில்) உலகங்கள் எல்லாம் உண்டாகி, இருந்து, அழிந்துபோம் என்றறிக.

*.... – முதலவன்*

9. சச்சிதா னந்தன் சகலத்து முள்ளுள்ளா
னிச்சனாம் விஷ்ணு நிலைதன்னிற் – சொச்சமாம்
பொன்னிற் கடகாதி போலும்பல் தோற்றமெலா
மன்னிய மன்றென் றறி*முற்றும் – மன்னலுறும்*

சொச்சமான பொன்னிலும் கடகம் முதலிய ஆபரணங்கள் வேறாகாமை போல, உலகமாதி பல்வேறு தோற்றங்களெல்லாம், சத், சித், ஆனந்தமாயும் யாவற்றுள்ளும் ஊடுருவி நிற்பவனாயும், அழிவற்றவனாயும், எங்கும் நிறைந்தவனாயும் முதல்வனாயும் முழுதும் நிலைபெற்று விளங்கும் ஆன்மாவுக்கு அன்னியமாகா என்றறி.

10. விண்ணிலே போல விளங்கீச னிற்றோன்று
மெண்ணி லுபாதி யிசைந்தவிபு – வண்ணலுமப்
பேத வுபாதிகளாற் பின்னன்போல் வானவை
போதலும் பூன்றப் பொருள்*ஆவான்...*

ஒன்றாயிருக்கும் ஆகாயத்தில் தோன்றும் பின்னங்களைப் போலவே (மேகங்களால் பின்னப்பட்டது போலவும், கடாகாயம், மடாகாயம் போன்ற ஆகாய பேதங்கள் பல தோன்றுவது போலவும்) தேக முதல் அவ்யக்த இருள் முடிய உள்ள எண்ணற்ற உபாதிகளின் பொய்ச் சேர்கையால் விபு அண்ணலாகிய அவ்வே கான்மாவானவன் பின்னமாய் பல் வேறான ஜக, ஜீவ, ஈச வடிவங்களாய்க் காணப்படுவான். அவ்வுபாதிகளை நீக்கிப் பார்க்குமிடத்து அவன் பரிபூரண ஆன்மாவாய் விளங்குவான்.

*.... — ஓதும்*

11. பலவா முபாதிகள் பற்றியே நாமங்
குலமா சிரமமுதற் கொள்கை — ஜலத்திற்
சுவைநிற மாதிபோற் சுத்தவான் மாவி
லவைகற் பிதமா *மறிக...*

கூறப்படும் நாமம், குலம், ஆசிரமம் முதலிய பேதங்களெல்லாம் உபாதிகளைப் பற்றியவையே தவிர ஆன்மாவுக்கல்ல. சுத்த ஆன்மாவில் அவை கற்பிதமே. நீரில் சுவை. நிறம் முதலியவை கற்பிக்கப் படுவது போன்றதே இது.

*... — கவையாய்க்*

12. கலந்தபெரு மைம்பூத காரிய மாகுங்
கலந்தவினை சார்ந்த கலமாங் — கலக்கு
மிடரின்ப போக மெவையும் புசித்தற்
கிடமிவ் வுடலென் *றிருப்பாய்...*

இத்தூல உடலானது ஐம்பெரும் (தூல) பூதங்களின் கலப்பால் உண்டானது; நல்ல தீய வினைகளை ஓயாது இயற்றுவது. பிராரப்தத்தால் வரும் சுக துக்கங்களை அனுபவிப்பதற்கு இடமாகும் என்றுணர்ந்து இருப்பாயாக.

*.... — உடலுள்ளே*

13. வாயுக்க ளைந்து மனம்புத்தி யீரைந்தா
யேயுங் கருவிக ளேய்ந்தநுண் — காயங்
கலவாத நுண்பூத காரியமாம் போகத்
துலவாத சாதனமா மோர்*வாய்...*

உடலினுள்ளே (பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என்னும்) வாயுக்கள் ஐந்தும், மனம், புத்தி (சித்தம், அகங்காரம்) யாதிகளும், (வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம் என்னும்) கர்மேந்திரியங்கள் ஐந்தும், (மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும்) ஞானேந்திரியங்கள் ஐந்தும் கூடிய சூக்ஷ்ம சரீரமானது கலவாத (அபஞ்சீகிருத) சூக்ஷ்ம பூதங்கள் ஐந்தால் உண்டானது. இந்த நுண்ணுடல் சுகதுக்கங்களை அனுபவிப்பதற்கேற்ற சாதனமாகும் என்று உணர்வாயாக.

*.... – மலமாகி*

14. ஆதியற் றிற்றென் றறையொணா வஞ்ஞான
மோதுவ ராதி யுபாதியா – யோது
முபாதிக ளாமூன் றுடல்களின் வேறா
யுபாதியி லான்மாவை யோர்...

மும்மலமாகி ஆதியற்றதாய், இப்படிப்பட்டதென்று சொல்ல முடியாததாய் உள்ள அஞ்ஞானத்தை, மற்ற இரு உடல்களும் தோன்றக் காரண மூலமான உபாதியாய் (காரண சரீரமாய்க்) கூறுவர். உபாதிக் கலவால் இம் மூன்று (ஸ்தூல, சூக்ஷ்ம, காரண) சரீரங்களுக்கும் வேறாய் உபாதியற்று விளங்கும் ஆன்மாவை உணர்ந்து கொள்.

*... அவ் – வுபாதிகளாம்*

15. கோசங்க ளைந்துமுதற் கூட்டுறவா லான்மாவு
மாசிலதே யாயினுமவ் வம்மயநே – ரேசருவு
நீலபடா திக்கலப்பா னிர்மல மாம்படிகம்
போலவே யொட்டாப் பொருள்*ஆகும்*- *ஏலிவ்*

நீல நிறமான ஆடை, புஷ்பம் இவைகளுக்கு அருகாமையில் இருப்பதால் நிர்மலமான படிகம் (கண்ணாடிக் கட்டி) நீலமயமாகவே காணப்பட்டும் (அந்த நீல நிறம்) ஒட்டாதது போலவே, தன் சந்நிதியில் பொருத்தமில்லாமல் கூடி நிற்கும் (அன்னமய, பிராணமய, மனோமய, விஞ்ஞானமய, ஆனந்தமய) அவ்வுபாதிகளாம் ஐங்கோச சாமீப்பியத்தினால் ஆன்மாவும் தன்னளவில் மாசில்லாததாயிருந்தும், அந்தந்த கோசங்களின் மயமாகவே விளங்கிக் கொண்டிருக்கும்.

16. உடற்பஞ்ச கோச வுமியாதி யோடுட்
சுடர்பரி சுத்தவான் மாவைத் – திடமான
வுத்தியினாற் குத்தி யொழித்தவற் றையரிசி
யொத்தறிய வேண்டு முணர்*உள்ளே...*

நெல்லினின்றும் உமியை உலக்கையாற் குத்திப் பிரித்து அரிசியைக் காண்பது போல, உமியாகிய மேற்கூறிய பஞ்சகோச உடல்களின் உள்ளே சுடர்விட்டு ஒளிர்ந்து கொண்டிருக்கும் அரிசியாகிய ஆன்மாவைத் திடமான விவேகத்தால் ஆய்ந்து அகற்றித் தனிப்படுத்தி கண்டு கொள்ளவேண்டும். உணர்க. (ஜீவ வாழ்வு என்னும் நெல்லை திடவிசாரமென்னும் உலக்கையால் குத்தி பஞ்ச

கோச உமியை நீக்கி, உள்ளே சுடரும் பரிசுத்த ஆன்ம அரிசியைத் தனியாக்கிப் புசிக்க வேண்டும்.)

*.... — ஒத்ததாய்*

**17. எங்குமே யென்று மிருப்பினு மான்மாவு**
**மெங்குமே யான்மா விலகலிலை — துங்கமாம்**
**புத்தியி லேயே பொலியுநிழல் சொச்சமாம்**
**வத்துவிற் றோன்றும் வகை...**

ஆன்மா எங்குமே பொருந்தி இருந்தாலும் எல்லாவிடத்திலும் அது விளக்கமாவதில்லை. சுத்தமான (கண்ணாடி, உலோகம் போன்ற பளபளப்பான) வஸ்துவில் மட்டுமே தோன்றும் பிரதிபிம்பம் போல ஆன்மா பரிசுத்தமாக்கப்பட்ட சித்தத்தில் மட்டுமே நன்கு விளக்கமாகிறது.

*.... ஆகத் — தொத்தும்*

**18. உடல்கருவி யுள்ள மொடுபுத்தி மாயை**
**விடவே றவற்றின் விருத்தி — யுடனே**
**யெவைக்குமே சாட்சியா மென்றுமான் மாவை**
**யவைக்கரசன் போல வறிக...**

அரசவையில் (உள்ள ஏனைய மந்திரி, பிரதானிகளிலும் வேறாக) அரசனை அறிந்து கொள்வது போல, தேகமாய் பற்றுகின்ற பிராணன், மனம், புத்தி, மாயையாகிய பஞ்ச கோசங்களையும் அவற்றின் விருத்திகளையும் விட அவைகட்கு வேறாக, அவைகளின் சாட்சியாய் ஆன்மா உள்ளதாக என்றும் அறிந்து கொள்.

*.... — செவிமுன்*

**19. கருவி களின்றொழில் கண்டவவி வேகி**
**கருத்தன்போன் றான்மாவைக் காண்பன் — றுரிதமா**
**யோடுமே கங்கண் டுணர்விலி சந்திரனே**
**யோடுகிறா னென்பதை யொத்து...**

வேகமாய் ஓடும் மேகத்தைக் கண்டு சந்திரனே வேகமாக ஓடுகிறான் என்று அறிவில்லாதவன் கூறுவதைப் போல, செவி முதலாய ஐங்கருவிகளின் தொழிலைக் காணும் அவிவேகி இத்தொழில்களுக்கு ஆன்மாவே கர்த்தா என்று பிழையாகக் கருதுகின்றான்.

*.... அஃ - தீடில்லா*

20. ஞானவொளி யான்மாவை நண்ணி யுடல்பொறிகண்
மானதம் புத்தியிவை மன்னுதமக் - கானதொழி
லாற்றிடுமா தித்த னவிரொளியான் மக்கடொழி
லாற்றுவது போலு மறி...

அதுபோன்று ஈடில்லாத சூரியனது ஒளியால் மக்கள் தம்தம் தொழில்களைச் செய்வது போல, அறிவொளியாகிய ஆன்ம சந்நிதி விசேஷத்தால், உடல், பொறிகள், மனம் புத்தியாகிய கருவிகள் தத்தம் தொழில்களை ஆற்றுகின்றன. என்று அறிவாயாக.

*.... மெய்போல் - தோற்றமுறும்*

21. தேகம் பொறிக டிகழ்குணங் கள்வினைக
ளாகுமிவை தூயசச்சி தான்மாவில் - மோகத்தாற்
கற்பிப்பர் சுத்த ககனத்தி னீலமுதற்
கற்பித்தல் போலக் கருதுக...

சுத்தமான ஆகாயத்தில் நீலநிறம் முதலிய உபாதிகளைக் கற்பிப்பதைப் போல, தூய சச்சித்தாத்மாவில் மயக்கத்தால் அஞ்ஞானிகள் உண்மைபோல் தோற்றுகின்ற தேகம், பொறிகள், குணங்கள், வினைகள் இன்னும் இவை போன்ற உபாதிகளைக் கற்பிப்பர் என்று கொள்க.

*.... - அற்ப*

22. மனமா முபாதி மருவுகர்த் தத்வ
வினமாய வற்றையறி வின்மை - யெனுமயலா
லான்மாவிற் கற்பிப்ப ரப்பலைவை நீர்தோன்றும்
வான்மதியிற் கற்பிக்கு மாறு...

நீரின் அசைவால் அலையும் சந்திர பிம்பத்தைக் கண்டு ஆகாயத்திலுள்ள சந்திரனே அசைகின்றான் என்று கருதுவதைப் போல, அற்ப மன உபாதியின் இயல்பாகிய கர்த்தத்துவ போக்த்ருத்வாதிகளை அஞ்ஞான மயக்கத்தால் ஆன்மாவினுடையதாகக் கருதுகின்றனர். (கற்பிக்கின்றனர்)

*.... பல் - பான்மை*

23. விருப்பாசை துன்பின்பு மேலுமிவை போல்வ
விருப்பவாம் புத்தி யிருப்பா - விருப்பில்லாத்
தூக்கத்தி லின்றதனாற் சொந்தமவை புந்திக்கே
யோர்க்குகவான் மாவிற்கா மோ...

விருப்பம், ஆசை, இன்பம், துன்பம் இன்னும் இவை போன்ற விருத்திகளெல்லாம் புத்தியின் இருப்பினால் தாம் இருப்பதாகத் தோன்றுகின்றன. புத்தி ஒடுங்கிய தூக்கத்தில் இவை இருப்பதில்லை யல்லவா? ஆகையால் அவை புத்திக்கே சொந்தமானவை அன்றி ஆன்மாவுக்கு அவை பொருந்துமோ? (பொருந்தாது என்க)

*.... எனவே – பார்க்கும்*

**24. அருக்கன் றனக்கொளி யப்புக்குத் தட்ப**
**மெரிக்குட் டணமு யமியல்பா – யிருக்கையெனச்**
**சத்துச்சித் தானந்தஞ் சார்நித்தஞ் சுத்தமியல்**
**பொத்ததான் மாவுக்கென் றோர்...**

(பின் ஆன்மாவுக்குச் சொந்தமான இயல்பு எது என்றால்) ஆகையால் நாம் பார்க்கும் சூரியனுக்கு ஒளியும், நீருக்குக் குளிர்ச்சியும், நெருப்புக்கு உஷ்ணமும் எப்படி இயல்பாக இருக்கின்றனவோ அப்படியே சத், சித், ஆனந்தம், நித்தம், சுத்தம் ஆகிய இவை ஆன்மாவுக்கு இயல்பான சுபாவம் என்று அறிவாயாக.

*.... ஐந்தாம் – அத்தகையுள்*

**25. சத்துச்சித் தென்னத் தகுமான்ம வம்சமும்**
**புத்தி விருத்தி புகலொன்று – மொத்த**
**விரண்டோடு மூடத்தால் யானறிகின் றெனென்**
**றொருத்தன் றொழிற்படுவ னோர்வாய்...**

மேற்கூறிய சத்,சித், ஆனந்தமாகிய நித்திய சுத்தமான ஆன்ம அம்சமும் புத்தி, விருத்தி என்று சொல்லக்கூடிய அநாத்மா (ஜட) அம்சமும் - ஐந்தாகிய இவ்விரண்டும் சேர்ந்த இயல்புடன், மூடத்தால் 'நான் இதை அறிகிறேன்' என்ற எழுச்சி வடிவாக ஒருவன் (ஜீவன் - அகந்தை) இடையில் கிளம்பித் தொழில் புரிவான் என்றறிக.

*.... – ஒருவிதத்தும்*

**26. என்றும் விகார மிலதான்மா புத்தியு**
**மென்றுமறி வின்றியதே யென்றாலு – மொன்றிய**
**சீவனே யெல்லாந் தெரிவான்செய் வான்காண்பான்**
**பாவத்தான் மாமோகி பார்...**

ஆன்மாவோ (மேற்கூறிய ஆன்ம அம்சமோ) என்றும் ஒருவிதத்தும் விகாரம் (பிரவிருத்தி) இல்லாதது. (ஜடமாகிய) புத்தி அம்சமோ என்றும்அறிவில்லாதது. ஆனால் இவ்விரண்டின் சேர்க்கையால்

தோன்றும் ஜீவனோ அஞ்ஞானம் மிக்க மோகபாவனையினால் தான் எல்லாம் அறிவதாகவும், செய்வதாகவும், பார்ப்பதாகவும் உணர்கிறான் என்ன ஆச்சரியம், பார்!

*.... சத்தாய் – மேவுறும்*

**27. தன்னைத்தான் சீவனெனத் தாம்பிலே பாம்புபோ
லுன்னியே யச்ச முறுகின்றான் – றன்னைத்தான்
சீவனலன் யான்பரமான் மாவென்று தேர்ந்ததனா
லாவனஞ் சானா யவன்...**

இவன் தன்னைத்தானே அற்ப ஜீவன் என்று நினைத்து கொண்டு, கயிற்றைப் பாம்பாகக் கண்டு பயப்படுவது போல அச்சமுறுகிறான். தன்னை 'நான் ஜீவனல்ல, அடையப்படும் சத்தாகிய பரமாத்மாவே' என்று தான் தெரிந்து கொள்வானாயின் (துயர், மரணம் ஆகியவற்றால் அஞ்சாதவனாகி விடுவான்.

*.... ஒளி – மேவும்*

**28. ஒருபொருளா மான்மா வொளிர்க்கு மதிமுன்
கருவிகளைத் தீபங் கடாதி – பொருவ
வொளியி லவற்றா லொருபோது மான்மா
வொளிர்க்கப் படாதென் றுணர்*வாய்...***

தீபம் மற்ற பொருள்களை விளக்கப் படுத்துவது போல, ஏக வஸ்துவாக ஒளிர்கின்ற ஆன்மாதான், புத்தியாதி கருவிகளை விளங்க வைக்கின்றது. சுய விளக்கமற்ற இக்கருவிகளால் ஆன்மாவை விளக்கிக் கொள்ள முடியாது என்று அறிக.

*.... – ஒளியார்*

**29. விளக்கி னுருவை விளக்கிட வேறு
விளக்கை விரும்பா விதம்போல் – விளங்கு
மறிவுருவா மான்மா வறிந்திடத் தன்னைப்
பிறிதறிவு வேண்டப் பெறாது...**

ஒளி பொருந்திய எரியும் தீபஜ்வாலையைக் கண்டுகொள்ள இன்னொரு விளக்கு எப்படித் தேவைப்படாதோ அது போலவே சதா பிரகாசிக்கும் அறிவுருவான ஆன்மா தன்னைத் தானே அறிவதற்கு வேறொரு அறிவின் உதவி தேவையில்லை.

*.... – பிறிதவை*

**30. நேதிநேதி வாக்கினா னீக்கி யுபாதியெலா**
**மீதியாஞ் சீவான்மா மீதிலா – வாதியா**
**மப்பரமான் மாக்களி னைக்கியமா வாக்கியங்கள்**
**செப்புவ தோர்ந்து தெளி*ந்திடுக...***

உபாதிகளையெல்லாம் 'நானல்ல, நானல்ல' என்றறிவால் வேறாகிய அவை நீக்கியபின் மிஞ்சி நிற்கும் (உபாதியற்ற) ஜீவான்மாவுக்கும் (கூடஸ்தன்) பரமான்மாவுக்கும் உள்ள ஐக்கியத்தை (இந்த உபாதியற்ற நீயே அதுவாயிருக்கிறாய் – தத்வமஸி) மகாவாக்கியங்கள் அறிவிப்பதால் அறிந்து கொள்.

*.... – அப்பொய்*

**31. அவித்தையா லானவை யாகமுதற் காணு**
**மிவைகுமிழி போலவழி வெய்து – மிவற்றி**
**னயலா மமல வகம்பிரம மாமென்**
**றயராம லென்று ம*றியான்...***

அப்பொய்யாகிய அவித்தையால் உண்டான தேகம் முதல் அஞ்ஞான ஈறான கோசங்கள் ஐந்தும் நீரில் குமிழி போல்அழியத் தக்கவை. இவற்றுக்கு வேறான மலமற்ற நானே பிரம்மமாகும் என்று அயராமல் எப்போதும் அறிந்திரு.

*.... – உயிரில்*

**32. உடலுக்கு வேறெனக் குண்டாதன் மூத்த**
**லொடுகுன்றல் சாவுமுத டொன்றா - படர்ந்த**
**வொலிமுற் புலன்களோ டொன்றலெனக் கின்றே**
**யலன்பொறிகள் யானாத லா*லே...***

நான் உயிரற்ற (இச்சட) உடலல்ல; ஆகையால் உடலின் தர்மமாகிய பிறத்தல், வளர்தல், குறைதல், சாதல் முதலியவை எனக்கு இல்லை. நான் இந்திரியங்கள் (பொறிகள்) அல்ல, ஆகையால் விரிந்த சப்தாதி விஷயங்களின் சேர்க்கை எனக்கில்லை.

*.... – சலன*

**33. மனமலனா னாதலான் மன்னுதுய ராசை**
**சினமச்ச மாதியெனைச் சேரா - வினமாக**
**வப்பிரா ணன்மனமில் லான்சுத்த னென்றுமறை**
**செப்புகின்ற தன்றோ தெளி...**

நான் சலிக்கும் மனம் அல்ல; ஆகையால் துயரம் ஆசை, கோபம், பயம் முதலிய (மனோதர்மங்கள்) என்னைச் சேரா. நான் அப்ராணன் (பிராணனல்லாதவன்) மனமில்லான், சுத்தன் என்று உபநிடதங்களும் கூறுகின்றன வன்றோ தெளிக.

*.... பலவாம் - அப்பெயர்கள்*

**34. நிர்க்குணனி ரஞ்சன னித்த னிராகார**
**னிர்விகா ரன்சுத்த னிட்கிரிய - னிர்விகற்ப**
**னித்தமுக் தன்முன் னிகழ்த்திடப் பட்டவை**
**யத்தனையு நானென் றறி...**

(உபநிடதங்களில் பரமான்ம சுபாவமாக பலவாக கூறப்படும் நிர்க்குணன் (குணமற்றவன்), நிரஞ்சனன் (களங்கமில்லாதவன்), நித்தன் (என்றுமுள்ளவன்) நிராகாரன் (உருவமற்றவன்), நிர்விகாரன் (வேறுபடுதலற்றவன்), சுத்தன் (தூயோன்), நிட்கிரியன் (வினையற்றவன்), நிர்விகற்பன் (பேதமற்றவன்), நித்தமுக்தன் (என்றும் கட்டுப்படாதவன்) முதலியவாறாகச் சொல்லப்பட்ட அந்நாமங்கள் அத்தனையும் நானே என்றறிக.

*... பரி – சுத்தமாம்*

**35. ஆகாயம் போல வகிலத்தி னுள்வெளியான்**
**சாகாதான் சர்வ சமன்சித்தன் – றேகாதி**
**யாவற்றும் பற்றற்றா னென்றுமம லன்சலியா**
**னாவனா னென்றே யறி*யது* – *வாவை...***

நான் பரிசுத்தமான ஆகாயத்தைப் போல யாவற்றின் உள்ளும் புறமும் வியாபித்தவன், இறப்பற்றோன் யாவிலும் சமமாயுள்ளவன், பேறோன் (சித்தன்) தேகம் முதலிய எதிலும் பற்றற்றவன், என்றும் குற்றமற்றவன், சலனமற்றவனாவேன் என்று அறிக. அதுவாக ஆவாய்.

**36. எதுநித்தஞ் சுத்த மெதுமுக்த மேக**
**மெதகண்ட விண்பிரண் டில்ல – தெதுசத்துச்**
**சித்தனந்த மாகுந் திகழப் பரப்பிரம**
**வத்துயா னேயா மதி*த்திரு...***

எது நித்யமானதோ, எது பரிசுத்தமானதோ, எது கட்டுப்படாததோ, எது ஏகமோ, எது அகண்டானந்தமோ, எது இரண்டற்றதோ, எது சத்தியமானதோ, எது ஞான சொரூபமானதோ, எது முடிவில்லாததோ அப்படி விளங்கும் அந்த பிரம்ம வஸ்து நானே என்றறிக.

*... — நித்தம்*

37. நிரந்தரமிவ் வாறு நிகழ்த்தப் படுமப்
பிரமமே யானாவ னென்னு - முறுதி
யழிக்குமறி யாமை யலைவுகளை நோய்க
ளொழிக்குமிர சாயன மொத்து...

அந்தப் பிரம்மமே நானாகும் என்றிவ்வாறு சதா இடைவிடாது செய்யப்படும் உறுதியே மருந்து நோய்களைத் தீர்ப்பது போல, அஞ்ஞானப் பிரவிருத்திகளை யழிக்கும்.

*... — விழுப்பமாம்*

38. ஏகாந்த தேசத் திருந்தாசை யின்றிவெளி
போகாது வென்று பொறிகளை - யேகமா
யந்தமி லான்மாவை யன்னியமில் புந்தியனாய்ச்
சிந்திக்க வேண்டும் தெரி...

சிறப்புடைய தனியிடத்திலிருந்து, ஆசைகளின்றி ஐம்பொறிகளை வெளி விஷயங்களில் செல்லாது ஜயித்து ஏகமாயும், அனன்னியமாய் அழிவற்றதாயுமுள்ள ஆன்மாவாகிய தன்னையே கூர்ந்து கவனிக்கவேண்டும் என்று அறிவாயாக.

*... இங்ஙன் — சிந்திக்கும்*

39. புத்திமான் காணும் பொருளனைவையு மான்மாவிற்
புத்தியா லொன்றல் புரிவித்தே — சுத்தமாம்
விண்ணென வொன்றாய் விளங்கிடு மான்மாவை
யெண்ணுக வெப்போது மே...

இவ்வாறு தன்னை கவனிக்கும் புத்திமானான ஒருவன், காணும் பொருளெல்லாம் ஆன்ம மயமே என்ற பிரவிலாப திருஷ்டியால் கண்டு, பரிசுத்த ஆகாயம் போல ஏக வஸ்துவாய் விளங்கும் ஆன்மாவாகிய தன்னையே எப்போதும் நாடி இருப்பானாக.

*... இவ்வா — றெண்ணியே*

40. உள்ள துணர்ந்தோ னுருவம் வருணமுத
லுள்ள மயல்க ளொருங்கொழித் — துள்ளந்
திகழ்பரி பூன்ற சிதானந்தந் தானாத்
திகழ்ந்திடுவ னாளுந் தெளிக...

இவ்வாறு நாடியே உள்ள பொருளை (ஆன்மாவை) உணர்ந்த பிரம்மவித்தானவன் தனது உருவம், வர்ணாச்ரமாதி பேதமயக்கமெல்லாம் ஒருங்கே ஒழித்து, இதயத்தில் விளங்கும் பரிபூர்ண சிதானந்தமே தானாக எப்போதும் விளங்குவான் என்று அறிவாயாக.

*... – நிகழும்*

41. அறிவா னறிவோ டறிபடுவ பேத
முறுபரமான் மாவி லுறாதே – யறிவின்
புருவாயொன் றாயஃ துறுவத னாற்றன்
னுருவாலே தானொளிரு மோர்க...

அறிபவன், அறிவு, அறிபடுபொருள் என்று நிகழ்கின்ற திரிபுடி பேதங்கள் பரமான்மாவில் இல்லை. அது அறிவு, இன்ப வடிவான ஒரே பொருளாய் (சத் சித் ஆனந்தம் மூன்றும் ஒன்றேயாக) இருப்பதனால் தன் சித் உருவாலேயே, தான் சத் மாத்திரமாய் ஒளிரக் கூடியது.

*... – உருவுள்ளே*

42. ஆன்மா வெனுமவ் வரணியி லிவ்வித
மான்மத் தியான வகமதனந் தான்முயன்று
சந்ததஞ் செய்தலாற் சார்ஞானத் தீமடமை
யிந்தனமெல் லாமெரிக்கு மே

இவ்விதம் எப்போதும் தன்னுள்ளே ஆன்மா என்றும் அரணிக் கட்டையில் (தீயுண்டாக்கும் கட்டை) ஆன்மத் தியானம் ஆகிய அக மதனத்தை (உண்முக விசாரத்தை) முயற்சியுடன் எப்பொழுதும் செய்வதால் உண்டாகும் ஞானாக்கினியானது அஞ்ஞானமாகிய விறகுகளை யெல்லாம் எரித்து விடும்.

*யெரிக்க ... – முந்தும்*

43. அருணனா லேயல் லகலுதல் போன்முன்
மருவறி வாலம் மடமை - யிரியவே
பொங்குமான் மாபரி பூரண மாகவே
பொங்குமா தித்தனைப் போலவே...

ஒளிர்விக்க உதிக்கும் சூரியனால் இருள் விலகுதல் போல, மேற்கூறியவாறு உண்டாகும் ஞானப்பிரகாசத்தால் அறியாமை நீங்கினதும் ஆன்மா பரிபூரணமாக சூரியனைப் போல் பொங்கியொளிரும்.

*... — மங்கலிலா*

44. ஆன்மாவெப் போது மடைந்துளதே யானாலும்
தான்மடமை யாலடையா தாயமரு - மான் மடிய
வெய்தப்பெற் றாற்போ லிலகுந்தன் கண்டவணி
யெய்தப்பெற் றாற்போல வே...

மறைப்பற்ற ஆன்மா முக்காலத்தும் அடையப்பட்டுள்ளதே. (நித்ய சித்தமே). என்றாலும் மடமையால் இதுவரை அடையப்படாததாகவே தோன்றும், தன் கழுத்திலேயே இருக்கும் ஆபரணம் (காணாமற் போனதாக மயங்கித் தேடி, பிறகு அது கழுத்திலேயே இருப்பதை உணர்ந்து) புதியதாக அடையப்பட்டதாகத் தோன்றுவதைப் போல மயல் நீங்கும் போது ஆன்மா புதிதாக அடையப் பெறுவது போலவே தோன்றும்.

*... என்றும் — எய்தும்*

45. பிரமத்திற் சீவன் பிராந்தியாற் கட்டை
புருடன்போற் கற்பிதன் பொய்யா — முருவத்தின்
றத்துவம் யாதென்று தானுணரி னவ்வுருவம்
வத்துவா காது மதி...

கட்டை ஒன்றில் கற்பனையால் மனித உரு காணப்படுவது போல என்றும் அடையப்பட்ட பிரம்மத்தில் ஜீவன் கற்பிதமாகும். பொய்யாகத் தோன்றும் அம்மனித உருவத்தின் தன்மை எப்படிப்பட்டதென்று சோதித்து அறியப்படும்போது அவ்வுரு உண்மையல்ல வென்பது உணரப்படுகிறது. (ஜீவனின் தன்மையை சோதித்து அறியும்போது ஜீவன் என்ற வஸ்துவே இல்லாமற் போகின்றது.)

*... — உள்ளே — வத்துவாம்*

46. தத்துவசொ ரூபானு பூதியாற் றானுதி
யுத்தம ஞான முடனேயம் — மித்தையா
நானெனதஞ் ஞான நசிப்பிக்குந் திக்பிரமை
பானுவுத யத்தெனவே பார்க்கவே...

சூரியன் உதித்ததும் (அதுவரை திசைகளின் நிர்ணயமறியாதிருந்த) திக்கு பிரமை உடனே எவ்வாறு நீங்கி விடுகின்றதோ அவ்வாறே உள்ளே, வஸ்துவாகிய ஈச - ஜீவர் (தத் -த்வம்) களின் உண்மை சொரூபமான ஆன்மாவை அனுபவமாய்ப் பெறுவதால் உதயமாகும்

உத்தம ஞானமானது (அதுவரை இருந்து வந்த) 'நான், எனது' என்னும் (அகங்கார - மமகார) அஞ்ஞானத்தை உடனே நீக்கி விடும்.

*... – தானொளிரும்*

**47. நன்று தனையறிவிஞ் ஞானியாம் யோகியு**
**மொன்றுமெலாந் தன்னி லுறுவதை – யொன்றான**
**தானெல்லா மாயுளதைத் தன்ஞானக் கண்ணினாற்**
**றான்காண்ப னென்றே தரி...**

தானாய் ஒளிர்கின்ற நன்றாகத் தன்னை யறிந்த ஞானியான அந்த யோகி காணப்படும் யாவும் தன்னிலிருப்பதையும், ஒன்றான தான் எல்லாமாயிருப்பதையும் தனது ஞானப் பார்வையால் தானே அறிகிறான்.

*... பரி – பூன்றமாம்*

**48. ஆன்மாவே யிவ்வுலகெல் லாமாகு மற்பமு**
**மான்மாவுக் கன்னிய மாயில்லை - யான்மாவாய்க்**
**காண்பனெல் லாமுங் கடாதிகள்மண் ணின்வேறாய்க்**
**காண்பது முண்டோ கழறுக...**

இவ்வுலக மெல்லாம் பரிபூரணமாகிய ஆன்மாவே, சிறு அணு கூட ஆன்மாவுக்கு வேறானதல்ல. மண் பாத்திரங்கள் (பல வடிவுகள், பெயர்கள்) உடையதானாலும் எல்லாவற்றையும் மண்ணாகவே பார்ப்பதைப் போல ஞானியும் (ஜகம்) எல்லாவற்றையும் ஆன்மாவாகவே காண்பான்.

*... காண்குறும்*

**49. சீவன்முக் தன்வித்வான் றேருவதன் முன்றன்னை**
**மேவு முபாதிகுணம் விட்டுடனே - மேவுவான்**
**றன்னுருசச் சித்தின்பைத் தன்கீடம் வண்டினுருத்**
**தன்னையுறல் போலத் தரி...**

புழு ஒன்று தன் பழைய புழுத் தன்மையை விட்டுவிட்டு வண்டின் வடிவைப் பெறுவதைப் போல ஜீவன் முத்தனான அந்த வித்வான் அவ்வாறு தன் உண்மையைத் தெரிந்து கொள்வதற்கு முன்னிருந்த தேக - மன முதலிய உபாதிகளின் குண தர்மங்களை யெல்லாம் விட்டு விட்டு சச்சிதானந்தமான தன் சொரூப இயல்பைப் பெறுகிறான்.

*... தானா - மன்னுமவன்*

50. மோகக் கடல்கடந்து மூளாசை கோபமுத
லாகு மரக்க ரறக்கொன்று - யோகி
யமைதி யொடுகூடி யான்மாவி னின்பத்
தமைந்தொளிர்வ னென்றே யறி*வாய்...*

தானாய் நிலைபெற்ற அந்த யோகி மோகக் கடலைத் தாண்டி, மூண்டெழும் காமக்ரோதாதி அரக்கர்களை யெல்லாம் வேரோடு அழித்துவிட்டு சாந்தியொடு கூடி ஆத்மானந்தத்தில் திளைத்துப் பிரகாசிப்பர் என்றறிக.

*... - அமைவில்*

51. அநித்தவெளி யின்பிச்சை யற்றானா யான்மா
தனின்பிற் றிருத்தி தனையுற் — றனிசமுந்
தன்னொளி யாற்குடந் தன்னுள் விளக்கெனத்
தன்னுளே தானொளிர்வன் றா*னாக...*

அவன் பொருந்தாத அழிவுறும் வெளி (புற) இன்பங்களில் இச்சையற்றவனாய், ஆத்ம இன்பத்திலேயே திருப்தியுற்றவனாய், குடத்தினுள்ளே பிரகாசித்துக் கொண்டிருக்கும் தீபத்தைப் போல எப்போதும் தன்னுள்ளே தானாக தானே ரமித்துக் கொண்டிருப்பான்.

*... — மன்னும்*

52. உபாதியுற் றானேனு மொட்டாவின் போலவ்
வுபாதிதரு மங்களோ டொட்டா — னுபாதியிலான்
முற்றறிவ னேனுமுனி மூடனென வாயுபோற்
பற்றற்று சஞ்சரிப் பான்*பாரில் — பற்றும்*

தானாக நிலைபெற்ற அவன் தன்னிடத்திலேயே இருக்கும் வாயு, அக்னி, நீர், மண் என்னும் சதுர்பூதங்களின் குண தோஷங்கள் ஆகாயத்தை ஒட்டாதிருப்பது போல, அந்த ஞானி தொற்றும் தேக - மனமாதி உபாதிகளோடு சேர்ந்தவனாகக் காணப்படினும் அவ்வுபாதிகளின் தர்மங்களில் (பிறத்தல், வளர்தல், குன்றல், சாதலான உடலின் தர்மங்களிலும், காமாதி மனோ தர்மங்களிலும்) ஒட்ட மாட்டான். உபாதியற்ற அந்த முனி முற்றறிஞனாக யிருந்தாலும், வாயு போலவும், ஒன்றுமறியாதவனைப் போலவும் உலகில் சஞ்சரிப்பான்.

53. உபாதிநா சத்தா லுறுவான் முனிவ
னுபாதியில் விஷ்ணுவி னுள்ளே – யபேதமே
தோயத்திற் றோயமுந் தூவிண்ணி லேவிண்ணுந்
தீயிற் றீயும்போலத் தேர்*வாய்...*

(அவனது வாணாளில்)அவனுக்கு இருப்பதாகப் பிறருக்குத் தோன்றும் தேக மனாதி உபாதிகள் நீங்கும் போது நிருபாதிக (உபாதியற்ற) விஷ்ணு பதத்தில் நீருடன் நீரும், ஆகாயத்தில் ஆகாயமும் நெருப்பில் நெருப்பும், இயல்பாகவே கலந்து விடுவது போலவே அந்த முனி அபேதமுற்று விடுவான்.

*... – தூயதாம்*

54. எவ்வடை விற்பிறி தேதுமடை தற்கின்றோ
வெவ்வின்பி னிற்பிறி தின்பின்றோ – வெவ்வறிவு
தன்னிற் பிறிதறிவு தானின்றா மோவது
தன்னைப் பிரமமெனச் சார்*ந்திடுக...*

எதை யடைந்த பின் வேறெதுவும் அடையத் தக்கது இல்லையோ, எவ் வின்பத்திற்கு மேல் இன்னொரு இன்பமில்லையோ, எந்த அறிவிலும் வேறாக யாதொரு அறிவும் கிடையாதோ, தூயதான அதனையே பிரமம் என்று கொள்.

*... – பின்னும்*

55. எதுகாணக் காண்டற் கெதுவுமே யின்றோ
வெதுவான பின்சன்ம மின்றோ – வெதுவறிந்த
பின்னறியத் தக்க பிறிதோர் பொருளின்றோ
வன்னது தான்பிரம மாகு*மே...*

மேலும், எதைக் கண்ட பின் மேலொன்றும் காண்பதற்கிலையோ, எதுவான பிறகு மறுபிறப்பு இல்லையோ எதை அறிந்தபின் அறியத்தக்க வேறொரு பொருளுமில்லையோ, அதுதான் பிரம்மமாகும்.

*... – பின்னும்*

56. எதுகுறுக்கு மேல்கீழா மெங்குநிரை வாகு
மெதுசச்சித் தின்பிரண் டில்ல - தெதனந்தம்
நித்தமா யொன்றாய் நிகழ்வதெது வாகுமவ்
வத்து பிரம மதி*த்திடுநீ..*

மேலும் எது குறுக்கிலும் மேலும் கீழும் இன்னும் எங்கும் நிறைந்து விளங்குமோ, எது சச்சிதானந்தமோ, எது இரண்டற்றதோ, எது முடிவற்றதோ, எது எப்போதும் உள்ளதோ, எது ஏகவஸ்துவாயிருப்பதோ, அந்த வஸ்துவே பிரம்மம் என்று கொள்க.

... – *நித்தமாம்*

**57. ஏதழிவில் லாத தெதையன்றென் றன்றென்றே**
**வேத முடிவு விளக்கிடும் – யாதொன்**
**றகண்டவின் பாகி யமருமது தானே**
**திகழும் பிரமந் தெளிக..**

எப்போதும் எது அழிவில்லாததோ, எதை நேதி நேதியென்று வேதாந்தம் விளக்குகின்றதோ, எது அகண்டானந்தமாக விளங்குமோ அதுதான் பிரம்மம் என்று தெளிக.

... – *புகலவ்*

**58. அகண்ட சுகமய வான்மாவி லற்ப**
**சுகத்தை யடுத்தே சுரராய்த் – திகழும்**
**பிரமாதி யேனோர் பிறங்குவரின் புற்றுத்**
**தராதர மாகத் தரி*ப்பாய்*..**

கூறப்படும் பிரம்மா முதலிய தேவர்கள் அகண்ட சுகமயமான ஆன்மாவில் அற்பமான ஓர் அணுமாத்திர சுகத்தையே தத்தம் நிலைக்கேற்ப தராதரமாய்ப் பெற்று வாழ்கின்றனர் என்று திடமாக அறிவாயாக.

... – *பரமாம்*

**59. அதனிடத் துள்ள தகிலமுஞ் செய்கை**
**யதையடுத் துள்ளதே யாகு – மதனாற்**
**பரவிடு மெல்லாம் பரம்பொருள் பாலில்**
**விரவிடு நெய்போல வே..**

யாவும் மேலானதான அவ்வான்மாவினிடத்தில்தான் இருக்கின்றன. எல்லாச் செயல்களும் ஆன்மாவை யடுத்தே நடைபெறுகின்றன. பால் முழுவதிலும் நெய் (வெ ளியில் தெரியாமல்) விரவியிருப்பது போல். காணப்படும் இவ்வெல்லாவற்றுள்ளும் அந்தப் பரம்பொருளே பரவியிருக்கின்றது.

*... அஃ — தருவம்*

60. பருமையு நுண்மையுற் பத்தி விநாசங்
குறுகலு நீட்சியுங் கூடா — துருவங்
குணங்குல நாமமுங் கொள்ளாம லுள்ள
துணர்க பிரமமென் றுற்று...

உருவின்மை, பெரியதாய் பருத்தல், அணுவாய்ச் சிறுத்தல், உற்பத்தியாதல், அழிதல், குறுகுதல், நீளுதல் முதலிய விகாரங்கள் இல்லாததும், உருவம், குணம், குலம், நாமம் இவைகளின்றி யுள்ளதும் எதுவோ அதையே பிரம்மம் என்று உற்றறிக.

*... உள் — உணர்வாம்*

61. எதனொளியி னாலொளிரு மேயிரவி யாதி
யெதனை யவையொளிர்க்க வேலா - ததனாலே
யிந்தவுல கெல்லா மிலகு மதுதானே
யந்தப் பிரம மறிந்*திடுக* ...

தன் இருப்பாம் எதன் ஒளியால் சூரிய சந்திராதி ஒளிகள் பிரகாசிக்கின்றனவோ, அந்த சூரிய சந்திராதிகள் எதனை விளக்கிக் காட்ட முடியாதோ, எதனால் இவ்வுலகங்கள் எல்லாம் விளங்கிக் கொண்டிருக்கின்றனவோ அதுதான் பிரம்மமென்றறி.

*... — உந்தி*

62. ஒளிர்த்துலக மெல்லாந்தா னுள்வெளிவி யாபித்
தொளிர்ந்திடு மப்பிரம மோர்வா — யொளிரு
நெருப்பினிற் காய்ந்தங்கி நேரொளிரு மந்த
விருப்புண்டை யைப்போல வே*தான் — இருக்கும்...*

நெருப்பில் பழுக்கக் காய்ந்த இரும்பு உருண்டை ஒன்றின் உள்ளும் புறமும் எவ்வாறு அந்த நெருப்பே வியாபித்து ஒளிருமோ, அதுபோன்றே எழுகின்ற இவ்வுலகமெல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்து கொண்டு, அவற்றின் உள்ளும் புறமும் அந்தப் பிரம்மமே வியாபித்து விளங்குகின்றது என்று உணர்வாயாக.

63. பிரம முலகிற் பிறிதாகு மந்தப்
பிரமத் தணுவில் பிறிதாய்ப் — பிரமத்திற்
கன்னிய மேது மவிர்ந்தா லதுமித்தை
யுன்னுக கானனீ ரொத்த*தனை...*

பிரம்மம் உலகிற்கு வேறானது; ஆனால் உலகம் பிரம்மத்திற்கு வேறாக இருப்பற்றது; ஆகையால் அந்தப் பிரம்மத்திற்கு ஓரணுவளவு வேறாக எப்பொருளாவது காணப்படுமாயின் அது கானல்நீர் போலப் பொய்யே என்று கருது.

*... — முன்னில்*

**64. எதுவெது காணவுங் கேட்கவு மேயு**
**மதுபிரமத் தன்னிய மாகா - ததுவுமே**
**தத்துவஞா னத்தினாற் சச்சிதா னந்தமா**
**மத்துவி தப்பிர மாமறிக...**

ஆராய்வோமானால், எது எது காணவும் கேட்கவும் படுகின்றதோ அவையாவும் பிரம்மத்திற்கு அன்னியமாகாது. தத்துவ ஞானம் (ஆன்மானுபவம்) கொண்டு நோக்குமிடத்து அவையாவும் சச்சிதானந்த அத்துவித பிரம்மமேதான் என்று அறிவாயாக.

*... — ஒத்தே*

**65. சருவத்துஞ் சார்ந்ததாஞ் சச்சிதா னந்தப்**
**பிரமத்தை ஞானக்கண் பெற்றான் — றரிசிப்பான்**
**ஞானக்கண் ணில்லாதா னண்ணானே காட்சியொளிர்**
**பானுவையந் தன்போலப் பார்...**

எல்லாவற்றிலும் சமமாக பரவியுள்ள சச்சிதானந்த பிரம்மத்தை ஞானக்கண் (ஆன்ம அறிவு) பெற்றவன் தான் பார்க்கிறான். நேரே விளங்கும் சூரியனைக் கூட குருடன் பார்க்க முடியாதது போல, ஞானக் கண் இல்லாத (ஸ்தூல திருஷ்டியுள்ள) அஞ்ஞானி பார்க்க மாட்டான்.

*... மூட — னேனும்*

**66. சிரவண மாதிகளாற் றேசுறு ஞான**
**வெரியினிற் காய்ச்சி யெடுக்கச் - சருவ**
**மலமும்போய்ச் சீவன் மறுவில்பொன் போனிர்**
**மலனாகித் தானொளிர் வானே...**

மூடனாயினும் ஜீவன், சிரவண மனன நிதித்தியாசனமாகிற ஞானாக்கினியில் காய்ச்சி எடுக்கப் படவே, எல்லா மலங்களும் நீங்கி, குற்றமற்ற பொன் போல நிர்மலனாகிப் பிரகாசிப்பான்.

*... – இலகும்*

67. இதயவெளி தோன்றி யிருளையழி ஞான
வுதயரவி யான்மா வொளிரு – நிதமுமே
யெல்லாவற் றும்பரவி யெல்லாமுந் தாங்கிநின்
றெல்லா மொளிர்விக்கு மெண்ணுக...

அஞ்ஞான இருளை யழிப்பதாய் நுண்ணிய இதயாகாசத்தில் உதித்துப் பிரகாசிக்கும் ஆன்ம ஞான சூரியன் எப்போதும் எல்லாவற்றிலும் பரவியதாய், எல்லாவற்றுக்கும் ஆதாரமாயிருந்து எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யும் என்றறிக.

(பஃறொடை வெண்பா)

*... – பல்லாற்றும்*

68. திக்கிடங் காலமுத றேடாம லென்றுமெத்
திக்குமார்ந் தேகுளிர்முன் றீர்ப்பதா – யெக்களங்கு
மற்றநித் யானந்த வான்மதீர்த் தத்துட்டோய்
வுற்றவ னார்செய்கை யொன்றின்றி – மற்றவன்
யாவு மறிந்தோனா யெங்குநிறைந் தாரமிர்த
னாவ னெனவே யறி.

பலவாறான திக்கு, இடம், காலம் முதலியவற்றைக் கடந்து என்றும் எங்கும் வியாபித்ததாய், குளிர் முதலியவற்றைத் தீர்ப்பதாய், எவ்வித மாசும் படியாததான நித்தியானந்த ஆன்ம தீர்த்தத்துள் எவனொருவன் மூழ்குகிறானோ, அவன்பிறகு செய்யத்தக்க எச்செயலும் இல்லாதவனாய். சர்வக்ஞனாய் எங்கும் நிறைந்தவனாய், அழிவற்றனாய் ஆவான் என்று அறி.



கருத்தமைதி யீதலே கர்த்தனரு ளன்றிப்
பொருத்துவ(து)அன் (று)எண்ணியதன் பூர்த்தியெனும் பாதம்.

ஓம்
நமோ பகவேத ஸ்ரீ அருணாசலரமணாய

ஸ்ரீ

# 6. குரு ஸ்துதி

(அறுசீர் விருத்தம்)

1. **நேதிநே தியாதி வாக்கா னிடேதித்து மூர்த்தா மூர்த்த**
**மேதுமே தள்ளற் கில்லா வெதைச்சுவ சொரூப மாக**
**வோதருஞ் சாது வானோ ருள்ளத்திற் கொள்ளு வார்க**
**ளாதிமெய் யறிவா னந்த வவ்வத்து வன்றோ நீதான்.**

மூர்த்த அமூர்த்தம் ஏதுமே ஆதிவாக்கால் நேதிநேதி நிடேதித்து தள்ளற்கில்லா எதை சுவ சொரூபமாக ஓது அரும் சாது ஆனோர் உள்ளத்தில் கொள்ளுவார்கள் ஆதி மெய் அறிவு ஆனந்த அவ் வத்து அன்றோ நீ.

உருவ அருவங்களாகிய எல்லாவற்றையும் வேத வாக்கியங்களில் கூறப்பட்டபடி 'நான் இதுவல்ல, நான் இதுவல்ல' என்று அனுபவ பூர்வமாக விலக்கி கடைசியாக விலக்க முடியாமல் மிஞ்சுகின்றதான எதை தனது சுய வடிவாக புகழ்தற்கரிய மகான்களானவர்கள் இதயத்தில் அனுபவிப்பார்களோ, முதற்பொருளும் சச்சிதானந்தமுமாகிற அந்தப் பரம் பொருள் அல்லவா நீ.

2. **உத்தியாங் குத்தி னாலே யுமியெனு மைந்து கோசம்**
**புத்தியாற் பிரித்துப் பின்னர் பொருந்திடு மரிசி போலு**
**மெத்தினைச் சத்துக் கள்கண் டிதயத்தி லனுப விப்ப**
**ரத்தமி னித்த சித்த வவ்வத்து வன்றோ நீதான்.**

சத்துக்கள் உத்தியாம் குத்தினாலே உமி எனும் ஐந்து கோசம் புத்தியால் பிரித்து பின்னர் பொருந்திடும் அரிசி போலும் எத்தினை கண்டு இதயத்தில் அனுபவிப்பர் அத்தம் இல் நித்த சித்த அவ் வத்து அன்றோ நீ.

சத் சொரூபமான சாதுக்கள் (மகான்கள்) யுக்தி யெனப்படும். உலக்கையால் நெல்லின் மேல் காணப்படும் உமி போன்ற பஞ்ச கோசத்தையும், விசார யுக்தியினால் வேறுபடுத்தி அதன்பிறகு உள்ளே இருக்கின்ற அரிசியைப் போல எதை (எந்த ஆன்ம சொரூபத்தைக்) கண்டறிந்து இதயத்தில் அனுபவிப்பார்களோ, என்றும் மறைவில்லாதபடி ஸ்வதஸ்ஸித்தமாக எப்போதும் அடையப்பட்டதுமான அந்தப் பரம்பொருள் அல்லவா நீ.

3. பொறிகளாம் பரிக டம்மைப் புலன்களில் விளங்கும் தோட
வறிவெனுங் கசைய டித்தே யகமுகக் கயிற்றா லீர்த்தவ்
வறிவறி யறிஞ ரெத்தி லணைத்தொன்றாப் பிணித்தி ருப்ப
ரறிபொருட் கதீத மான வவ்வத்து வன்றோ நீதான்.

அவ் அறிவு அறி அறிஞர் தோடப் புலன்களில் விளங்கும் பொறிகளாம் பரிகள் தம் அறிவு எனும் கசையடித்தே அகமுகம் கயிற்றால் ஈர்த்து எத்தில் அணைத்து ஒன்றாய் பிணித்திருப்பர் அறிபொருட்கு அதீதமான அவ்வத்து அன்றோ நீ.

ஆன்மாவை யறிந்த ஞானியர் குற்றம் பொருந்திய சுவை, ஒளி, ஊறு, ஓசை நாற்றம் ஆகிற ஐம்புலன்களில் திரிந்து கொண்டிருக்கும் பஞ்சேந்திரியங்களாகிற குதிரைகளை விசார விருத்தி யென்னும் சவுக்காலடித்து, அந்தர்முகம் – உண்முகம் எனப்படும் கயிற்றால் உள்ளே இழுத்து வந்து எப்பொருளில் சேர்த்து வேறாகாதபடி ஏகமாய் கட்டி நிறுத்தி யிருப்பார்களோ, அறிகின்ற எந்த அறிவிற்கும் கோசரமாகாது, அப்பாற்பட்ட அந்தப் பரம்பொருள் அல்லவா நீ.

4. பூக்களி னின்று வேறாய்ப் பொருந்திடுஞ் சூத்தி ரம்போற்
சாக்கிர மாதி யான சருவத்தும் வேற தான
சாக்கியா நோக்கி யாதைச் சத்துக்க ளகத்த ணைவ
ராக்கமு நீக்க மில்லா வவ்வத்து வன்றோ நீதான்.

சத்துக்கள் பூக்களினின்று வேறாய் பொருந்திடும் சூத்திரம் போல் சாக்கிரம் ஆதியான சருவத்தும் வேறு அது ஆன சாக்கியாய் யாதை நோக்கி அகத்து அணைவர் ஆக்கமும் நீக்கமில்லா அவ்வத்து அன்றோ நீ.

மஹான்கள் மாலையிலுள்ள பூக்களின் வேறாக (தனியாக – பூக்களிடையே இருந்தும் கூட தனியாக) இருக்கின்ற நூலைப் போல. சாக்கிரம் சொப்பனம், சுழுப்தி முதலிய சர்வ அவஸ்தைகளிலும் தனிப்பட்ட சாக்ஷியாக எதைத் கண்டு இதயத்தில் பற்றிக் கொள்வார்களோ, உற்பத்தி நாசமற்ற அந்தப் பரம்பொருள் அல்லவா நீ.

5. கடகமகு டாதி யாவுங் கனகமே யாகு மாபோற்
சடசித்தா முலகம் யாவுஞ் சற்றுமே பின்ன மின்றிச்
சுடருமவ் வடிவா யென்று சொற்றிடும் வேதம் யாதை
யடிநடு முடிவில் லாத வவ்வத்து வன்றோ நீ தான்.

கடக மகுட ஆதி யாவும் கனகமே ஆகுமா போல் சடசித்தாம் உலகம் யாவும் சற்றுமே பின்னம் இன்றி அவ் வடிவாய்ச் சுடரும் என்று வேதம் யாதைச் சொற்றிடும் அடி நடு முடிவு இல்லாத அவ்வத்து அன்றோ நீ.

கடகம் (கையணி), கிரீடம் முதலிய ஆபரணங்கள் எல்லாம் பொன்னே யன்றி அதற்கு அன்னிய மாகாதது போலவே, அறிவில்லாததாகவும் அறிவுள்ளதாகவும் காணப்படும் உலகங்கள் எல்லாம் கொஞ்சம் கூட வித்தியாசமில்லாமல் அப் பரம்பொருள் வடிவமாகவே விளங்குகின்றது என்று வேதம் எதைக் குறிப்பிட்டுச் சொல்லுகின்றதோ, (ஆதி மத்யாந்த ரஹித) முதல், நடு, கடையற்று ஏகமாய் விளங்குகின்ற அந்தப் பரம்பொருள் அல்லவா நீ.

6. **இனனிலித் தனுவில் யானா யிலங்குவ னேக னேயென்**
**றனிசமும் வேத வாதி யாயினோர் முயற்சி யோடு**
**மினிமையா யெடுத்து ரைப்ப ரெத்தத்து வத்தை நன்றா**
**யனர்த்தமி லெதார்த்த மான வவ்வத்து வன்றோ நீதான்.**

வேத ஆதி ஆயினோர் இனனில் இத் தனுவில் ஏகனே யானாய் இலங்குவன் என்று அநிசமும் முயற்சியோடும் இனிமையாய் எத் தத்துவத்தை நன்றாய் எடுத்துரைப்பர் அனர்த்தம் இல் எதார்த்தமான அவ் வத்து அன்றோ நீ.

வேத முதல்வோர் சூரியனிலும் (அண்டத்திலும்) இச் சரீரத்திலும் (பிண்டத்திலும்) ஒருவனே நான் என்று விளங்குகின்றான் என்று எப்போதும் சிரத்தையோடும் ஆனந்தமாக எந்த ஆத்ம தத்துவத்தை நன்றாய் உபதேசிக்கின்றார்களோ, தோஷமற்ற, சத்தியமான அந்தப் பரம்பொருள் அல்லவா நீ.

7. **அருமறை வாக்கி னாலே யகத்தினிற் சிரத்தை யோடு**
**மருந்தவம் யாகந் தானே மாதிநல் லறங்க ளாலே**
**யருமறை யவர்க ளெத்தை யறிந்திட வவாவு கின்றா**
**ரருமறைப் பொருளாய் நின்ற வவ்வத்து வன்றோ நீதான்.**

அருமறையவர்கள் அருமறை வாக்கினாலே அகத்தினில் சிரத்தையோடும் அருந்தவம் யாகம் தானம் ஆதி நல் அறங்களாலே எத்தை அறிந்திட அவாவுகின்றார் அருமறைப் பொருளாய் நின்ற அவ்வத்து அன்றோ நீ.

அரிய வேதங்களை யறிந்தவர்கள் அரியதான அவ் வேதங்களது உபதேசத்தினாலே தமது உள்ளத்தில் எழுகின்ற சிரத்தையுடன் (நம்பிக்கையுடன்) கடினமான தவநெறிகளாலும், யாகங்களாலும் (வேள்விகளாலும்), ஈகை முதலிய நல்ல தர்மங்களாலும் எந்த பிரம்மத்தை அறிந்து கொள்ள விரும்புகின்றார்களோ, அருமையான வேதப் பொருளாக விளங்குகின்ற அப்பரம்பொருள் அல்லவா நீ.

**8. சாந்திமுத லான வுற்றுச் சந்ததந் தன்னாற் றன்னி**
**லாய்ந்தெதை யறிஞர் கண்டவ் வறிவின்ப மெய்யா யென்று**
**மீந்தெலா முடித்தொ ளிர்வர் மிகுபவக் கேத நீத்தே**
**யாழ்ந்தறி தத்வ மான வவ்வத்து வன்றோ நீதான்.**

அறிஞர் சாந்தி முதலான உற்று சந்ததம் தன்னால் தன்னில் ஆய்ந்து எதைக் கண்டு அவ் அறிவு இன்ப மெய்யாய் மீந்து மிகு பவக் கேதம் நீத்து என்றும் எல்லாம் முடித்து ஒளிர்வர் ஆழ்ந்த அறி தத்வமான அவ்வத்து அன்றோ நீ.

விவேகிகள், சாந்தி, தாந்தி, உபரதி, திதிக்ஷை முதலிய ஷட்சம்பத்தியும் பெற்று அதனால் எப்போதும் தனது முயற்சியினால் தன்னிடத்திலேயே ஆத்ம விசாரம் செய்து எதை அனுபூதியில் கண்டுணர்ந்து அந்த சச்சிதானந்தமாகவே மிஞ்சி நின்று, மிகுந்த பிறவிக் கேடுகளை ஒழித்து, முக்காலத்தும் கிருதகிருத்யராய் விளங்குவார்களோ, இதயத்திலாழ்ந்து உணர்தற்குரிய உண்மையான அப்பரம் பொருள் அல்லவா நீ.



நிலைபெறுதாட் டஞ்சமுற்றார் நெஞ்சிலுற்ற பாரம்
தலைவிதிபோல் தன்தலைமேல் தாங்கலுறும் பாதம்.

ஓம்
நமோ பகவேத ஸ்ரீ அருணாசலரமணாய

ஸ்ரீ

# 7. அத்தாமலகம்

(அறுசீர் விருத்தம்)

**1. இங்குறு நீயார் பிள்ளாய் யாருடை மைந்த னீதா**
**னெங்குசெல் கின்றா யுன்பே ரென்னநீ யெங்கி ருந்து**
**மிங்குவந் தனையென் னுள்ள மின்புற விசைப்பா யென்று**
**சங்கர னவிலப் பாலன் சாற்றிட வாய்தி றந்தான்.**

பிள்ளாய் இங்கு உறு நீ யார் நீதான் யாருடை மைந்தன் எங்கு செல்கின்றாய் உன் பெரென்ன நீ எங்கிருந்து இங்கு வந்தனை என் உள்ளம் இன்புற இசைப்பாய் என்று சங்கரன் நவில சாற்றிட பாலன் வாய் திறந்தான்.

"குழந்தையே, இங்கு வந்துள்ள நீ யார்? நீ யாருடைய மகன்? எங்கே போகின்றவன்? உன் பெயர் என்ன? நீ எவ்விடத்திலிருந்து இங்கே வந்து சேர்ந்தாய்? எனது மனம் சந்தோஷமடையுமாறு நீ விடைகூறுவாய்" என்று சங்கர ஜகத்குருவானவர் கூற, விடை கூறுவதற்கு அப்பிள்ளை பேச ஆரம்பித்தான்.

அத்தாமலக னுத்தரம்

**2. நரனலன் சுரனி யக்க னானல னந்த ணன்மற்**
**றரசனும் வணிகன் சூத்ர னல்லனற் பிரம சாரி**
**கிரகியும் வான ப்ரத்தன் கேடகல் சந்நி யாசி**
**நிரையினி லாரு மல்லே னிசபோத வடிவ னாமே.**

நரன் அலன் சுரன் இயக்கன் அலன் அந்தணன், அரசன், வணிகன், சூத்ரன் அலன் நல் பிரமசாரி கிரகியும் வானப்ரத்தன் கேடு அகல் சந்நியாசி நிரையினில் ஆரும் அல்லேன் நிஜபோத வடிவனாமே.

நான் மனிதன் அல்ல, தேவனோ யக்ஷனோ அல்ல, பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்களான நான்கு வருணாதிகளுள் எவ்வருணத்தானுமல்ல, பரிசுத்த பிரம்மசாரி யென்றும், கிருஹஸ்தன் என்றும், வானப்பிரஸ்தன் என்றும், பாபமற்ற சந்நியாசி யென்றும் வகுக்கப்பட்ட ஆசிரம வரிசைக் கிரமங்களுள் நான் யாரும் அல்ல, சத் சித் சொரூபமே நானாகும்.

**3. சூரியன் சகத்தொ ழிற்குச் சொற்றிடு நிமித்த மென்ன
வாருளஞ் சட்சு வாதி யாட்டத்திற் கேது வாவ
னாரெலா வுபாதி யும்விட் டாகாயம் போலி ருப்ப
னோரிய னித்த சித்த வுருவனா மவ்வான் மாநான்.**

சகத் தொழிற்கு நிமித்தம் சூரியன் சொற்றிடும் என்ன உளம் சட்சு ஆதி ஆட்டத்திற்கு ஏது ஆவன் யார் எலா உபாதியும் விட்டு ஆகாயம் போல் இருப்பவன் யார் நித்த சித்த ஓர் இயல் உருவனாம் அவ் ஆன்மா நான்.

உலக விவகாரங்கட்குக் காரணனாக சூரியன் சொல்லப்படுவது போல மனம், கண் முதலியவற்றின் சலனங்கட்குக் (விவகாரங்களுக்கு) காரணனாக இருப்பவன் எவனோ, எவ்வித உபாதிகளுமற்று ஆகாயத்தைப் போல அசங்கனாய் இருப்பவன் எவனோ, எப்போதும் அடையப்பட்ட ஒப்பற்ற சத் சொரூபமான அந்தப் பரமாத்மாவே நானாகும்.

**4. எரியது வெம்மை போல வெவனித்த போத ரூப
னொருவனாய்க் கம்ப மின்றி யொளிர்தரு மெவனைச்சார்ந்தே
யறிவிலாக் கரண மிந்தி யாதிதந் தொழின்மேற் செல்லு
மறிவுரு நித்த சித்த னாயுள வவ்வான் மாநான்.**

எரி அது வெம்மை போல நித்த போதரூபன் எவன் ஒருவனாய் கம்பம் இன்றி ஒளிர்தரும் எவனைச் சார்ந்து அறிவிலா கரணம் இந்தியாதி தம்தொழில் மேல் செல்லும் அறிவு உரு நித்த சித்தனாய் உள அவ்வான்மா நான்.

அக்கினியினின்றும் சூடு அன்னியமாகாதது போலவே சத்தினின்றும் வேறாகாத சித்ரூபியானவன் எவனோ, ஏகனாய் சலனமில்லாமல் பிரகாசிக்கின்ற எவனை அனுசரித்து ஜடமயமான அந்தக் கரணமாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரங்களும், புறக் கரணங்களாகிய பஞ்சேந்திரியங்களும் தத்தமது தொழில்களை மேற்கொண்டு வியவகரிக்கின்றனவோ ஞான நிறைவான அழிவற்ற, பரிசுத்தமாய் உள்ள அந்தப் பரமாத்மாவே நான்.

**5. அத்தத்திற் பதிப லித்த வம்முக முகத்தின் வேறோர்
வத்துவன் றதுபோற் புத்தி வருசிதா பாச சீவன்
சித்துரு வெவன்வே றாகச் சிறிதுமோர் வத்து வாகா
னத்வய நித்த சித்த னாயுள வவ்வான் மாநான்.**

அத்தத்தில் பதிபலித்த அம்முகம் முகத்தின் வேறு ஓர் வத்து அன்று. அது போல் புத்தி வரு சிதாபாச சீவன் சித்துரு எவனின் வேறாக ஓர் வத்து சிறிதும் ஆகான். அத்வய நித்த சித்தனாய் உள அவ் ஆன்மா நான்.

கண்ணாடியில் பிரதிபலிக்கின்ற அந்த (அழகிய) முகத் தோற்றமானது உண்மையான முகத்தைக் காட்டிலும் அன்னியமான ஒரு பொருள் அல்லவன்றோ? அதைப் போலவே புத்தியாகிய கண்ணாடியில் பிரதிபலித்து வருகின்ற சித்தின் ஆபாச வடிவினனான ஜீவன் ஞான சொரூபனான எவனைச் காட்டிலும் அன்னியமான ஒரு பொருளாக கொஞ்சமும் ஆக மாட்டானோ, இரண்டற்ற, எப்போதும் அடையப்பட்ட (சத்சித்தாய் உள்ள) அந்தப் பரமாத்மாவே நான்.

**6. அத்தமே யில்லை யாகி லம்முகா பாச மின்று**
**வத்துவா யுற்ற தேக வதனமே விகற்ப மின்றி**
**புத்தியற் றிடவே யாவன் பொலிவனா பாச மின்றி**
**யத்திற நித்த சித்த னாயுள வவ்வான் மாநான்.**

அத்தமே இல்லையாகில் அம்முக ஆபாசம் இன்று வத்துவாய் உற்றது ஏக வதனமே புத்திவிகற்பம் இன்றி அற்றிட ஆபாசமின்றி யாவன் பொலிவன் அத்திற நித்த சித்தனாய் உள அவ்வான்மா நான்.

கண்ணாடியே இல்லையென்றால் பிரதிபிம்ப முகத் தோற்றம் இல்லாமற் போகும். அதன்பின் உள்ள பொருளாவது உண்மையான ஒரே முகம்தான். (அதுபோல) கண்ணாடியாகின்ற புத்தியானது சங்கற்ப விகற்பமற்று நாசமாகிவிட சிதாபாசனாகிய பிரதிபிம்பமில்லாமல் எவன் (தான் மாத்திரமாக) விளங்குவானோ அத்தகைய சத்சித்தாய் இருக்கிற அந்தப் பரமாத்மாவே நான்.

**7. மனச்சட்சு வாதி யோடு மருவிடா திருப்பன் யாவன்**
**மனச்சட்சு வாதி கட்கு மனச்சட்சு வாதி யாவன்**
**மனச்சட்சு வாதி யாலே மருவிடப் படாதான் யாவ**
**னனித்தமி னித்த சித்த னாயுள வவ்வான் மாநான்.**

மன சட்சு ஆதியோடு மருவிடாது இருப்பன் யாவன் மன சட்சு ஆதிகட்கு ஆதி மன சட்சு யாவன் மன சட்சு ஆதியாலே மருவிடப் படாதான் யாவன் அனித்தமில் நித்த சித்தனாய் உள அவ் ஆன்மா நான்.

மனம் முதலிய அகக் கரணங்களோடும், கண் முதலிய புறக்கரணங்களோடும் சேராமல் அசங்கனாக இருப்பவன் எவனோ, மனம், கண் முதலிய அக, புற கரணங்களையும் அறிகின்ற மூல ஞானக் கண்ணாவோன் எவனோ, அகக்கரண, புறக்கரணங்களால் பற்ற முடியாதபடி உள்ளவன் எவனோ அழிவற்ற சத் சித்தாயிருக்கிற அப் பரமாத்மாவே நான்.

**8. கடஜலந் தோறுந் தோன்றுங் கதிரவ னொருவ னேபோ
லுடலுறு முள்ளந் தோறு மொளிரினு நானா வாகச்
சுடருவ னொருவன் றானே சுத்தசே தனனா யாவ
னடைதலி னித்த சித்த னாயுள வவ்வான் மாநான்.**

கடஜலம் தோறும் தோன்றும் கதிரவன் ஒருவனே போல் உடல் உறும் உள்ளம் தோறும் நானாவாக ஒளிரினும் சுத்த சேதனனாய் ஒருவன்தானே யாவன் சுடருவன் அடைதல் இல் நித்த சித்தனாய் உள அவ் ஆன்மா நான்.

ஒவ்வொரு பாத்திரத்தில் உள்ள நீரில் தனித்தனியே தெரிகின்ற சூரியன் (அநேகனின்றி) ஒருவனே யாவதைப் போல ஒவ்வொரு தேகத்திலும் உள்ள இதயத்திலும் பல்வேறு ஜீவனாகக் காணப்படினும் கேவலம் ஞான மாத்திரனாய் ஏகனாகவே எவன் விளங்குகின்றானோ, நூதனமாய் எப்போதும் அடையப்படுபவன் என்பதில்லாமல், எப்போதும் அடையப்பட்டவனாய் உள்ள அந்தப் பரமாத்மாவே நான்.

**9. ஒளியதா மனேகங் கண்கட் கொருரவி யொருகா லத்தே
யொளிசெயு முலகத் தைப்போ லொருஞான வுருவன்யாவ
னொளியதா யனேகம் புத்திக் கொளிர்ப்பனிவ் வுலகந் தன்னை
யளவிலா நித்த சித்த னாயுள வவ்வான் மாநான்.**

ஒரு காலத்தே அனேகம் கண்கட்கு உலகத்தை ஒளி செயும் ஒளியதாம் ஒரு ரவி போல் அனேகம் புத்திக்கு இவ்வுலகம் தன்னை ஒளியதா ஒரு ஞான உருவன் யாவன் ஒளிர்ப்பனோ அளவிலா நித்த சித்தனாய் உள அவ் ஆன்மா நான்.

ஏக காலத்தில் பற்பல கண்களுக்கும் இவ்வுலகத்தை விளக்கிக் காட்டுகின்ற பிரகாசமான ஒரே சூரியனைப் போல் கணக்கற்ற ஜீவர்களின் புத்திகளுக்கும் இப் பிரபஞ்சத் தோற்றத்தை அறிவாக இருக்கும் ஏக ஞானப்பிரகாச சொரூபமான எவன் விளக்குகின்றானோ. எல்லையற்ற சத்சித்தாயிருக்கிற அந்தப் பரமாத்மாவே நான்.

10. **இரவியா லொளிருங் கண்ணே யெதிருறு முருவம் பற்று
மிரவியா லொளிரா தின்றா மிதுபோலவ் விரவி தானு
மொருவனா ரொளியி னாலே யொளிர்ப்பனோ நேத்தி ராதி
யருவனாய் நித்த சித்த னாயுள வவ்வான் மாநான்.**

இரவியால் ஒளிரும் எதிர் உறும் உருவம் கண் பற்றும் இரவியால் ஒளிராது இன்றாம் இதுபோல ஆர் ஒருவன் ஒளியினாலே இரவிதானும் ஒளிர்ப்பனோ நேத்திராதி அருவனாய் நித்த சித்தனாய் உள அவ் ஆன்மா நான்.

சூரியப் பிரகாசத்தால் விளங்கும் போதுதான் முன்னிலையிலுள்ள பொருளின் உருவைக் கண் காணும். (அவைகள்) சூரிய ஒளியால் விளங்கப் படா விட்டால் கண்ணால் காண முடியாது. அதுபோல எவனொருவன் தனது ஞானப்பிரகாசத்தால் சூரியனையும் விளங்க வைக்கிறானோ கண் முதலியவற்றிற்குக் கோசரமாகாத (உருவற்றவனாகிய) சத்சித்தா யிருக்கிற அப்பரமாத்மாவே நான்.

11. **சலஜலத் தனேகன் போலச் சாருவ னேக பானு
சலனமில் ஜலத்திற் றானே சாருவ னேக னாக
சலமதி யனேகன் போலச் சாரினு மேகன் யாவ
னலைதலி னித்த சித்த னாயுள வவ்வான் மாநான்.**

ஏக பானு சலஜலத்து அனேகள் போலச் சாருவன், சலனமில் ஜலத்தில் தானே ஏகனாச் சாருவன், சலமதி அனேகன் போலச் சாரினும் யாவன் ஏகன் அலைதல் இல் நித்த சித்தனாய் உள அவ்வான்மா நான்.

ஒருவனே யாகிய சூரியன் அலைகின்ற நீரில் பல சூரியர்களைப்போலக் காணப்படுவான். அலைவற்ற நீரில் அச் சூரியனே ஒருவனாகவே காணப்படுவான். (அதுபோல) அலைகின்ற மனோ விருத்தியால் பல ஜீவர்களாகக் காணப்பட்டாலும் எவன் ஒருவனே யாவனோ, அலைவற்ற சத் சித்தாய் இருக்கிற அந்தப் பரமாத்மாவே நான்.

12. **மூடன்றன் விழியி னைக்கார் மூடிட வதால ருக்கன்
மூடுபட் டொளியற் றானா முன்னுதல் போல யாவன்
மூடனின் பார்வை யாலே முற்றுமே பெத்தன் போல்வ
னாடலி னித்த சித்த னாயுள வவ்வான் மாநான்.**

தன் விழியினை கார் மூடிட அதால் அருக்கன் மூடுபட்டு ஒளி அற்றான் மூடன் முன்னுதல் போல் மூடனின் பார்வையாலே

முற்றுமே பெத்தன் போல்வன் யாவன் நாடல் இல் ஆடல் இல் நித்த சித்தனாய் உள அவ் ஆன்மா நான்.

தன் பார்வையை மேகம் வந்து மறைக்கவே, அதனால் சூரியன் மூடப்பட்டு தனது ஒளியை இழந்து விட்டான் என்று அறிவில்லாதவன் நினைப்பதைப் போல அஞ்ஞானியின் பார்வையால் முழுவதுமே பந்தப்பட்ட ஜீவர்களாகக் காணப்படுபவன் எவனோ, எதையும் அபேக்ஷிக்காத, அசைவற்ற, சத்சித்தாயிருக்கிற அந்தப் பரமாத்மாவே நான்.

**13. அகிலவத் துக்க டம்மி லனுகூத னேக னாகி**
**யகிலவத் துக்க டம்மி லசங்கனா யிருப்பன் யாவன்**
**ககனநேர் நித்த சுத்த களங்கமி லுருவன் யாவ**
**னகமிலா நித்த சித்த னாயுள வவ்வான் மாநான்**

அகில வத்துக்கள் தம்மில் அனுகூதன் ஏகனாகி அகில வத்துக்கள் தம்மில் அசங்கனாய் இருப்பன் யாவன் ககனம் நேர் நித்த சுத்த களங்கமில் உருவன் யாவன் அகமிலா நித்த சித்தனாய் உள அவ் ஆன்மா நான்.

எல்லாப் பொருள்களிலும் கலந்துள்ள ஒருவனாய், எப்பொருளிலும் சம்பந்தமற்றவனாய் இருக்கிறவன் எவனோ, ஆகாயத்தைப் போல எப்போதும் பரிசுத்தமாய் குற்றமற்ற சொரூபமுடையவன் எவனோ, அகந்தையற்ற சத்சித்தாயிருக்கிற அந்தப் பரமாத்மாவே நான்.

**14. பலவித வுபாதி யாலே பலவிதம் படிகந் தோன்றும்**
**பலவித புத்தி யாலே பலவித முனக்கு மாகுஞ்**
**சலமதி னிலவி னாட்டஞ் சான்றாகப் பூன்ற னேயச்**
**சலமுறு புத்தி யாலே சஞ்சல நினக்கு மாமே.**

படிகம் பலவித உபாதியாலே பலவிதம் தோன்றும் உனக்கும் பலவித புத்தியாலே பலவிதம் ஆகும் சலமதில் நிலவின் ஆட்டம் சான்றாக பூன்றனே அச் சலமுறு புத்தியாலே நினக்கும் சஞ்சலம் ஆகும்.

பளிங்கானது (தன்னை அடுத்துள்ள வஸ்துக்களில்) பலவித நிறங்களாகிய உபாதியினால் தாமும் பலவித நிறமுடையது போல் காணப்படும். (அது போலவே) பளிங்கு போன்ற ஜீவான்மாவான உன்னிடமும் ஒரே தன்மை யில்லாது, சஞ்சலமடையும் புத்தியினாலே, பலவித சுகதுக்கங்கள் தோன்றும், நீரில் சந்திரனின் அலைவைப் போல பரிபூரணமானவனாக நீ இருந்தும் அந்த சலனமுள்ள புத்தியின் தோஷத்தினாலே உனக்கும் சுக துக்கானுபவங்கள் உண்டாகின்றன.

15. அத்தத்தி னெல்லி போல வான்மாவைக் காட்ட லாலீ
தத்தா மலகத் தோத்ர மாகும்பேர் பெற்ற தன்றி
யத்தா மலக னென்றவ் வறிவினிற் பெரிய பால
னித்தரை யாவ ராலு மேத்திடப் பட்டா னம்மா.

அத்தத்தின் நெல்லி போல ஆன்மாவைக் காட்டலால் ஈது அத்தாமலகத் தோத்ரம் ஆகும் பேர் பெற்றது அன்றி அவ் அறிவினில் பெரிய பாலன் அத்தாமலகன் என்று இத்தரை யாவராலும் ஏத்திடப் பட்டான்.

உள்ளங்கை நெல்லிக் கனி போல ஆத்ம தத்துவத்தை விளக்கிக் காட்டுவதால் இது அத்தாமலகத் தோத்திரம் என்னும் பெயரைப் பெற்றது. அன்றியும் அந்த ஞான சிரேஷ்டனான குழந்தையும் அத்தாமலகன் என்ற பெயராலே இவ்வுலகினுள்ள அனைவராலும் புகழப்பட்டான்.



மிகமிகமற் றெல்லா விளக்கங் களிலும்
அகமகமென் றேநன் கவிர்சொருபப் பாதம்.

ஸ்ரீ ரமணார்ப்பணமஸ்து

### இந் நூலாசிரிய ரருளிய இதர நூல்கள்

1. ஸ்ரீ ரமண வழி - முதற் பாகம்
2. ஸ்ரீ ரமண வழி - இரண்டாம் பாகம்
3. ஸ்ரீ ரமண வழி - மூன்றாம் பாகம்
4. ஸ்ரீ ரமண வழி - நான்காம் பாகம்
5. ஸ்ரீ ரமணோபதேச நூன்மாலை
6. உபதேச வுந்தியார் - விளக்கவுரை
7. ஸ்ரீ ரமண ஸஹஸ்ரம் - உரையுடன்
8. குரு வாசகக் கோவை - உரை
9. ஸ்ரீ ரமண கீதம்
10. ஸ்ரீ ரமண வர்ணங்கள்
11. ஸ்ரீ அருணாசல வெண்பா - உரையுடன்
12. ஸ்ரீ அருணாசல ஸ்துதி பஞ்சகம் - உரையுடன்
13. ஸ்ரீ அருணாசல ஸ்துதி பஞ்சகம் - விளக்கவுரையுடன் (முதற் பாகம்)
14. ஸ்ரீ ரமண பிரார்த்தனை அமுதம் - உரையுடன்
15. ஸ்ரீ ரமணாக்ஷர மலர் மாலை
16. ஸ்ரீ ரமண் விரிவுப் பாமாலை - உரையுடன்
17. ஸ்ரீ ரமண வருகை - உரையுடன்

இந்நூல்கள் கிடைக்குமிடம்:-

**ஸ்ரீ அருணாசல ரமண நிலையம்**
11 - B, மணக்குள விநாயகர் தெரு,
ஸ்ரீ ரமண நகர், திருவண்ணாமலை,
606 603, தமிழ்நாடு.
e-mail: sadhuom @ vsnl.com